உ

சிவமயம்

# ஆனைமுகத்து அண்ணல்

832



உள்ளம் ஒன்றி நிற்க உருவம் வேண்டும்.
மனம் ஒன்றைப் பற்றி நின்றே உயரும்.
மனோதத்துவத்தை நன்றாக உணர்ந்த
இந்தியப் பெருமக்கள்,
அறிவு உருவத்தையுடைய இறைவன்,
நம்முடைய பக்குவ நிலைகட்கு ஏற்ப
உருவம் கொண்டு தாமே எழுந்தருளினாலன்றி,
உள்ளம் ஒருமைப்படாது என்று
இறைவனை வேண்டிக் கொண்டார்கள்.
இறைவன் அவர்களுடைய பரிபாக
நிலைகளுக்கு ஏற்ப
உருவத் திருமேனி தாங்கி எழுந்தருளினார்.
அதனை முனிவர்கள்
தியான சுலோகங்களாகத் திரட்டித் தந்தனர்.

*- மகா வித்வான் ச. தண்டபாணி தேசிகர்*

உ
சிவமயம்
ஓம் கம் கணபதயே நம:

# ஆனைமுகத்து அண்ணல்

வெளியீட்டு நாள் : மே 24, 2009

கணினி வடிவமைப்பு : திரு. இரமேஷ் காரைக்கிழார்
**TEL : 012-666 2148**

அச்சிடல் : கவிஞர் காரைக்கிழார்
**PERCETAKAN KM**
8-1, JALAN METROVIEW,
WANGSA MAJU SEC. 2,
53300 SETAPAK,
KUALA LUMPUR.
**TEL : 012-660 2204**

விலை : மலேசிய ரிங்கிட் 15 மட்டும்
விற்பனை வழி கிடைக்கும் முழுத்தொகையும்
திருக்கோயில்களுக்கும், அறநிறுவனங்களுக்குமே வழங்கப்பெறும்.

வெளியீடு : **சுப அண்ணாமலை,**
30, ஜாலான் SS1/41,
கம்போங் துங்கு,
47300 பெட்டாலிங் ஜயா,
சிலாங்கூர்.

அட்டைப்படம் : **ஸ்ரீ சங்கடஹர கணபதி**
ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம், சேலம்

நன்றி : RARE & DIVINE / V. Ramachandran




**ஓம்எனும் பொருளாய் உள்ளோய் போற்றி**
**பூமனும் பொருள்தொறும் பொலிவாய் போற்றி**

கோர்ட்டுமலைக் கணேசர் - ஆதிமூர்த்தி

<u>ஶ்ரீ கணபதி யந்திரம்</u>




நன்றி : தெய்வத் திருமேனிகளின் தியானம், யந்திரம், மந்திரம்



உ
சிவமயம்
ஓம் கம் கணபதயே நம:

# இங்குற்றேன் என்-கண்டாயே

(இங்குள்ளேன் என்று கூறி அருள்வாயாக!)

## (பொருளடக்கம்)



## அருளமுதம்

**பு**ராணங்களில் சொல்லி இருக்கும் கதைகள் நேரே நடந்தனவா அல்லது கட்டுக்கதைகளா என்று பலர் விவாதம் செய்கிறார்கள். இந்த விசாரம் அநாவசியமானது. எது எப்படி இருந் தாலும் நமக்குப் பரவாயில்லை. அந்தக் கதைகளி லிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் என்ன, நம்முடைய தர்மம் என்ன என்ற விஷயங்களை, நம்முடைய வாழ்க்கையில் நாம் பின்பற்ற வேண்டிய வழிகள் என்ன என்ற விஷயங்களை அவற்றிலிருந்து தெரிந்து கொண்டு அதன்படி நாம் நடந்து கடைத்தேற வேண்டுமே யன்றி, வீண் சர்ச்சைகளில் நம்முடைய காலத்தைச் செலவழிக்கக் கூடாது. அப்படி சர்ச்சைகள் செய்வதால் நமக்கு ஒருவித பிரயோஜனமும் ஏற்படப் போவதில்லை. ஆகையால் உபநிஷத்து களும், புராணக் கதைகளும் நமக்குப் போதிக்கும் உண்மைகளைத் தெரிந்து கொண்டு அவற்றைக் கடைப்பிடித்து நாம் அனைவரும் முன்னேற்றம் அடைவோமாக!

*- காஞ்சி முனிவர் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்*



ஸ்ரீ கைலாச விநாயகர்

(இளையாற்றங்குடி)



உ
சிவமயம்

# கணபதியைக் கைதொழுவோம்!



**(பதிப்புரை)**

திருச்சிற்றம்பலம்

**வேழ முகத்து விநாயக னைத்-தொழ**
**வாழ்வு மிகுத்து வரும்,**
**வெள்ளைக் கொம்பன் விநாயக னைத்-தொழத்**
**துள்ளி ஓடும் தொடர்ந்த வினைகளே.**

*- வேழமுகம்*

விநாயகப் பெருமானைப் பற்றிய சில குறிப்புகளையும், வழிபாட்டுக்குரிய சில சுலோகங்கள்-பாடல்களையும் உள்ளடக்கி இந்நூல் வெளிவருகிறது.

**பாட்டின் பொருளை உணர்ந்து படிப்பதே பயன் தரும்** என்பது மணிவாசகர் வாக்கு. அதற்கேற்ப இதில் இடம்பெற்றுள்ள பாடல்களுக்குச் சில நூல்களிலிருந்து பொழிப்புரைகள்-அரும்பதவுரைகள் தொகுக்கப்பெற்றுள்ளன. தமிழ் படிக்கத் தெரியாத இளந்தலைமுறையினருக்கு உதவியாகப் பாடல்கள்-சுலோகங்கள் அனைத்தும் ஆங்கில எழுத்து வடிவிலும் (Transliteration) அமைத்துத் தரப்பெற்றுள்ளன.

திருமுறைத் தலங்களில் வீற்றிருக்கும் விநாயக மூர்த்தங்களுக்குரிய 108 திருப்பெயர்கள் போற்றித் தொடர்களாக அமைக்கப்பெற்று இடம் பெறுகின்றன.

108 நாமங்களைக் கூற இயலாத நேரத்தில் விநாயகரின் 16 திருப்பெயர்களை (ஷோடச நாமங்களை)க் கூறி அருச்சனையை நிறைவு செய்ய வேண்டும் என்று காஞ்சிப் பெரியவர் கூறுவதற்கேற்ப, அவையும் (சமஸ்கிருதத்தில்) இடம் பெறுகின்றன.

ஆதிசங்கரரின் **கணேச பஞ்சரத்தினம்**, ஔவை மூதாட்டியின் **விநாயகர் அகவல்**, விநாயக புராணத்தில் உள்ள **விநாயகர் கவசம்**, **தோத்திராட்டகம்** (காரியசித்திமாலை) ஆகியவையும் தொகுக்கப்பெற்றுள்ளன.

சுலோகங்கள் - பாடல்களை உச்சரிப்புப் பிழை இல்லாமல் முறையாகப் பாராயணம் செய்வதற்கு வாய்ப்பாக, அவை அனைத்தும், வடமொழி விற்பன்னர்கள், ஓதுவாமூர்த்திகளின் உதவியோடு குறுந்தட்டில் பதிவு செய்யப்பெற்று, அக்குறுந்தட்டும் (MP3) இந்நூலுடன் இணைக்கப்பெற்றுள்து.

எளியேனின் எண்பதாவது ஆண்டு நிறைவை ஒட்டி வெளியிடப்பெறும் இந்நூல் வெளிவரத் துணைபுரிந்த நல்லுள்ளம் படைத்த எல்லாப் பெருமக்களுக்கும் எங்கள் குடும்பத்தாரின் மனமார்ந்த நன்றி உரியது. அனைவரும் **தாழாத கீர்த்தியும்**, **தொலையாத நிதியமும்**, ஒரு

துன்பம் இல்லாத வாழ்வும் பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டு வாழக் கோர்ட்டுமலைக் கணேசர் திருவருள் பாலிப்பாராக!

சைவ அன்பர்கள் நூலினை வாங்கிப் படித்து - பாராயணம் செய்து விநாயகப் பெருமானை வழிபட்டு வளம் பல பெறுவார்களாக.

**பேரன்பின் பிறப்பிடமான**
**என் பெற்றோருக்கு**
**இந்நூல் காணிக்கை**

பெட்டாலிங் ஜயா
மே 24, 2009

அன்புடன்,
**சுப அண்ணாமலை**

தன்னைத் தவிர வேறொன்று இல்லாததும்,
தானே எல்லா உயிர்களுமாய் இருப்பதும்,
ஒரே சீரான தன்மையுள்ளதுமான பரம்பொருளைக்
குருவின் உதவியோடும்,
மெய்ந்நூல்களைக் கற்று உணர்ந்தும்
பண்பட்ட மனத்தினால் அறிய வேண்டும்.
அப்படி அறியும்போது,
அறியாமையால் விளைந்த வேற்றுமைகள் யாவும்
அழிந்து போகின்றன.
அதற்கு மாறாகத்
தன் அறியாமையை அகற்றிக் கொள்ளாத ஒருவன்
பிறவிச் சுழலில் சிக்கித் தவிக்கிறான்.

*- ஸ்ரீ சங்கரர்*

உ
சிவமயம்



# கற்பகமூர்த்தியின் கருணாகடாட்சம்

காரைக்குடி

## வித்வான் சொ. அழகப்ப செட்டியார் அவர்கள்

வழங்கிய

## அணிந்துரை

ஓங்கார ரூபியான விநாயகர் ஓமிலிருந்தே தோன்றியவர். சமஷ்டிப் பிரணவமும் வியாஷ்டிப் பிரணவமும் ஒன்று கூடியபோது பார்வதி-பரமேஸ்வரரின் திருநோக்கால் உருவானவர் விநாயகர். எனவே விநாயகர் வழிபாடு அனாதியானது என்பதில் ஐயமில்லை. மேலும் சிவபெருமான் அரக்கனை அழிக்கச் சென்றபோது விநாயகரை நினையாது சென்றதால், அவர் சென்ற தேரின் அச்சு முறிந்தது என்ற புராண வரலாறும், முருகப் பெருமான் வள்ளி நாச்சியாரை மணக்க விநாயகப் பெருமான் உதவினார் என்ற கந்தபுராண வரலாறும் இதை உறுதி செய்கின்றன.

விநாயகர் வழிபாடு சங்க இலக்கியங்களிலும் பழந்தமிழ் நூல்களிலும் காணப்படவில்லை என்றும், முருகன் வழிபாடே பேசப்பட்டிருக்கிறது என்றும், ஆகவே பண்டைத் தமிழகத்தில் முருக வழிபாடு சிறந்து விளங்கியது; விநாயகர் வழிபாடு அவ்வாறில்லை என்றும் புலவர் பெருமக்கள் கூறுகின்றனர்.

**லெமூரியா** என்ற பண்டைத் தமிழகம் கடலால் கொள்ளப்பட்டபோது, ஏராளமான சுவடிகள் மறைந்தன. அவற்றில் விநாயக வழிபாடு பேசப்பட்டிருக்கலாம். மேலும், தமிழகம் சுமார் மூன்று நூற்றாண்டுகள் **களப்பிரர்** என்பார் கையில் சிக்கித் தவித்தது; அதைத் **தமிழகத்தின் இருண்ட காலம்** எனத் தமிழ் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அக்காலத்தில் விநாயக வழிபாடு பற்றிய செய்திகளும் மறைந்திருக்கலாம் என்பது பலரின் கருத்து.

பன்னெடுங்காலமாக நாம் செய்யும் காரியங்களை விநாயகரை முன்னிட்டே செய்து வருவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறோம். விக்கினங்களைப் போக்குவார் விநாயகர் என்ற நம்பிக்கையே இதற்குக் காரணம். விநாயகர் ஆறு, குளம் இவற்றின் கரைகளிலும், சந்திகளிலும் காட்சி கொடுப்பார். எந்த உருவிலும் தெரிசனம் தருவார். சாணத்தைப் பிடித்து வைத்து அறுகம்புல்லைச் சொருகி வழிபட்டால் ஆனந்தமாகக் காட்சி கொடுப்பார். அவ்வளவு எளிமையானவர். அவர் விரும்புவது பக்தர்களின் அன்பு உள்ளங்களே. செல்வர், வறியவர், அறிஞர், பிறர் யார் வேண்டினும், எவ்விடத்திலிருந்து வேண்டினும், அவர்களுக்கு அருள் பாலிப்பதற்கே, அகன்ற செவிகளைக் கொண்டிருக்கிறார். இவ்வளவு எளிமையாக வேறு எந்த தெய்வத்தையும் வழிபட இயலாது.

இவ்வாறு நம் நித்திய வாழ்வில் போற்றி வணங்கும் விநாயகரைப் பற்றிய செய்திகளை எல்லாம் ஒருங்கு திரட்டி நமக்கு ஓர் அரிய நூலைப் படைத்திருக்கிறார் நூல் தொகுப்பாளர்.

வேதகாலம் தொடங்கி அண்மைக் காலம் வரையில் உள்ள நூல்களிலிருந்து ரிஷி புங்கவர்களும், அறிஞர் பெருமக்களும், பக்த சிரோன்மணிகளும் இயற்றிய சாத்திர, தோத்திரப் பாடல்களை இதில் காணலாம்.

வடமொழி சுலோகங்களுக்கும், தமிழ்மொழி அருளிப்பாடுகளுக்கும் சிறந்த விளக்கங்கள் எல்லோரும் அறிந்து கொள்ளும் வகையில் இதில் தரப்பட்டிருக்கின்றன. ஆங்கில விளக்க உரைகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

காலத்திற்கேற்ப சிறிதளவே தமிழ் அறிந்து, ஆங்கில அறிவு மிகுந்தவர்களும், பிற மொழியாளரும் புரிந்து கொள்ளுவதற்கு உதவ, ஆங்கிலமொழி எழுத்துக்களிலே பாடல்களைத் தந்திருப்பது போற்றற்குரியது.

விநாயகருடைய பல திருவுருவங்கள் இதில் விளக்கம் பெற்றிருக்கின்றன. அவரது ஆயுதங்கள் சித்தரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

விநாயகரைப் பற்றி அறிந்துகொள்ள நாம் வேறு எந்த நூலையும் தேடிப் போக வேண்டியதில்லை. இந்த நூல் ஒன்றே போதும். இஃது விநாயகர் பற்றிய ஓர் குறுங்கலைக் களஞ்சியமாகும் (Mini Encyclopedia) என்றே சொல்லலாம். விநாயக பக்தர்களும், தமிழ் அன்பர்களும் இந்நூலை வாங்கி, கற்று, தெளிந்து விநாயகப் பெருமானின் அருள் பெறுவார்களாக.

அடியேனை இந்நூலுக்கு அணிந்துரை வழங்கச் செய்திருப்பது, அடியேனிடத்துத் தொகுப்பாளர் கொண்டிருக்கும் அன்பின் வெளிப்பாடேயாகும். அடியேனுடைய தகுதியால் அன்று. இதனைக் கூட்டி வைத்திருப்பது அருள்மிகு கற்பக மூர்த்தியின் திருவருளேயாகும்.

பணமும், நல்ல மனமும் படைத்த பண்பாளர்களைப் பார்ப்பது அருகிவரும் இந்நாளில், அறப்பணிச் செல்வர் திரு. **அண்ணாமலை சுப** அவர்கள், தம் தந்தையாரைப் போன்று இந்தத் தெய்வத் திருப்பணிக்குப் பெருநிதி வழங்கியிருப்பது போற்றுதற்குரியது.

இந்நூலின் தொகுப்பாளருக்கும், நூலினை அச்சிட்டுக் குறைந்த விலையில் வழங்குவதற்கு வாய்ப்பாக நிதி வழங்கிய அன்பருக்கும், அடியேனுடைய மன, மொழி, மெய்களால் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முற்பவத்தில் யான்புரிந்த தீவினைகள்
முழு(து)அகற்றும் முகத்தி னானை
அற்பசுகத்(து) எனைஅழுத்தா ஐங்கரனைப்
பிற்பவமும் அகற்றும் கோவைச்
சொற்பழுது புரியாத வணிகர்குலம்
தினம்பணியும் துணைத்தா ளானைக்
கற்பகத்தின் மிடிஅகற்றும் கற்பகமாம்
விநாயகனைக் கருத்துள் வைப்பாம்.

*- கோவிலூர் ஆண்டவர்*

காரைக்குடி,
தமிழகம்.

அன்புடன்,
**சொ. அழகப்ப செட்டியார்**

832



உ
சிவமயம்
ஓம் கம் கணபதயே நம:

# நெஞ்சினால் நினைந்தும், வாயினால் மொழிந்தும் பெரியீர்! உம் திருவடி தொழுவேன்

கோர்ட்டுமலைக் கணேசரின் அருளாலும் ஆசியாலும், இதயதெய்வத்தின் வழிகாட்டலோடும் உருவான இச்சிறிய - எளிய நூல், குறைந்த விலையில் உங்கள் கரங்களில் தவழ்வதற்குப் பெருநிதி வழங்கிய பெருமகனாருக்கும், நூல்கள் - படங்களை நல்கியும், மூலப்படியைப் படித்துப் பார்த்துத் திருத்திக் கொடுத்தும், அரிய ஆலோசனைகளைக் கூறியும், அணிந்துரை வழங்கியும், குறுந்தட்டுப் பதிவுக்குக் குரல்கள் வழங்கியும் உற்றுழி உதவிய அன்பர் அனைவருக்கும் தொகுப்பாளன் தன் இதயபூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறான். அகர வரிசையில் அமைந்த அவ்வன்பர் அனைவரின் திருப்பாதங்களையும் கண்ணீரால் கழுவி மனமெனும் மலர் தூவிப் போற்றி வாழ்த்தி வணங்குகின்றான்.

அண்ணாமலை, சுப<br>
அமிர்தா கணேசன், டாக்டர், சித்தாந்த ஆர்வலர்<br>
அழகப்ப செட்டியார், சொ. வித்துவான் (காரைக்குடி)<br>
இக்குவனம், வி. வெண்பாக் கவிஞர் (சிங்கப்பூர்)<br>
இராமச்சந்திரன், வி. புவனேஸ்வரி தாசர்<br>
கந்தசாமி<br>
காயத்ரி ஆறுமுகம்<br>
காரைக்கிழார், கவிஞர்<br>
சிங்காரவேலு, ச. டாக்டர், பேராசிரியர்<br>
சுவாமிநாதக் குருக்கள், வை. சிவஸ்ரீ<br>
சுவாமிநாதன், என். திருத்தணி திருமுறைக் கலாநிதி<br>
சேது, பெரி (மதுரை)<br>
திண்ணப்பன், சுப. டாக்டர் (சிங்கப்பூர்)<br>
திருஞானசம்பந்த தேசிகர், ஓதுவாமூர்த்தி (திருப்பரங்குன்றம்)<br>
தெய்வராயன், மெ. செந்திலாண்டவன் அடிமை<br>
ரமேஷ் காரைக்கிழார்<br>
ராஜா சிவம், எஸ் (புதுக்கோட்டை)<br>
ஸ்ரீராம், ஆர்.

*-நூல் தொகுப்பாளன்*

## பிழைத்தல் பொறுத்தல் பெருமை

*(பிறர் செய்யும் பிழைகளைப் பொறுத்துக் கொள்வது சான்றோருக்குப் பெருமை தருவதாகும் - சிறுபஞ்சமூலம்)*



ஆன்மிகவாதிகள் - ஆன்றோர் - சான்றோர் பலரின் நூல்கள் - கட்டுரைகள் - மலர்களிலிருந்து திரட்டப்பெற்ற கருத்துகள், தகவல்கள், படங்களே இந்நூல் உருவாக அடித்தளம் அமைத்துக் கொடுத்தன. அனைவருக்கும் தொகுப்பாளன் தன் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறான். இருப்பினும் சில நூல்கள், அறிஞர்களின் பெயர்கள் மட்டுமே இந்நூலில் ஆங்காங்கு குறிப்பிடப் பெற்றுள்ளன. வியாபார நோக்கமின்றி, ஆன்மிகத் தகவல்கள் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்னும் ஒரே நோக்கத்தில் இந்நூல் வெளியிடப் பெறுவதால், அறிஞர் பெருமக்களும், நூல் வெளியீட்டாளர்களும் தங்கள் பெயர்கள் குறிப்பிடப்பெறவில்லை, தங்களிடம் அனுமதி பெறப்படவில்லை என்று சீற்றமடையாமல் பொறுத்தருள்வர் என்று தொகுப்பாளன் பெரிதும் நம்புகிறான்.

நன்றி, வணக்கம்.

உ
சிவமயம்
ஓம் கம் கணபதயே நம:

# ஆனைமுகத்து அண்ணல்

திருச்சிற்றம்பலம்

**எண்ணிய எண்ணியாங்கு எய்துப, கண்ணுதல் பவள மால்வரை பயந்த கவள யானையின் கழல்-பணி வோரே.**

## செய்கருமம் கைகூட்டும்

*(மேற்கொள்ளும் செயல்கள் வெற்றிபெறும்)*

"எப்படிப்பட்டவராயினும், ஏதேனும் ஒரு செயலைத் தொடங்குமுன் விநாயகர் பாதம் பணிந்து அச்செயலைத் தொடங்கினால், அவர் எண்ணம் போல் அச்செயலைக் கணேசர் முடித்துக் கொடுப்பார்" என்று சிவபெருமானே அருளியிருப்பதாகக் **கந்தபுராணம்** பேசுகிறது.

**பழங்கால இந்தியப் போர்முறை** என்னும் ஆங்கில நூல், 'வெற்றிக்கு அடையாளமான தெய்வம்' என்று விநாயகரைக் குறிப்பிடுகிறது. 'சமயப்பற்று உடைய எவரும், எந்தவொரு செயலைத் தொடங்கும்போதும், வெற்றிக்காகவும், இடையூறு ஏற்படாதிருக்கவும், அவருக்கு வழிபாடு செய்வது வழக்கம்' என்று அந்நூலில் (War in ancient India) மேலும் கூறப்பெறுகிறது. (மேற்கோள்: *கணபதி*)

பேராசிரியர் ஸ்டுட்டர்ஹைம் (Prof. Stutterheim), பேரா. ஆல்ஃபிரெட் ஃபௌஷர் (Prof. Alfred Foucher) ஆகியோரும், விபத்துகளிலிருந்து விநாயகர் காப்பார் என்னும் நம்பிக்கை தமிழர்களிடையே நிலவி வருவதைக் குறிப்பிடுகின்றனர்.
Shri Vinaayaka Himself remains invariably the creator as well as the destroyer of obstacles along the paths in the realm of the jungle as in the no less intricate world of thought. (தகவல்: பேராசிரியர் டாக்டர் ச. சிங்காரவேலு, கட்டுரை, *ஸ்ரீலயன் சித்தி விநாயகர் கோயில் குடமுழுக்கு விழா மலர்*)

வெற்றிக் கடவுளான இந்த விநாயகருக்கும் சிவபரம்பொருளுக்கும் எந்த வேறுபாடும் இல்லை என்று பல புராணங்கள் வலியுறுத்திய போதிலும்*, கணபதி வழிபாடு குறித்துக் கருத்து

---

அடிக்குறிப்பு:

*** தனயன் மீதான சாபம் தன்னையே சாரும்**

ஆலவாய் அண்ணல் (சொக்கநாதர்), ஒருமுறை நால்வேதத்தின் உட்பொருளை, உலக அன்னையான மீனாட்சிக்கு உபதேசிக்க முயன்றாராம். பெண்களுக்கே உரிய அசட்டை போலும்! அந்தத் தத்துவ உபதேசத்தைக் கேட்காது அன்னை அலட்சியமாக இருந்துவிடுகிறாள். அதைக் கண்டு கோபமுற்ற ஆலவாய் அண்ணல், அவளைப் பரதவர் (மீன் வலைஞர்) குலத்தில் பிறக்குமாறு சபிக்கிறார். அன்னைக்கு ஏற்பட்ட அவலத்தைக் கண்டு ஆற்றாத ஆனைமுகனும், ஆறுமுகனும், சிவபெருமான் கையிலிருந்த ஓலைச்சுவடிகளால்தானே இந்த அவலம் ஏற்பட்டது என்று நினைத்து, அவற்றைப் பிடுங்கிக் கடலில் எறிந்து விடுகின்றனர். அண்ணலுக்குக் கோபம் அதிகரிக்கிறது. அண்ணன் - தம்பியரை உள்ளே அனுமதித்த குற்றத்திற்காக, நந்திகேசுவரரைச் சுறா மீனாகப் பிறக்குமாறு

வேறுபாடுகள் நிலவவே செய்கின்றன.

## வேத விநாயகர்

"ரிக் வேதத்தின் மூன்றாம் மண்டலத்தில்

**கணா நாம் த்வா கணபதிம் அவாமஹே**
**கவிம் கவினாம் உபமச்ர வஸ்தமம்**
**ஜ்யேஷ்டராஜம் பிரும்மணாம் பிரும்மணஸ்பதே**
**ஆனச்ருண்வன் ஊதிபி: ஸீத சாதனம்**

என அமைந்த 23ஆம் செய்யுளில் (2:23:1) கணபதியைப் பற்றிய குறிப்புக் காணப் பெறுகிறது. அதில் கண = கணபதி, கவி, ஜ்யேஷ்ட, பிராம்மணஸ் பதி என வரும் சொற்கள் விநாயகரைக் குறிப்பனவாகக் கொள்ளலாம்" என்கிறார், மேனாள் *திருக்கோயில்* மாத இதழின் ஆசிரியர் திரு. ந.ரா.முருகவேள்.

அந்த சுலோகத்தின் தமிழ், ஆங்கில மொழிபெயர்ப்புகள் வருமாறு:
"பிரம்மணஸ்பதியே! (*பிரகஸ்பதி என்றும் அழைக்கப்பெறும் இவர், மந்திரங்களின் உத்தமத் தலைவராகப் போற்றப்படுகிறார்; பிற்காலத்தில் தோன்றிய தேவதை* என்று, இப்பதத்திற்கு அடிக்குறிப்பு விளக்கம் தருகிறது.) நாங்கள், கணங்களின் கணபதியும், கணத்தலைவனும், கவிகளின் கவியும், ஈடற்ற புகழ் உள்ளவனும், முதல்வர்களின் நடுவே பிரகாசிப்பவனும், மந்திரங்களின் உத்தமத் தலைவனுமான உன்னை அழைக்கிறோம். அங்கனுடைய (*புதல்வனுடைய*) அழைப்புகளைக் கேட்டு உன்னுடைய பாலனங்களோடு (*பாதுகாப்போடு*) வரவும். வேள்வி ஸ்தானத்திலே அமரவும்."
"we call thee, Lord and Leader of the heavenly hosts, the wise among the wise, the famous of all, The King supreme of prayers, O Brahmanaspati! hear us with help; sit down in place of sacrifice."

பத்தாம் மண்டலத்தின் 112ஆவது செய்யுளிலும் (10:112:9) *visu sida ganapate* என்று, கணபதி தொடர்பான குறிப்புக் காணப்பெறுகிறது. அந்தச் செய்யுளின் தமிழ்-ஆங்கில மொழி பெயர்ப்புகள் வருமாறு:
"கணபதியே! கணங்களின் தலைவனே! நீ கணங்களின் நடுவே அமரவும். அவர்கள் உன்னை அறிஞர்களின் நடுவே மிகுந்த அறிஞன் எனக் கூறுகிறார்கள். நீ இல்லாமல் தூரத்திலும், அருகிலும் ஒன்றும் நடைபெறாது. மகவானே! நான் உனக்கு மகத்தான விரும்பத் தகுந்த தோத்திரத்தைக் கூறுகிறேன்."
(தமிழ் மொழிபெயர்ப்புகள்: ம.ரா.ஜம்புநாதன், *இருக்கு வேதம், தொகுதி 1 & 3*)
"Lord of the hosts! amid our bands be seated; they call thee greatest sage among the sages. Nothing is done, even far away, without thee; wondrous, *Maghavan*, is the hymn I sing thee."
(Eng. Translations: Ralph T.H. Griffith, *Hymns of the Rig Veda, Vol. 1 & 3*)

"வேதத்தில் பெயர்தான் கூறப்பெற்றுள்ளதே தவிர, அது இன்னாரை - இன்ன உரு அமைப்பு உடையவரைக் குறிக்கிறது என்று கூறப்படவில்லை. எனவே அப்பெயர், தேவகணங்களுக்கு எல்லாம்

---

அடிக்குறிப்பு:
(முன் பக்கத் தொடர்ச்சி)
சபித்துவிட்டு, முருகனை வணிகர் குலத்தில் ஊமைப்பிள்ளையாகப் பிறக்குமாறு சாபமிடுகிறார். இந்தச் சாபங்களிலிருந்து தப்பியவர் விநாயகர் ஒருவரே. காரணம்,

**வெருவரு செலவின் வேழ முகத்தனை விதித்த சாபம்,**
**பெருவலி தன்னைச் சாரும் பெற்றியால் சாபம் கூறான்**

(அஞ்சுதல் இல்லாத போக்கை உடைய ஆனைமுகனுக்கு இடும் சாபம், பெருத்த வலிவோடு தன்னையே (சிவபெருமானையே) சாரும் என்னும் காரணத்தினாலேயே, அவருக்குச் சிவபெருமான் சாபமிடவில்லை) என்று பரஞ்சோதி முனிவர் பாடுகிறார் (-திருவிளையாடற் புராணம், வலை வீசின படலம்). அதாவது விநாயகர், சிவசமானர் (சிவனுக்குச் சமமானவர்) என்பதை இப்புராண வரலாறு புலப்படுத்துகிறது.)

திருச்சிற்றம்பலம்

<u>மண்ணுளாரை மயக்கும் ஆனையார்</u>

(சந்தி விநாயகர், திருவாவடுதுறை)

(நன்றி: திருவாவடுதுறை ஆதீனம்)

(தேனபிஷேகப் பிள்ளையார்)

(நன்றி: பாரதத் திருக்கோயில்கள்)

தலைவனாகிய இந்திரனையும் குறிப்பதாகலாம்" என்று ஹீராஸ் பாதிரியார் (Rev.H.Herass) கூறுகிறார் என்கிறார் மகா வித்வான் ச. தண்டபாணி தேசிகர் (தகவல்: *கணபதி*)

தைத்ரீய ஆரண்யகம் (X.1.5) இறைவனைத் தந்தின் என்று அழைக்கிறது; அதற்குத் தந்தத்தை உடையவர் என்று பொருள்; அது பிள்ளையாரைக் குறிப்பதாகக் கொள்ளலாம் என்பது சிலர் கருத்து. ஆனால் அதையும் ஏ.ஏகாம்பரம் போன்றோர் மறுக்கின்றனர் *(- கோயிலும் இறை வழிபாடும்)*

இவ்விவாதம் குறித்து ஆய்வாளர் சிலரின் மேலும் சில கருத்துகள் வருமாறு:

In rejecting any claim that this passage (2.23.1) is evidence of Ganesha in the Rig Veda, Ludo Rocher says that it "clearly refers to Brahmanaspati - who is the deity of the hymn - and Brahmanaspati only." Equally clearly, the second passage (RV 10.112.9) refers to Indra, who is given the epithet 'Ganapati', translated "Lord of the companies (of the Maruts)". However, Rocher notes that the more recent Ganapatya literature often quotes the Rigvedic verses to give Vedic respectability to Ganesha. (- *Ganesa's Rise to Prominence*)

Anita Thapan, in her book on the development of Ganesha, concludes that, "although by the second century AD the elephant-headed Yaksa form exits it cannot be presumed to represent Ganapati-Vinayaka. There is no evidence of a deity by this name having an elephant or elephant-headed form at this early stage. Ganapati-Vinayaka had yet to make his debut." *(- Understanding Ganapati: Insights into the Dynamics of a cult)*

Yuvraj Krishan is one of the academics who accepts this view, stating flatly of Ganesa, "He is a non-vedic god. His origin is to be traced to the four Vinayakas of the Manavagrhyasutra (7th - 4th century BCE) who cause various types of evil and sufferings." (- *The origins of Ganesa*)

Some other sources say that depictions of elephant-headed human figures, which some identify with Ganesha, appear in Indian art and coinage as early as the 2nd century. The elephant-headed Ganesha as Lord of the Ganas was known to the people of Sri Lanka in the early pre-Christian era.

However A.K. Narain says, "In my opinion, indeed there is no convincing evidence of the existence of this divinity prior to the fifth century" (- *Ganesha: A Protohistory of the idea and the icon*)

இவ்வாறு வேதத்தில் விநாயகர் குறித்து வேறுபட்ட கருத்துகள் நிலவியபோதிலும், இரு தரப்புக்கும் பொதுவான ஒரு கருத்தை முன்வைக்கிறார் சுவாமி ஹர்ஷாநந்தா.

"வேதத்தின்வழி தெளிவான கருத்தைத் தெரிந்து கொள்ள இயலாவிட்டாலும், விநாயகருக்குரிய வித்து, ரிக் வேதத்தில் விதைக்கப்பெற்றுவிட்டது; நாளடைவில் அது படிப்படியாக முளைத்து-வளர்ந்து-பருத்து மரமாகிவிட்டது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்" என்கிறார் அவர்.

"Notwithstanding the fact that the Ganapati referred to in the *Rigvedic* mantras, and the Ganapati we worship today are strangers to each other, all unbiased scholars agree that the seeds of the Ganapati concept are already there in the *Rigveda* itself. In the subsequent centuries, this concept has passed through the mills of the epics and the Puranas to produce the Ganapati as we know Him today." (Swami Harshananda, *Hindu Gods and Goddesses*)

அதே நேரத்தில், கணபதி வழிபாடு தொடங்கியது தமிழகத்தில்தான் என்று வாதிடுவோரும் இருக்கவே செய்கின்றனர்.



'மக்கள் முதன்முதலில் தோன்றிய இடம், மலையும் மலை சார்ந்த நிலமுமாகிய குறிஞ்சித் திணையே என்று ஆய்வாளர் கூறுவர். யானை குறிஞ்சி நிலத்திற்குரிய விலங்காதலின், முதன் முதலில் தோன்றிய மனித குலத்தினர், யானை முகமுடைய விநாயகரை வழிபடத் தொடங்கியிருக்கலாம்' என்று கருத்துரைக்கின்றனர் ந.ரா.முருகவேளும் (- *திருக்கோயில்* மாத இதழ்), கா.சு. பிள்ளையும் (- *தமிழர் சமயம்*)

'தமிழகத்தில் விநாயகர் வழிபாடு, சதுக்கப் பூதத்திலிருந்து (Demons having their abode at the junction of four roads) தோன்றியது' என்று என். சுப்பிரமணியமும் (- *Sangam Poetry*), 'ஓம் என்னும் பிரணவ ஒலிக்கு இறை வடிவம் கொடுத்துத் தமிழர் விநாயகரை வணங்கினர்' என்று மறைமலையடிகளும் (- *தமிழர் மதம்*) கூறுகின்றனர்.

'கணபதி என்னும் கடவுள் முதலில் ஆரியர் அல்லாதாரின் கடவுளாக - அறுவடைக் காலத்து வழிபடப்பெறும் கடவுளாக - தமிழகத்தின் உழவர் தெய்வமாக இருந்து, பின்னர் பெருங்கடவுளர் வரிசையில் இடம் பிடித்துக் கொண்டார்' என்பது நா. வானமாமலையின் கருத்து (- *தமிழர் நாட்டுப் பாடல்கள்*). 'அறுவடைக் கடவுளாக இருந்த காரணத்தாலேயே, ஆனைமுகக் கடவுள், அறுவடைப் பயனை அழிக்கும் பெருச்சாளியை அடக்கி, வாகனமாக்கிக் கொண்டிருப்பார் போலும்' என்கிறார் முருகவேள்.

**மனு ஸ்மிருதியில்**, 'சிவனைப் பிராமணர்கள் (ருத்திரனாக) வழிபட்ட காலத்தில், அதாவது கி.பி. 6ஆம் நூற்றாண்டு வரை, கல்வியறிவு இல்லாத சூத்திரர்கள்தாம் கணபதியைத் தெய்வமாகக் கொண்டாடினர்' என்று கூறப் பெற்றிருப்பதாக, Miss Gatty (- *Tamil Culture*) கூறுவது, மேற்காணும் கருத்துக்கு வலுவூட்டுகிறது.

'பிள்ளையாருக்குப் பிடித்தமான நிவேதனம் மோதகம்; மோதகம் தமிழ் நாட்டினருக்கு மட்டுமே தெரிந்த ஒரு பணியார வகை. பழந்தமிழ் இலக்கியங்கள் கலவு என்ற பெயரால் அதைக் குறிப்பிடுகின்றன. அதனால் பிள்ளையார் தமிழ்நாட்டுக் கடவுள்தான் என்று துணியலாம்' என்பது மகா வித்வான் ச. தண்டபாணி தேசிகர் வாதம் (- *கணபதி*)

இக்கூற்றுகளை ஏற்க மறுக்கும் சிலர், 'வாதாபியிலிருந்து படைத் தளபதி பரஞ்சோதியார் (பின்னர் சிறுத்தொண்டர் என்று போற்றப்பெற்றவர்) கொண்டுவந்து, திருச்செங்காட்டங்குடியில் வைத்து வழிபட்ட பின்னரே, தமிழகத்தில் இவ்வழிபாடு பரவியது' என்று கூறுகின்றனர் !

இக்கூற்றுக்குத் திருமுறைகளில் எந்த ஆதாரமும் இல்லை என்று வேறு சிலர் வாதாடுகின்றனர்.

**'கணபதி என்னும் களிற்றினை நாம் உடையோம்'** என்று அப்பர் சுவாமிகள் தம் பாடலில் (4:2:5) குறிப்பிடுகிறார்;

ஐந்து பாடல்களில் விநாயகரைக் குறிப்பிட்டுப் பாடியுள்ள ஞானசம்பந்தரோ உ, திருச்செங்காட்டங்குடி இறைவனைக் **கணபதீச்சரத்தானே** *(கணபதீச்சரம் என்னும்*

*கோயிலில் குடி கொண்டுள்ள இறைவனே)* [3] என்றே விளித்துப் பாடல்களை (1:61:1-10) யாத்துள்ளார். கயமுகாசுரனை அழித்த பின்னர், ஓர் உயிரைக் கொன்ற பாவம் தீரத், தம் தந்தையின் உருவத்தைத் தாபித்து விநாயகர் வழிபட்ட காரணத்தாலேயே அந்தக் கோயில், கணபதீச்சரம் என வழங்கலாயிற்று என்று கந்த புராணம் பெயர்க் காரணம் கூறுகிறது. இவற்றைக் கொண்டு பார்க்கும்போது, இவ்விரு அருளாளர் காலத்திலேயே, கணபதி வழிபாடு, மக்களிடையே வேரூன்றியிருந்திருக்க வேண்டும் என்பது புலப்படும் என்று மற்றும் சிலர் கூறுகின்றனர்.



'ஆப்கானிஸ்தானின் காபூல் நகரிலிருந்து 10 மைல் தொலைவில் உள்ள சகர் தார் என்னும் ஊரில் இரு கைகளை உடைய விநாயகர் சிற்பம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அச்சிற்பத்தில் காணப்பெறும் அணிகலன்களை வைத்துப் பார்க்கும்போது, அது குப்தர் காலத்தின் பிற்பகுதியில் (கி.பி.500) செதுக்கப்பெற்றதாக இருக்கலாம்[4]' என்று ஆய்வாளர் தி. நா. இராமச்சந்திரன் (- *ஆப்கானிஸ்தானத்தில் விநாயகர்*) கருதுகின்றார். (தகவல்: டாக்டர் வ. தேனப்பன், *ஒன்பது நகரக் கோயில்கள்*)

---

அடிக்குறிப்புகள்:



[1] வாதாபி கணபதிம் பஜே - யார் அந்த வாதாபி வள்ளல்?

திருச்செங்காட்டங்குடி வாதாபி கணபதியின் தோற்றம், அமைப்பு ஆகியவற்றை வைத்து, அவர் தமிழ்நாட்டுக்காரர்தான் என்று சிலர் வாதிட்டாலும், சாளுக்கிய பாணியில் அமைந்த மற்றொரு வாதாபி கணபதி இருக்கிறார், திருவாரூரில் என்பதை நினைவிற்கொள்ள வேண்டும். அதை வைத்து, அவர்தாம் பரஞ்சோதியார் பிரதிஷ்டை செய்த விநாயகராக இருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர். அவர்மீதுதான் முத்துசாமி தீக்ஷிதர் வாதாபி கணபதிம் பஜே என்று கீர்த்தனை பாடினார் என்கிறார் காஞ்சிப் பெரியவர். காரணம், அக்கீர்த்தனையில் வரும் மூலாதார க்ஷேத்ர ஸ்திதம் என்னும் குறிப்புதான்; திருவாரூர்தான் மூலாதாரத் தலம் என்கிறார் பெரியவர். அம்மூர்த்தம் அகஸ்தியரால் பிரதிஷ்டை செய்யப்பெற்றதாகவும் இருக்கலாம் என்கிறார் அவர். அகஸ்தியரால் ஜீரணிக்கப்பெற்ற வாதாபி என்னும் அசுரனின் (அவன் தம்பி இல்வலன்) நினைவாகத், தாம் பிரதிஷ்டை செய்த மூர்த்திக்கு வாதாபி கணபதி என்று அவர் நாமகரணம் செய்திருக்கலாம் என்று பெரியவர் கருதுகிறார்.

[2] தேவாரப் பாடல்களில் விநாயகர்:

மூவர் முதலிகளின் தேவாரப் பாசுரங்களில் பதினான்கு இடங்களில் விநாயகரைப் பற்றிய குறிப்புகளைக் காண முடிகிறது.
ஞானசம்பந்தர் (5): தந்த மதத்தவன் (தந்தத்தையும் மதநீரையும் கொண்டவன். 1:115:2); மருப்பு உருவன் (கொம்பினை - தந்தத்தை உடையவன். 1:117:8); கணபதி (1:123:5; 2:96:3); புகர்முக இறை (யானைமுகக் கடவுள். 1:126:6)
நாவுக்கரசர் (7): கணபதி (4:2:5); வாரணன் (யானைமுகன். 5:65:10); வேழமுகத்தவன் (யானைமுகத்தினன். 6:53:4); தண்கட மா முகத்தினான் (குளிர்ந்த மதநீரைக் கொண்ட யானைமுகத்தினன். 6:65:9); ஆனைமுகன் (6:74:7); விநாயகன் (6:13:10; 6:77:8)
சுந்தரர் (2): கணபதி (7:5:2; 7:46:9)
(நன்றி: டி.வி. கோபால் ஐயர், *தேவாரம், ஆய்வுத்துணை*)

[3] செங்காட்டங் குடியதனுள் கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சரத்தானே (1:61:1)

'மேலும், வட சீனாவில் கண்டுபிடிக்கப்பெற்ற மிகப் பழைமையான விநாயகர் சிலையில் 531ஆம் ஆண்டை ஒட்டிய கல்வெட்டு சாசனம் ஒன்று காணப்பெறுகிறது. ஜப்பானில் 806ஆம் ஆண்டில் கணபதி வழிபாடு பற்றி முதன்முறையாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

இவற்றின்வழி வட இந்தியாவில் கி.பி.ஆறாம் நூற்றாண்டில் குப்தர் காலத்தில்தான், விநாயகரை எல்லோரும் வணங்கும் நிலை ஏற்பட்டது என்பதும், தொடர்ந்து பல இடங்களுக்கும் அது பரவியிருக்கிறது என்பதும் தெளிவாகிறது; அக்காலத்தில் எழுந்த புராணங்களே அவருக்கு முக்கியத்துவம் கொடுத்தன' என்றும் சில வரலாற்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

<u>கல்வெட்டு ஆய்வாளர் கருத்து:</u> முனைவர்கள் இரா. கலைக்கோவன், மு. நளினி ஆகியோர், விநாயகர் குறித்துத் தெரிவித்துள்ள ஆய்வு முடிவுகளிலிருந்து சில கருத்துகள் வருமாறு:

'சேயோன் (முருகன்), மாயோன் (திருமால்), இந்திரன், வருணன், பழையோள் (கொற்றவை), முக்கண்ணன் (சிவபெருமான்), பலராமன் என்று தமிழர் வழிபட்ட தெய்வங்களைப் பேசும் சங்க இலக்கியங்களும், கலித்தொகை, பரிபாடல் போன்ற நூல்களும், மறைபொருளாகக்கூடப் பிள்ளையார் வழிபாட்டைக் கூறவில்லை.

சிலப்பதிகாரக் காலத்தை ஒட்டியதாகக் கருதப்பெறும் பூலாங்குறிச்சிக் கல்வெட்டு ஒன்று வழிபாட்டுத் தகவல்கள் சிலவற்றைக் கொண்டிருக்கிறது; அதில்கூடக் கணபதி வழிபாடு காணப்பெறவில்லை.

கி.பி.ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சேர்ந்தவர்களாகக் கருதப்பெறும் சம்பந்தரும், அப்பரும்தாம் பிள்ளையார் பற்றிய குறிப்புகளை முதன்முதலில் அறிமுகப்படுத்துகின்றனர். ஆனால் அவர்கள் பாடல்களில்கூட முருகனுக்குக் கொடுக்கப்பெற்றுள்ள முதன்மை (முருகனைப் பற்றிய குறிப்புகள் அவர்களுடைய தேவாரப் பாடல்களில் 45 இடங்களில் காணப் பெறுகின்றன.) பிள்ளையாருக்கு வழங்கப்பெறவில்லை.

பிள்ளையார் சிற்பங்கள் சம்பந்தர் - அப்பர் காலத்திற்கு ஏறத்தாழ நூறு ஆண்டுகளுக்குப் பிறகே தமிழ்நாட்டில் இடம்பெறத் தொடங்கின.

ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்பெறும் பிள்ளையார்பட்டிக் குடைவரைச் சிற்பமான கற்பக விநாயகர்தாம், **தமிழ்நாட்டில்**, காலத்தால் முற்பட்ட பிள்ளையார் என்பதில் ஐயமில்லை. *(பிள்ளையார்பட்டிப் பிள்ளையார் பற்றிய தகவல்கள் 26ஆம் பக்கத்தில் இடம் பெறுகின்றன)*

('விநாயகர் திருமேனிகள் முதன்முதலில் இரண்டாம் நூற்றாண்டில் ஸ்ரீலங்காவில் காணப் பெற்றதாகக் கூறப்பெற்றாலும், ஆறாம் நூற்றாண்டுவாக்கில்தான் இந்தியாவின் பல பகுதிகளில் பரவலாகக் காணப்பெறலாயின' என்னும் ஆய்வாளர்களின் கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது)

சோழர் காலக் கற்கோயில்களில் பரிவார தெய்வமாக இருந்த பிள்ளையார், மிகப் பிற்காலத்தில்தான் தனிக்கோயில்களில் இடம்பெறலானார்.' (- "கணபதி வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்" கட்டுரை, *ஸ்ரீ கற்பக விநாயகர் வேதாகம வித்தியாலய வெள்ளிவிழா மலர்*)

---

<u>அடிக்குறிப்பு:</u>

(முன் பக்கத் தொடர்ச்சி)

4 Before the arrival of Islam, Afghanistan had close cultural ties with India, and the adoration of both Hindu and Buddhist deities was practised. A few examples of sculptures from the 5th to the 7th centuries have survived, suggesting that the worship of Ganesha was then in vogue in the region.

இதற்கு மறுப்புத் தெரிவிப்பது போன்று, 'சங்க கால இலக்கியங்களில் குறிப்பு ஏதும் காணப் படாமை ஒன்றே பற்றிப் பண்டைக் காலத்தில் விநாயகர் வழிபாடு நிகழவில்லை என்று கூறுவது பொருந்தாது' என்று கூறும் ந.ரா.முருகவேள், 'இலக்கியங்களில் எத்தனையோ பல முதன்மையான செய்திகள் விடுபட்டுப் போவதுண்டு. அம்முறையில் விநாயகர் வழிபாடு பற்றிய குறிப்புகளும் விடுபட்டுப் போயிருக்கலாம்; அல்லது அக்குறிப்புகளைக் கொண்டிருந்த இலக்கியங்களும் கவிதைகளும் அழிந்து போயிருத்தலும் கூடும். இலக்கியச் சான்று ஏதும் இல்லை என்னும் ஒன்றே பற்றிப், பண்டைக் காலத்தில் விநாயகர் வழிபாடு இருந்திருக்கவில்லை என்று வாதிடுவது பொருந்தாது' என்று மேலும் கூறுகிறார். (- *விநாயகர் பெருமை*)

தம்முடைய வாதத்திற்குச் சான்றாக, ஹரிதாஸ் மித்ரா என்னும் சாந்திநிகேதன் அறிஞர் ஒருவரின் கூற்றைத் திரு. முருகவேள் முன்வைக்கிறார்:
Greater events of political and religious history have been passed off in India without the slightest reference in contemporary literature. It is possible that Ganesa did not for some reasons, not exactly ascertainable now, figure in literatures, of the earliest classical period. (- Haridas Mitra, on Ganesa, in *Viswa-Bharati*, Santiniketan)

இதனிடையே 'தனவைசியரான நகரத்தார்கள் கி.மு. 2898க்கு முன்பே, நாகநாட்டின் சத்தியாபுரி என்ற நகரில் வாழ்ந்தபோது, மரகத விநாயகரை வழிபட்டு வந்தனர் என்று பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டுக் கூறுவதாக'க் கம்பன் அடிப்பொடி சா. கணேசன் கூறுவதும் *(தகவல்: ஒன்பது நகரக் கோயில்கள்)* நம்மைச் சிந்திக்கச் செய்கிறது. (இதுவே பிற்காலத்தில் நகரத்தார் சமுகத்திடையே விநாயகர் வழிபாட்டுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பெற்று வருவதற்கான காரணமாக இருக்கலாம்)

இவ்வாறு விநாயகர் வழிபாடு தோன்றிய விதத்தில் காணப்பெறும் பல்வேறு கருத்துகளைப் போலவே, இவருடைய தோற்றம் பற்றியும் பல்வேறு புராணக் கதைகள் வழங்குகின்றன.

## ஒருத்தரால் அறிய ஒண்ணாத் திருவுரு உடைய சோதி

*(ஒருவராலும் அறிய இயலாத ஒளி வடிவு உடைய இறைவன்)*

ஓங்காரம் பரம்பொருளை உணர்த்தும் ஒரு சொல். அதற்கு 'உயர்த்துவது' என்றும் பொருள் உண்டு. 'விதிப்படி ஒருமுறை உச்சரித்தாலும், உச்சரித்தவரை உயர்கதியில் சேர்ப்பது பிரணவம்' என்று அதற்குப் பொருள் சொல்லலாம். (- *அதர்வசிகோபநிஷத்*. மேற்கோள்: *கணபதி*)

விநாயகரை 'ஓங்கார சொருபன்' (Deity considered as the personification of the mystic syllable OM) என்று சொல்வர். அதாவது ஓங்காரமே விநாயகராக உருவெடுத்துள்ளது என்பது கருத்து. (மறைமலையடிகளின் கருத்தும் இதுவே). இதன் தொடர்பாகக் கணபதி அதர்வஷீர்ஷா (Ganapati Atharvashirsa)வில் காணப்பெறும் ஒரு சுலோகம் வருமாறு: "(விநாயகப் பெருமானே!) நீரே பிரமன், நீரே விஷ்ணு, நீரே மகேசன் (அதாவது நீரே மும்மூர்த்திகளும் ஆகிறீர்); நீரே இந்திரன், அக்கினி, வாயு; நீரே பிரமம்; நீரே பூலோக, புவலோக, சுவர்க்கமாகத் திகழ்கிறீர்; நீரே ஓம், நீரே பிரணவம் (ஓங்கார வடிவம் நீரே)"

'அந்தப் பிரணவம் (ஓங்காரம்) அநாதி; அதுவே வேதமூலம். அந்தப் பிரணவ உருவாக விநாயகர் விளங்குகிறார் என்று சொன்னோம். அதன்வழி அத்திருவுருவ அமைப்பும், அதன் வழிபாடும் என்றோ தோன்றியதுதான். அதனை இலக்கியங்களும், கல்வெட்டுகளுமாகிய கருவிகளைக் கொண்டா அளக்க இயலும்? அளவைகளால் அறியப்படும் ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டவன் அல்லனோ இறைவன்? அளக்க இயலாத ஒருவரை - அளவைக்கு அப்பாற்பட்ட இறைவனை, அளக்க முடிந்தவை அறிந்து, அதற்கு அப்பாலும் உண்டென்று அமைவதே அழகு' என்று விநாயகர் குறித்த வாதத்திற்கு முடிவு கட்டுகிறார் மகா வித்வான் ச. தண்டபாணி தேசிகர்.

'ஒரு மூர்த்தியின் ஸ்வரூபத்தையோ, அது தோன்றிய காலத்தையோ திட்டவட்டமாகக் கணக்குப் பண்ணிச் சொல்லிவிட முடியாது. பஞ்சபாத்திர உத்தரணி(கரண்டி)யில் கடல்நீரை எடுத்து வருகிறோம்; அது கடல்நீர்தான் என்றாலும், கடல்நீர் முழுவதையுமா கொண்டுவந்து விட்டோம்? அப்படியே, நம்முடைய அறிவுக்கும் அனுபவத்துக்கும் எட்டும் அளவுக்கு, இறைவனின் சில தத்துவங்களை, ஒரு மூர்த்தத்தின் தோற்றக் காலத்தை வரையறுத்துச் சொல்கிறோம்; ஆனால் அதுதான் முடிந்தமுடிபு (final conclusion) என்று சொல்லிவிட முடியாது. நாம் கண்டது, நாம் அறிந்தது, ஒரு சிறு பகுதிதான்' என்கிறார் காஞ்சிப் பெரியவர் (- *ஆசாரிய ஸ்வாமிகளின் உபந்நியாசங்கள்*)

## மிக்குச் சோதிக்க வேண்டா

*(மிகுதியாக ஆராய முற்பட வேண்டாம்)*

இந்த இடத்தில், **ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா** (இறைவன் ஒப்புயர்வற்ற பொருளாதலால், அவனை அனுமானப்பிரமாணத்தாலும் (inference as a mode of proof), உரையளவையாலும் (proof from the sastras) சோதிக்க வேண்டாம்) என்னும் ஞானசம்பந்தர் வாக்கை நினைவுகூர்வது ஏற்புடையதாக இருக்கலாம்.

"கேவல ஞானம் (திரிகால ஞானம், knowledge of the past, present and future) மட்டும் நாடுவோர், வேத வாக்கியங்களையும், நியாய சாஸ்திரங்களையும் (தருக்க நூல், dialectics) பின்பற்றி, அவ்யக்தமான (விளங்கக் காணப்படாத, that which is invisible, not manifested) பிரம்மத்தைத் தேடிக் கஷ்டப்படுகின்றனர். ஆனால் இறைவா! ஆரம்பத்திலிருந்தே மனத்திற்கு இனியதும், விரைவில் உம்மை அடையச் செய்வதுமான **பக்தி** ஒன்றே என்னிடம் வளரட்டும்" என்னும் ஸ்ரீ நாராயண பட்டதிரியின் பிரார்த்தனையையும் (- *ஸ்ரீமந் நாராயணீயம்*, 90 : *விபூதி* யோகம் : 6) நினைவுகூரலாம்.

இவ்வாறு முரண்பாடுகள் பலவற்றையும் ஒருங்கிணைத்துக் கொண்டுள்ள மூத்தபிள்ளையின் திருமேனி, 'அத்வைத (non-duality) சித்தாந்தத் தத்துவ நுட்பத்தினைக் காட்டிக் கொண்டிருக்கிறது' என்று, 18ஆம் நூற்றாண்டினரான **நல்லகவி** என்னும் அத்வைத தத்துவ ஆசாரியர் பாடியுள்ளது (மேற்கோள்: ந.ரா. முருகவேள்), கணபதி வழிபாட்டினருக்குப் பெருமை தரும் கருத்தாகும்.

எனவே, **உலக மக்களின் உள்ளத்து இருளை அகற்றி, அவர்தம் இடரைக் களைந்து அவர்க்கு அருளவே, ஆனைமுகர் இந்த அருள் உருவை** எடுத்திருப்பதாகக் கூறும் கந்தபுராணக் கூற்றை மட்டும் நாம் நினைவிற் கொண்டு அவரை வழிபட்டு வளமாக வாழ்வோம்.

## அப்பன்நீ அம்மைநீ அன்புடைய மாமனும்நீ



விநாயகரை வழிபடுவோர் சிவன் - சக்தி - விஷ்ணு - பிரம்மா - சூரியன் ஆகிய தெய்வங்களின் பேரருளைப் பெற முடியும் என்று கூறுவர்.

கணபதியின் நாபி (தொப்புள்) பிரும்ம வடிவம், முகம் திருமால் அம்சம், கண் சிவமயம், இடப்பாகம் சக்தி வடிவம், வலப்பாகம் சூரிய வடிவம் என்று கூறும் ஒரு சுலோகம், இதற்கு ஆதாரமாக அமைகிறது.

**அவ்யா க்ருத பிரும்மணோ குணே**
**சஸ்ய சரீரே நாபிர் பிரும்மா**
**முகம் விஷ்ணு நேத்ரம் ருத்ர:**
**வாம பார்ச்வம் சக்தி: தக்ஷிணம் சூர்ய:**
**ஆத்மா ஸ்மிதா மய:||**

## ஆனைமுகனின் ஆனந்த புவனம்

சிவபெருமான் கயிலைவாசி; மகாவிஷ்ணுவோ பாற்கடலில் பள்ளி கொள்பவர்; அம்பிகையின் இருப்பிடம் அமிர்தக் கடலால் சூழப்பெற்ற மணித்வீபம்; அந்த வரிசையில் நம் ஆனைமுகத்து அண்ணலின் இருப்பிடம், கருப்பஞ்சாற்றுக் கடலால் சூழப்பெற்ற ஆனந்த புவனம்.

## ஒருவர் தாம்-பல பேருளர் காண்மினே

*(தாம் ஒருவரே ஆயினும், பல திருப்பெயர்களைக் கொண்டவர்)*

இவருக்கு எண்ணற்ற பெயர்கள் உண்டு.

ஏகதந்தன் (*ஒற்றைக் கொம்பை உடையவர்*) [1]; இறைமகன் (*சிவன்மகன்*); ஏரம்பன் (ஐந்து யானை முகங்களும், சிம்ம வாகனமும் உடையவர்; மஞ்சள் நிறத்தினர்) [2]; ஆகுவாகனன் (*ஆகு = பெருச்சாளி*); ஐங்கரன்; முக்கண்ணன் (*சூரியனை வலக்கண்ணாகவும், சந்திரனை இடக்கண்ணாகவும், அக்கினியை நெற்றிக்கண்ணாகவும் கொண்டவர்*); பார்ப்பதி புதல்வன் (*பார்ப்பதி = மலைமகள், உமாதேவி*); பாசாங்குசதரன் (*பாச - அங்குசங்களைக் கொண்டவர்*); அத்திமுகத்தோன் (*அத்தி = யானை*); அரிதிருமருகன் (*திருமால் மருகன்*); தந்திக் கடவுள் (*தந்தி = ஆண்யானை*); மும்மதன் (*மும்மதம் = exudations of a must elephant, as from three places viz., கன்னமதம் (யானையின் கன்னத்தினின்று தோன்றும் மதநீர், must from the cheek of an elephant), கைமதம் (தும்பிக்கையிலிருந்து வழியும் மதநீர், exudation from the trunk of an elephant in rut), கோசமதம் (ஆண்யானையின் குறியினின்று வரும் மதநீர், must from the generative organ of a male elephant in rut).* ஆனால் விநாயகருக்கு ஞானமதம் ஒன்று மட்டுமே உண்டு என்றும் சொல்வர்.) [3]; கங்காசுதன் (*கங்கையின் மைந்தன்*); விநாயகன் (*தமக்கு மேல் தலைவர் இல்லாதவர்* [4])

---

அடிக்குறிப்புகள்:

1 பரசுராமர் சிவபெருமானைத் தரிசிக்க இயலாதவாறு விநாயகரால் தடுத்து நிறுத்தப்பட்ட போது, அவர் சினமுற்றுத் தம் பரசு ஆயுதத்தை விநாயகர்மீது வீசினார். தம் தந்தை அவருக்கு வழங்கியது அந்தப் பரசு என்பதால், அதற்கு மதிப்பளிக்கக் கருதி, அதைத் தம் கொம்பு ஒன்றால் தடுத்தார் விநாயகர். அதன் விளைவாக அந்தத் தந்தம் முறிந்து விட்டது. அது முதல் அவர் ஏகதந்தர் ஆனார் - *பிரும்மாண்ட புராணம்.* ஏகதந்தர் என்னும் பெயரே விநாயகரின் தொடக்க காலப் பெயராக அமைந்திருந்தது என்னும் கருத்தும் சான்றோரிடையே நிலவுகிறது.

2 சிங்க வாகனத்துடன் கூடிய ஐம்முக விநாயகரான இந்த ஹேரம்பர்தான் நேபாளத்தில் வெகுவாக வழிபடப் பெறுகிறார்.

3 யானை முகத்தினரான விநாயகரின் தலையில், காதுகளுக்குப் பின்பக்கத்தில், சிறு நீரக உறுப்பின் பக்கத்தில் என மூன்று இடங்களில் மதநீர் வெளிப்படும். மதநீர் என்பது கருணை நீர். சிறுநீரக உறுப்பின் பக்கம் உள்ள தொளையிலிருந்து ஒழுகும் நீரே மறக்கருணை; இது அரசர்கள் மூலமாக அல்லது ஆள்வோர் மூலமாகத் தீமையை அழிப்பது; கன்னமதம் - அறக்கருணை; நல்லோர்வழி நன்மைச் செயல்களை ஒழுங்குபெறச் செய்ய உதவுவது; கபோலமதம் தலையில் உள்ளது. இதுவே சுத்தக்கருணை எனப்பெறும். இதனையே தழங்கருந் தேன்-அன்ன தண்ணீர் பருகச் செய்து உய்யக் கொள்வாய் *(கிடைத்தற்கரிய தேன் போன்ற உன் கருணையாகிய நீரைக் கொடுத்து உய்விப்பாய்)* என்று திருவாசகம் குறிப்பிடுகிறது.) (- டாக்டர் வை. இரத்தினசபாபதி.)

4 1. வி = Prefix signifying opposition; எதிரிடை; நாயகர் = தலைவர்; கடவுள், The Supreme Being.
= தமக்கு மேல் தலைவர் இல்லாதவர்; தம்மிற் சிறந்த தலைவர் இல்லாதவர்; மேலான பரம்பொருள்.

ஆகிய 14 பெயர்களைக் கொண்டவர் கணபதி (கணங்களுக்குத் தலைவர்)# என்று *பிங்கல நிகண்டு* (பிங்கல முனிவர் இயற்றிய மிகப் பழைய தமிழ்ச் சொல்லகராதி) கூறுகிறது. கணங்களுக்கு இறைவன், மூன்று கண்களை உடையவன் என்று பொருள்படும் **கணேசர்** என்னும் திருநாமமும் பரவலாக வழங்குகிறது.

**அமரகோசத்தில் ஆனைமுகர் :** மிகப் பழைய சமஸ்கிருத நிகண்டான *அமரகோசம்*@, விநாயகருக்கு எட்டுத் தலையாய நாமங்களைத் தொகுத்துக் கூறுகிறது.
**விநாயகர், விக்னராஜர்** (தம்மை வழிபடாதோருக்கு இடையூறுகளை ஏற்படுத்தி, வழிபடுவோரின் இடையூறுகளைக் களைபவர். நோயைக் கிளறிவிட்டுப் பின்னர் முற்றாகக் குணப்படுத்துகிறவர்)$, **த்வைமாதுரர்** (Dvaimatura; உமையம்மை, கங்காதேவி என இரு தாயரைப் பெற்றிருப்பவர்), **கணாதிபர்** (கணங்களுக்குத் தலைவர்), **ஏகதந்தர், ஹேரம்பர், லம்போதரர்** (சரிந்த வயிற்றினர்), **கஜானனர்** (யானை முகத்தவர்)

மூஷிஹத்தை வாகனமாகக் கொண்டுள்ள விநாயகர், அந்தச் சிறிய உருவத்திற்குத் தம் கொடியிலும் இடமளித்துள்ளார் என்பதை, ஆகுகேதன (கேதனம் = *கொடி*; மூஷிஹக் கொடியைக் கொண்டவர்) என்னும் கணேச சகஸ்ரநாமத் தொடர் சுட்டிக் காட்டுகிறது. (கணபதி அதர்வாசீர்ஷத்தில் அமைந்துள்ள தியான சுலோகத்திலும் மூஷிஹக் கொடியைப் பற்றிய குறிப்புக் காணப்பெறுகிறது)

**பார்க்கவர் கூறும் பன்னிருவர் :** உபபுராணங்கள் பதினெட்டனுள் ஒன்றான **பார்க்கவ புராணம்** (Bhargava Purana), விநாயகரின் பெருமைகளை விளக்கப், பார்க்கவ முனிவரால் இயற்றப் பெற்றதாகும். தமிழில் அதனை **விநாயக புராணம்** என்று திருவாவடுதுறை கச்சியப்ப சுவாமிகள் மொழிபெயர்த்திருக்கிறார். அப்புராணத்தின் முதலாவது **உபாசனா காண்டத்தில்,** யார் யார் எந்தெந்த உருவில் ஏகதந்தரை வழிபடுகின்றனர் என்று கூறப்பெற்றுள்ளது.

தேவர்கள் **சுமுகர்** என்றும், மகரிஷிகள் **ஏகதந்தர்** என்றும், கந்தர்வரும் (a celestial group of singers) கிம்புருடரும் (celestial lyrists) **கபிலர்** என்றும், சாரணரும் (a class of celestial hosts) சித்தரும் (Supernals inhabitating the intermediate region between the earth and the sun) **கஜானனர்** என்றும், மானிடர் **லம்போதரர்** என்றும், விலங்குகள் **விகடர்** என்றும், பறவைகளும் மரங்களும் **விக்னராஜர்** என்றும், நவக்கிரகங்கள் **கணநாதர்** என்றும், திக்கு பாலகர்கள் (Tutelary deities of the eight quarters) **தூமகேது** என்றும், புண்ணிய ஆறுகளும் தீர்த்தங்களும் **கணாத்தியக்ஷர்** என்றும், பயிர்களும்

---

அடிக்குறிப்புகள்:

(முன் பக்கத் தொடர்ச்சி)

2. வி = கல்வி = **தம்மை வணங்குவோருக்குக் கல்வியைத் தருபவர்;**
3. வி = திசை = **எத்திசைக்கும் தாமே தலைவர்.**
4. வி = சிதாகாசம், அறிவு ஆகாசம், ஞானவெளி.
   = **சிதாகாசத் தலைவர்**

\# கணபதி என்னும் சொல்லாட்சிக்கு வேறு வகையான விளக்கங்களையும் அறிஞர் பெருமக்கள் காண்கின்றனர்:

1. க - ஞானநெறியில், *எழுதல்* என்று பொருள்படும், ந - மோட்சம், பதி - பரம்பொருள்; அதாவது, ஞானநெறியில் நின்று அடையப்பெறும் விநாயகர் (- வித்வான் தண்டபாணி தேசிகர், *கணபதி*)
2. க என்பது, மனம் - வாக்கு ஆகியவற்றையும், ண என்பது அவற்றைக் கடந்த நிலையையும் உணர்த்துகின்றன; அதாவது, வாக்கையும் மனத்தையும் கடந்த பதியாக விளங்குபவரே கணபதி. (- டாக்டர் ந.வீ. செயராமன், *ஆலயமும் வழிபாடும்*)

வண்டுகளும் பாலசந்திரர் என்றும், ஏனைய உயிர்ப்பிராணிகள் கஜானனர் என்றும் விநாயகரை வழிபட்டுப் பேரானந்தம் அடைகின்றனர் என்று அப்புராணத்தில் கூறப்பெறுகிறது. (- *விநாயக புராணம்*)

## யுகபுருஷர்

கிருதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்னும் நான்கையும் சதுர்யுகம் என்று சொல்வர். இந்த யுகங்களுக்கு ஏற்ப, விநாயகரின் தோற்றமும், பெயரும் மாறுபடும் என்று கணேச தந்திரங்கள் கூறுகின்றன:

கிருதயுகத்தில் கணபதியின் நாமம் விநாயகர்; ஜோதி வர்ணம்; பத்துக் கரங்கள்; சிம்ம வாகனம்.
திரேதாயுகத்தில் பெயர் மயூரேசர்; வெண்ணிறம்; ஆறு கரங்கள்; மயில் வாகனம்.
துவாபரயுகத்தில் பெயர் கஜானனர்; சிவப்பு நிறம்; நான்கு கரங்கள்; வாகனம் மூஷிஹம்.
கலியுகத்தில் கணேசர் பெயர் தூம்ரகேது; பெயருக்கேற்பப் புகை நிறத்தினர்; இரு கரங்கள்; குதிரையை வாகனமாகக் கொண்டவர். (- ரா. கணபதி, *தெய்வத்தின் குரல்*)

## ஆனைமுகன் ஆசான் ஆகிறார்

விநாயகருக்குரிய அர்ச்சனைத் தொடர்களில் ஒரு நாமம், அவரைக் குமாரகுரு என்று குறிப்பிடுகிறது. சிவபெருமானுக்குப் பிரணவப் பொருள் உபதேசித்த முருகனைத்தான் சிவகுரு, சிவகுருநாதன், சுவாமிநாதன் என்றெல்லாம் கூறுவது வழக்கம். விநாயகர் யாருக்கு, எப்போது குரு ஆனார்? அதற்கு விளக்கம் தருகிறார் காஞ்சி முனிவர்.

தந்தைக்குக் குருவாக மாறிய முருகன், தான் யாருக்காவது சீடராக வேண்டும் என்று கருதியிருப்பார். தனக்குக் குருவான தனயனுக்குத் தந்தை உபதேசம் செய்ய விரும்பமாட்டார்; அன்னையோ, அவருடைய பாதி; பதி சொல் தட்டாத பதிவிரதை. அதனால் அவளும் குருவாகி

---

அடிக்குறிப்புகள்:

(முன் பக்கத் தொடர்ச்சி)

3. வராக புராணக் கூற்று : மகரிஷிகளின் கோரிக்கையின்பேரில் சிவபெருமானின் சிந்தனையிலிருந்து ஓர் அழகிய புத்திரன் தோன்றினான். அவனுடைய மயக்கும் அழகைக் கண்ட பார்வதி, “இந்த அழகுத் தோற்றம் நீங்கி, நீ யானைத் தலையும், தொந்தி வயிறும் அடைவாயாக” என்று கூறவே, அக்குழந்தை ஆனைமுகனாக மாறியது. சிவபெருமான் அவரை அன்போடு பார்த்துத், தம் பூதகணங்களுக்குத் தலைவனாக்கிக் கணபதி என்னும் பெயரையும் சூட்டினார்.
   “யார் ஒருவர் தமக்கு ஏற்படும் இடையூறுகளை எல்லாம் பொருட்படுத்தாது திடமனத்தோடு சிவாலய தரிசனம் செய்ய வருகிறாரோ, அவர் உன்னை வழிபட்டு வேண்டினால் மட்டுமே அவருக்கு ஏற்படும் இடையூறுகளை அகற்றி, அத்தகையோரின் கோரிக்கையை நிறைவேற்றுவாயாக” என்று சிவபெருமான் அருளியதாக ஸ்கந்த புராணம் கூறுகிறது.
   இதனையே இலிங்க புராணமும் சற்று மாற்றிக் கூறுகிறது.

@ அமரகோசம் - விக்கிரமார்க்கன் என்னும் அரசன் காலத்திலிருந்த அமரசிம்ஹன் என்னும் ஜைனப் பண்டிதரால் உருவாக்கப்பெற்ற வடமொழி நிகண்டு (ஒரு பொருள் பலசொல் தொகுதியையும், பலபொருள் ஒருசொல் தொகுதியையும் பாக்களாக அமைத்துக் கூறும் நூல். Sanskrit thesaurus by Amarasimha)

$ ஆதிகாலத்தில் பிள்ளையார் உக்கிர (ஆங்காரம், கடுமை) தேவதையாக இருந்தபோது, அவர்தாம், விக்கினங்களை (இடையூறுகளை) உண்டுபண்ணுபவராக இருந்தார் என்றும், அதனால்தான் விக்நேசுவரர், விக்னராஜர் என அழைக்கப்பெற்றார் என்றும், பிறகு சௌமிய (சாந்த) மூர்த்தியாக அவரை வழிபடத் தொடங்கிய பின்னரும் அந்தப் பெயர் நீடித்துவிட்டது என்றும் சொல்கிறார்கள் (- காஞ்சிப் பெரியவர், *தெய்வத்தின் குரல்*)

உபதேசம் செய்ய ஒப்பமாட்டாள். அதற்குச் சரியானவர் அண்ணன்தான் என்று கருதி, ஆனைமுகனுக்குச் சீடராகி, அவரிடம் ஆறுமுகப் பெருமான் உபதேசம் கேட்டிருப்பார் போலும். அதனால்தான் விநாயகரைக் குமார (முருகனுக்குக்) குரு என்று அந்த நாமம் கூறுகிறது போலும்.
*(- தெய்வத்தின் குரல்)*

## துரியம் சொரூபம் அதுவாமே

*(அதீதமான (மிக உயர்ந்த) உருவ அமைப்பினர்)*

அண்டங்களில் வாழும் உயிரினங்கள் அனைத்தும் ஒழுக்கத்தைக் கொண்டு உயர்திணை - அஃறிணை எனவும், உடல் அமைப்பைக் கொண்டு ஆண்-பெண் எனவும், நிலை பற்றித் தேவர் - பூதம் எனவும் வேறுபடுத்தப் பெறுகின்றன.

உயர்திணையைக் குறிக்கும் மனித உடல்; அஃறிணையைக் குறிக்கும் யானை முகம்; ஆணைக் குறிக்கும் ஒற்றைக் கொம்பு; பெண்ணைக் குறிக்கும் ஒடிந்த கொம்பு; பூதத்தின் கால்கள் - இவ்வாறு அண்டங்களில் உள்ள எல்லா உயிரினங்களையும் பிரதிபலிக்கும் உருவ அமைப்பே கணேச வடிவம்.

விநாயகப் பெருமான் பிரணவ சொரூபமாக விளங்குகிறார் என்பதை விளக்கவே, அவருக்கு யானை முகம் அமைந்திருக்கிறது. யானையின் முகமும், அதன் தொங்கி நீண்டு சுருளும் துதிக்கையும் ஓ என்னும் எழுத்தின் வடிவத்தை ஒத்திருப்பதைக் கண்டு, அதனையே விநாயகப் பெருமானின் திருவுருவமாக நம் மூதாதையர் அமைத்தனர்.

இவர் எங்கும் நோக்கும் இயல்பைக் கொண்டவர்,பரந்த நோக்கு உடையவர் என்பதை இவருடைய சிறிய கண்கள் காட்டுகின்றன. குறுகிய கண் நெடுந்தூரம் நோக்கும் என்பர். அது போன்றே இவருடைய குறுகிய - கூரிய கண்கள் எங்கும் நோக்கும் இயல்பை உடையவை.

பரந்த நோக்குடைய இவர், வரங்கேட்கும் யாரையும் உற்றுப் பார்ப்பதில்லையாம். உற்றுப் பார்த்தால், எங்கே அடியவரின் குறைபாடுகள் தெரிந்து விடுமோ, வரங்கொடுக்க முடியாமல் போய்விடுமோ என்றுதான், விநாயகர் சிறிய கண்களைப் பெற்றிருக்கிறாராம்.

தும்பிக்கை(தூம்புக்கை)யையும் சேர்த்து இவருக்கு ஐந்து கரங்கள். அதனாலேயே இவருக்கு **ஐங்கரன்** என்று பெயர். இவர் பேரருள் உடையவர் என்பதை இவருடைய தும்பிக்கை உணர்த்துகிறது. எவரிடத்தும் இல்லாத முறையில், தம்மிடமுள்ள நீண்ட துதிக்கைவழி இவர் எல்லோருக்கும் பேரருள் புரிகிறார். (தொடக்க காலத்தில் இரு கரங்களையே கொண்டிருந்த தொந்திக் கணபதி, 9 - 10ஆம் நூற்றாண்டுகளில் மத்திய இந்தியாவில் 14, 20 கரங்களுடன் காட்சியளிக்கத் தொடங்கிவிட்டார்)

இடப்பக்கம் வளைந்த துதிக்கை தீயசக்திகளையும், பகையையும் விரட்டுவதைக் குறிக்கிறது; அது இங்கு காணப்பெறுவதுபோன்று பல்வேறு தோற்றங்களில் அமைந்திருப்பது உண்டு.



வலப்பக்கம் வளைந்த துதிக்கை பக்தர்களுக்கு வெற்றியையும் செல்வத்தையும் வழங்குவதை உணர்த்துகிறது.

வலப்புறம் வளைந்த துதிக்கையில் **வலஞ்சுழி**, **வலம்புரி** என்னும் பாகுபாடும் உண்டு.



"வலஞ்சுழி விநாயகர்"

தம்மை நோக்கியபடி துதிக்கையைச் சுற்றியிருக்கும் நிலைக்கு வலஞ்சுழி என்று பெயர்; துதிக்கை வலப்பக்கமாகத் தூக்கிய நிலையில் இருந்தால், வலம்புரி எனப்பெறும்.

வலஞ்சுழியைவிட வலம்புரி சிறப்பானதாகக் கருதப்பெறுகிறது. அடியவர் வேண்டும் வரங்களை எல்லாம் தருவதற்கு ஆயத்த நிலையில் இருப்பவரே வலம்புரி விநாயகர் என்பார்கள்.

வலமாக வளைந்த துதிக்கையின் பல்வேறு தோற்றங்கள்:



*(வரைபடங்கள் உதவி: ஆர். ஸ்ரீராம்)*

பின்புற வலக்கையில் உள்ள அங்குசமும் (hooked instrument, especially elephant goad), இடக்கையில் உள்ள பாசமும் (noose as a weapon), முன்புறம் வலக்கையில் உள்ள தந்தமும், இடக்கையில் உள்ள கும்பமும், தும்பிக்கையில் உள்ள மோதகமும், இறைவனின் ஐந்தொழில்களைக் குறித்து நிற்கின்றன.

பாசம், பற்றுள்ளத்தைப் பிறப்பித்துப் பிணித்து நிற்பது; பிணிப்புத்தான் பிறப்புக்குக் காரணமாகிறது; ஆகையால் பாசம் ஏந்திய கை படைத்தற் தொழிலைக் குறிக்கிறது. அங்குசம் அழிக்கும் தன்மை உடையது; அது அழித்தற் தொழிலை அறிவிக்கிறது. தந்தம் ஏந்திய கை அபயகரமாகவும் திகழ்வதுண்டு. பிறவிக் கடலில் சிக்கித் துன்புறும் உயிர்களுக்கு அஞ்சாமை அருளி அவற்றைக் காப்பதால், அக்கரம் காத்தல் தொழிலைச் செய்வதாகிறது. வரதமும், மோதகம் ஏந்தியதுமாகிய கை, முன்சொன்னவாறு அபயம் அளிக்கப்பெற்ற உயிர்களின் பரிபாகத்திற்கு ஏற்ப அருளைப் புரிகிறது. துதிக்கை மோதகத்தை ஒட்டி அமைந்துள்ளது; வரதகரத்தையும் சுட்டாமல் சுட்டிக் காட்டுகிறது. எனவே அது காட்டியும் - மறைத்தும் நிற்கும் திரோதானமாகிய மறைப்புத் தொழிலைக் குறிக்கிறது. *(-கணபதி)*

தம் பொருட்டு மோதகம் ஏந்தியிருக்கிறார்; தேவர்களைக் காக்கத் தந்தத்தை ஏந்தியிருக்கிறார்; தம்முடைய தாய் - தந்தையருக்கு அபிஷேகம் செய்து வழிபட நீர்க்கலசம் (கும்பம்) தாங்கியிருக்கிறார்; உயிர்களாகிய நம்மை ஆணவ மலமாகிய யானை துன்புறுத்தாமலிருக்கப் பாசமும் அங்குசமும் வைத்திருக்கிறார் என்று ஒரு பாடல் குறிப்பிடுகிறது. (இப்பாடல் பின்னர் வழிபாட்டுப் பகுதியில் (பக். 163) இடம் பெறுகிறது)

மோதகம் என்றால் ஆனந்தம். மோதகத்தில் மதுரமான *(தித்திப்பான)* வெல்லப் பூர்ணத்தை மூடிக்கொண்டு மா(வு)ச் செப்பு இருப்பது போலப், பிரேம ரஸம் நிறைந்த பூர்ண வஸ்துவான பரப்பிரம்மத்தின் மேல் ஆனை என்ற "மா"வின் உருவத்தை வைத்து மூடிக்கொண்டு, ஆனந்த ஸ்வரூபியான *(இனிய உருவினரான)* விக்நேசுவரர் உருவம் எடுத்துக் காட்டுகிறார்.

இவருடைய தந்தங்களைப் பதிஞானம் (knowledge of the Supreme Being), பசுஞானம் (knowledge obtained through the senses and the mind) என்றும் பெரியோர் கூறுவர்.

இவருடைய பெருங்காதுகள் எந்த உலகத்திலிருந்து இவருடைய அடியவர்கள் அழைத்தாலும், அவர்களுடைய குறைபாடுகளைக் கேட்டு அவர்களுக்கு அருள் புரியும் ஆற்றலைக் காட்டுகின்றன.

எல்லா அண்டங்களும் விநாயகருக்குள் அடக்கம் என்பதை இவருடைய பெரிய வயிறு உணர்த்துகிறது. அதாவது, இவர் எங்கும் நிறைந்திருப்பவர் என்பது இதன் பொருளாகும்.

சில விநாயக வடிவங்களில் பாம்பு, பூணூலாகவும், சிலவற்றில் ஆபரணமாகவும் காணப்பெறும். இது குண்டலினி சக்தி(a sakthi or principle in the form of a serpent, abiding in the *muladhara*)யைக் குறிக்கிறது.

ஆன்மாவைப் பொருந்திநின்று மல - கன்ம - மாயைகளைச் செயற்படுத்தி, இம்மை - மறுமை இன்பங்களை வழங்குவது ஞானம். அந்த ஞானமே விநாயகப் பெருமானின் திருவடிகளாக உவமிக்கப்படுகிறது. ஞானம் திருவடியா என்று குமரகுருபர சுவாமிகள் பாடுவது இங்கு நினைவுகூரத்தக்கது. இந்த ஞானத் திருவடி அடியார்களின் உள்ளத் தாமரையில் பதியும்போது, உயிர்களுக்குப் பிராரத்த வினை(இம்மையிற் பலனளிக்கும் பழவினை)யால் ஏற்படும் இன்னல்கள் வலி குன்றிப் போகின்றன. அதன்வழி, வருவினையும், செய்வினையும் சேராது ஒழிகின்றன; இன்பம் பெருகுகின்றது. (- எஸ். நாராயணசுவாமி, *கணபதி*)

மனிதர்களின் அறியாமையையும், அவர்களின் குறும்புகளையும் அடக்கியாண்டு, அவர்களை ஆனைமுகன் நல்வழிப்படுத்துவார் என்பதை, அவருடைய காலடியிலுள்ள பெருச்சாளி உணர்த்துகிறது. இதனைக் குண்டலினி சக்தியின் அடையாளம் என்றும் கூறுவர்.

இதன் தொடர்பான புராண வரலாறு:
கஜமுகாசுரன் என்பவன் எண்ணிலாத வரங்களைப் பெற்று வானவர்களை வருத்தி வந்தான். மால், அயனாதி தேவர்கள் விநாயகப் பெருமானை வேண்டி நின்றனர். தேவர்களின் முறையீட்டுக்குச் செவி சாய்த்த விநாயகர், அந்த அசுரன் மீது பற்பல படைக்கலங்களை ஏவியும் அவன் அழிந்தானில்லை. அதனால் தம் தந்தங்களில் ஒன்றை முறித்து அவன் மீது ஏவினார். ஞானமயமான தந்தம் கஜமுகாசுரனைப் பிளந்தது. தொடர்ந்து அந்த அசுரன் பெருச்சாளியாக வடிவெடுத்து விநாயகருடன் பொருத முற்பட்டபோது, அதை அடக்கி அருள் புரிந்த ஆனைமுகர், அப்பெருச்சாளியைத் தம் வாகனமாக்கிக் கொண்டார் என்று கந்தபுராணக் குறிப்புக் கூறுகிறது.

கைவேழ முகத்தவனை(*தும்பிக்கையை உடைய யானை முகத்தவராகிய விநாயகரை*)ப் படைத்தார் போலும், கயா(கயமுகா)சுரனை அவனால் கொல்வித்தார் போலும் என்று அப்பர் சுவாமிகள் பாடுவதும், இதனையே குறிப்பிடுகிறது.

<u>பெரியவருக்குச் சிறிய வாகனம்</u>


“மூஷிஹ வாகனர்”

பிள்ளையாரின் வாகனம் என்னும்போது, சிறிய மூஷிஹம் (மூஞ்சூறு)தான் நினைவுக்கு வரும். ‘பெரியதோர் ஆசாமி சிறியதோர் எலியை வாகனமாகக் கொண்டிருக்கிறாரே, ஏன்?’ என்னும் கேள்வி எல்லோருக்கும் எழுவது இயற்கைதான். அதற்குக் காஞ்சி முனிவர் கூறும் காரணம் வருமாறு: ‘சுவாமி எதை வாகனமாகக் கொண்டிருந்தாலும், வாகனத்தினால் சுவாமிக்குக் கௌரவம் இல்லை; சுவாமியால் வாகனத்துக்குத்தான் கௌரவம். தம்முடைய மூஷிஹத்துக்குக் கௌரவம் கொடுப்பதற்கென, அதன் அமைப்புக்கேற்றவாறு, தம் உடலை நெட்டி போன்று கனமில்லாமல் ஆக்கிக் கொண்டிருக்கிறார். ‘பிள்ளையார் மற்றவர்களை உபகரணமாகக் (instrumental cause) கொண்டு, அவர்களுக்கு ஓர் உயர்வைக் கொடுத்தாலும், தாம் அவற்றுக்குப் பாரமாக இல்லாமல் இருக்கிறார்’ என்னும் பெரிய தத்துவத்தை அவருடைய வாகனம்

நமக்குக் காட்டுகிறது. பக்தர்களுக்கு ஏற்றவாறு பகவான் இருந்து அநுக்கிரகம் செய்கிறார் என்பது இதிலிருந்து புலப்படுகிறது.'

(வாகனத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, அதன் தொடர்பான வேறு சில தகவல்களையும் அறிந்து கொள்ளலாம்:

தொடக்க காலச் சிலைகளில் அவர் வாகனம் இன்றியே காணப்பெற்று வந்தார்.

முத்கல புராணத்தில் (1100 - 1400) அவருடைய எட்டு அவதாரங்கள் குறிப்பிடப் பெறுகின்றன. அவற்றில் ஐந்து அவதாரங்கள் மூஷிஹத்தை வாகனமாகக் கொண்டிருந்தன என்றும், வக்ரதுண்டர் அவதாரம் சிங்க வாகனத்தையும், விகட விநாயகர் மயில் வாகனத்தையும், விக்னராஜர் (ஆதி)சேஷனையும் வாகனங்களாகக் கொண்டிருந்ததாகவும், கணபதி பற்றிய தகவல்கள் அடங்கிய தலையாய மூன்று நூல்களில் - முத்கல புராணம், விநாயக புராணம் (1100 - 1400), கணபதி அதர்வாசீர்ஷம் (16, 17ஆம் நூற்றாண்டுகள்) - ஒன்றான முத்கல புராணம் கூறுகிறது.

விநாயக புராணம் குறிப்பிடும் நான்கு அவதாரங்களில், மகோத்கடருக்குச் சிங்கமும், மயூரேசருக்கு மயிலும், தூம்ரகேதுவுக்குக் குதிரையும், கஜானனருக்கு மூஷிஹமும் வாகனங்களாகச் சித்திரிக்கப் பெறுகின்றன.

ஜைனர்கள் வழிபடும் விநாயகருக்கு மூஷிஹம், யானை, ஆமை, செம்மறியாடு, மயில் ஆகியவை வாகனங்களாகத் திகழ்கின்றன)

நினைவாற்றல், காண்டல், கேட்டல், தனக்கு இழைத்த தீங்கை ஒருகாலும் மறவாமை, மிகுந்த வலிமை உடைமை, அளவற்ற சாந்தமுடைமை, தனக்கு உதவுவோருக்கு உதவுவது ஆகியவை யானையின் குணங்களாகும். இந்தப் பண்புகள் எல்லாம் அமைந்த பெருமானுக்கும் யானைத்தலை அமைந்திருப்பது பொருத்தமானதுதானே? முடிவும், அறிவும் - அதாவது சித்தியும் புத்தியும் விநாயகருடைய திருவடிகளாக அமைகின்றன. அவருடைய பெரிய செவி சர்வஞ்ஞ *(முற்றறிவு)* சக்தியையும், ஏகதந்தம் பரஞானத்தையும், ஒடிந்த தந்தம் அபயத்தையும், லம்போதரம் பொறுமையையும் அறிவிக்கும் அடையாளங்களாகும். (- ச. தண்டபாணி தேசிகர், கணபதி)


நன்றி:

<u>செம்மேனி எம்மான்</u> : வடநாட்டில் விநாயகர் பெரும்பாலும் சிவப்பு நிறத்திலேயே காட்சி தருவார். சிவ குமாரர் சிவப்பு நிறத்தினர்# என்பதை வைத்துச் செந்தூரப் பொடியை வெண்ணெயில் குழைத்து அவர் மீது தடவி விடுகின்றனர். ஆனால், தமிழ்நாட்டில் அத்தகைய திருமேனிகளை அபூர்வமாகவே காணமுடியும். பண்டைக் காலத்தில் உயிர்களைப் பலி கொடுத்து அவற்றின் இரத்தத்தைக் கடவுளர் திருமேனியில் பூசியதாகவும், அதிலிருந்தே பூசை(ஜை) என்னும் சொல் உருவாகியதாகவும், அதன் தொடர்பாகவே இப்போதும் செந்தூரக் கலவையை அவர்மீது சாத்துகின்றனர் என்றும் சான்றோர் கூறுகின்றனர்.

<u>அடிக்குறிப்பு:</u>

\# துப்பார் திருமேனித் தும்பிக்கையான் என்று ஔவை மூதாட்டி பாடுவது குறிப்பிடத்தக்கது. துப்பு = பவளம், red coral.

## <u>எண்ணுரு அநேகர்</u>

*(எண்ணுகின்ற உருவத்தில் அளவில்லாதவர்)*

அடியாருக்கு அருள் பாலிக்கும் பொருட்டு ஆனைமுகன் 32 உருவத் திருமேனிகளைத் தாங்கியிருப்பதாகச் சொல்வர். அவற்றின் உருவ விளக்கங்கள் (தியான சுலோகங்களின் தமிழ் வடிவம்) வருமாறு:



1. <u>பால கணபதி:</u> வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம், கரும்பு, மோதகம் ஆகியவற்றைத் தம் (துதிக்கையுடன் கூடிய) ஐந்து கரங்களில் வைத்திருப்பவர்; காலைக் கதிரவனைப் போன்ற நிறத்தினராகிய பால கணபதியை வணங்குகின்றேன்.



2. <u>தருண கணபதி:</u> நண்பகலில் தோன்றும் கதிரவனைப் போன்ற நிறத்தினர்; தம் எட்டுக் கரங்களில் பாசம், அங்குசம், அபூபம் (உளுந்துவடை, அதிரசம் இரண்டையுமே இது குறிக்கும் - *Rare & Divine*), விளாம்பழம், நாவற்பழம், தம்முடைய ஒடிந்த கொம்பு, நெற்கதிர், கரும்பு ஆகியவற்றை ஏந்தியவர்; இத்தகைய தருண கணபதி எப்போதும் நம்மைக் காப்பாராக.



3. <u>பக்தி கணபதி:</u> சரத்கால *(ஐப்பசியும் கார்த்திகையுமாகிய குளிர்காலம்)* சந்திரனைப் போன்ற வெண்மையான சரீரத்தை உடையவரும், தேங்காய், மாம்பழம், வாழைப்பழம், பாயசம் உள்ள பாத்திரம் ஆகியவற்றைத் தம் நான்கு கரங்களில் தாங்கியவரும் ஆகிய பக்தி கணபதியை வணங்குகின்றேன்.



4. <u>வீர கணபதி:</u> வேதாளம், வேல், அம்பு, வில், சக்ராயுதம், கத்தி, கேடகம், சம்மட்டி, கதை, அங்குசம், நாகம், பாசம், சூலம், குந்தம் *(எறிகோல்)*, மழு, கொடி ஆகிய பதினாறையும் தம் பதினாறு கரங்களில் தாங்கியவர்; சற்றே சினந்த திருமுகத்தை உடையவர்; சிவப்பு நிறத்தினர்; இத்தகைய வீர உருவினரான வீரகணபதியை எப்போதும் தியானிக்கின்றேன். (உணவுப்பொருள் ஏதுமின்றி, ஆயுதங்கள் மட்டுமே ஏந்திய திருவுருவம் இது ஒன்றேயாம்.)



5. <u>சக்தி கணபதி:</u> சந்தியா காலத்தை (*மாலை நேரத்தை*)ப் போன்ற சிவந்த நிறமுடையவர்; பச்சை நிறத்தினளான தேவியை இடக்கையால் அணைத்த வண்ணம் உள்ளவர்; பாசம், அங்குசம் ஆகியவற்றைப் பின் இரு கரங்களில் ஏந்தி, அஞ்சலென்னும் அபய கரத்துடன் அழகுறக் காணப்பெறும் சக்தி கணபதியை வணங்குகின்றேன்.



6. <u>துவிஜ (த்விஜ) கணபதி:</u> நான்கு திருக்கரங்களில் முறையே புத்தகம், ஜபமாலை, தண்டம், கமண்டலம் ஆகியவற்றை ஏந்தியவரும், ஒலி மிகுந்த கங்கணம் முதலான ஆபரணங்களைக் கைகளில் அணிந்துள்ளவரும் ஆகிய த்விஜ கணபதி, நான்கு திருமுகங்களைக் கொண்டவர்; சந்திரனைப் போன்ற வெண்மை நிறத்தினர். இத்தகைய த்விஜ கணபதியைத் தியானிப்போர் பாக்கியசாலிகள்.



7. <u>சித்தி கணபதி:</u> துதிக்கை உட்பட ஐந்து கரங்களில் மாம்பழம், பூங்கொத்து, கரும்புத்துண்டு, எள்ளுருண்டை, பரசு ஆகியவற்றை ஏந்திய சித்தி கணபதி, பொன் கலந்த பசுமை நிறமானவர்; அந்தப் பெருமானை அடி பணிகின்றேன்.



8. <u>உச்சிஷ்ட கணபதி:</u> ஆறு கரங்களில் முறையே நீலோற்பலம் (கருங்குவளை), மாதுளை, வீணை, நெற்கதிர், குன்றிமணியாலான ஜபமாலை, தாமரை ஆகியவற்றை ஏந்தியவர், கருநீலத் திருமேனியரான உச்சிஷ்ட கணபதி. (மடியில் தேவி அமர்ந்திருக்கும் நிலையிலும், தேவி இன்றியும் இத்திருவுருவம் இரு வகையாகக் காணப்பெறுகிறது.) இவர், அடியார் வேண்டும் வரங்களை அருள்பவராகக் கருதப் பெறுகிறார். இந்த உச்சிஷ்ட கணபதி நம்மைக் காப்பாற்றுவாராக!



9. <u>விக்ன கணபதி:</u> சங்கு, கரும்பு, வில், மலரம்பு, கோடரி, பாசம், சக்கரம், ஒடிந்த தந்தம், பூங்கொத்துப் போன்ற சுருட்டிய மாலை, பாணம் ஆகியவற்றைத் தம் கரங்களில் கொண்டிருப்பவர்; அதிகமான அணிகலன்களைப் பூண்டிருப்பவர்; பொன்மேனியர்இந்த விக்ன கணபதி. (மற்றொரு வகை: பாசம், அங்குசம், தம்முடைய தந்தம், மாம்பழம் ஆகியவற்றைத் தரித்திருப்பவரும், முஞ்சூறு வாகனத்தின்மீது அமர்ந்திருப்பவருமான சிவப்பு நிறங்கொண்ட விக்ன கணபதி, நம் இடையூறுகளைப் போக்குவாராக! - *Rare & Divine*)



10. <u>க்ஷிப்ர கணபதி:</u> தந்தம், கற்பகக் கொடி, பாசம், இரத்தின கும்பம், அங்குசம் ஆகியவற்றை ஏந்திய, செம்பரத்தம் பூவைப் போன்ற சிவந்த மேனியரான க்ஷிப்ர கணபதியைத் தியானிப்போம்.



11. <u>ஏ(ஹே)ரம்ப கணபதி:</u> ஆனைமுகங்கள் ஐந்தும், பத்துக் கரங்களும் உடையவர் ஹேரம்ப கணபதி; சிம்ம வாகனத்தினர்; அஞ்சேலென்னும் அபயகரமும், அருள் பாலிக்கும் வரத கரமும் கொண்டவர்; பாசம், தந்தம், ஜபமாலை, அங்குசம், கோடரி, முத்கரம், மோதகம், பழம் ஆகியவற்றைத் தாங்கியவர்; பசுமை கலந்த கருமை நிறத்தினர் (கருமஞ்சள் நிறத்தினர் என்றும் சொல்வதுண்டு). இந்த ஹேரம்ப கணபதி நம்மைக் காப்பாற்றுவாராக!



12. <u>லக்ஷ்மி கணபதி:</u> வரத கரத்தையும் சேர்த்து எட்டுக் கரங்களைக் கொண்டவர்; கிளி, மாதுளை, மாணிக்கக் கலசம், அங்குசம், பாசம், கற்பகக் கொடி., கத்தி ஆகியவற்றை, எஞ்சிய ஏழு கரங்களில் ஏந்தியுள்ளவர்; அமுத வெள்ளம் போன்ற வெண்மை நிறத்தையும், நீலோற்பல மலர்களையும் ஏந்திய இரு பெருந் தேவியரோடு திகழ்பவரான லக்ஷ்மி கணபதி நம்மைக் காப்பாராக.



13. <u>மகா கணபதி:</u> மாதுளை, கதை, கரும்பு வில், சக்கரம், தாமரை, பாசம், நீலோற்பலம், நெற்கதிர், தந்தம் ஆகியவற்றைக் கரங்களிலும், இரத்தின கலசத்தைத் தும்பிக்கையிலும் கொண்டு விளங்குபவர் மகா கணபதி; இடக்கையால் தாமரை ஏந்திய கரத்தினளான தேவியைத் தழுவிக் கொண்டிருக்கிறார்; செங்கதிர் போன்ற நிறத்தினர்; முக்கண்ணர்; பிறை சூடிய இப்பேரருளாளரை வழிபட்டு உய்வு பெறுவோம்.



14. <u>விஜய கணபதி:</u> பாசம், அங்குசம், தந்தம், மாம்பழம் ஆகியவற்றை ஏந்திப் பெருச்சாளி வாகனத்தில் அமர்ந்திருக்கும் செந்நிற விஜய கணபதி நம்மைக் காப்பாற்றட்டும்.



15. <u>நிருத்த (நர்த்தன) கணபதி:</u> பொன் போன்ற (மஞ்சள்) நிறமுடையவர்; கற்பக மரத்தினடியில் ஆனந்த நடனமிடும் நிருத்த கணபதி, மோதிரங்கள் அணிந்த விரல்களை உடைய கைகளில் பாசம், அங்குசம், அதிரசம், கோடரி அல்லது தந்தம் ஏந்தியிருப்பவர். ஆனந்த நடமிடும் இந்த நிருத்த கணபதி, நம் அல்லல்களைப் போக்குவாராக!



16. <u>ஊர்த்துவ கணபதி:</u> செங்கழுநீர்ப்பூ, நெற்கதிர், தாமரைப்பூ, கரும்பு வில், அம்பு, தந்தம், கதை ஆகியவற்றை ஏந்தி, இடக்கையால் பச்சை நிறமுடைய தேவியைத் தழுவிய வண்ணம் காணப் பெறும் ஊர்த்துவ கணபதி, நமக்கு மங்களத்தை அருளட்டும்!



17. <u>ஏகாட்சர கணபதி:</u> செந்நிறமானவர்; செம்பட்டு ஆடை உடுத்தவர்; சிவப்பு மலர்மாலை அணிந்தவர்; பிறை முடியர்; முக்கண்ணர்; குறுகிய தாள்களையும், கைகளையும் உடையவர்; மாதுளை, பாசம், அங்குசம், மோதகம் ஆகியவற்றைத் தாங்கி, வரத கரத்தோடு கூடியவர் ஏகாட்சர கணபதி.



18. <u>வர கணபதி:</u> செவ்வண்ணர்; முக்கண்ணர்; பிறை முடியர்; பாசம், அங்குசம், தேன் நிறைந்த கபால பாத்திரம் ஆகியவற்றைக் கரங்களில் தாங்கியிருப்பவர் வர கணபதி. (சில திருமேனிகளில் தேவியையும் காணலாம்)



19. <u>திரயாக்ஷர கணபதி:</u> அசைகின்ற செவிகளாகிய சாமரை(ரங்)களை உடையவர், பொன்னிறமான திருமேனி தாங்கிய திரயாக்ஷர கணபதி; தம் நான்கு கரங்களில் பாசம், அங்குசம், தந்தம், மாம்பழம் ஆகியவற்றைத் தாங்கியிருக்கிறார்; துதிக்கை நுனியில் மோதகம் காணப்பெறும்.



20. <u>க்ஷிப்ரபிரசாத கணபதி:</u> திருவாபரணங்கள் நிறைந்த திருமேனியினர் க்ஷிப்ரபிரசாத கணபதி; பாசம், அங்குசம், கற்பகக் கொடி, சுவை நிறைந்த மாதுளை, தாமரை, தந்தம் ஆகியவற்றைத் தாங்கியவர்; பேழை வயிற்றினர்.



21. <u>ஹரித்திரா கணபதி:</u> மஞ்சள் நிறத் திருமேனியினரான ஹரித்திரா கணபதி, தம் நான்கு கரங்களில் பாசம், அங்குசம், தந்தம், மோதகம் ஆகியவற்றை ஏந்தியவர்; அடியாருக்கு அருள் பாலிப்பவர்.



22. <u>ஏகதந்த கணபதி:</u> பேழை வயிற்றினர்; நீல மேனியர்; கோடரி, அட்சமாலை, லட்டு, தந்தம், ஆகியவற்றைத் தம் திருக்கரங்களில் தாங்கியுள்ளவர் ஏகதந்த கணபதி.



23. <u>சிருஷ்டி கணபதி:</u> பாசம், அங்குசம், தந்தம், மாம்பழம் ஆகியவற்றைத் தம் கரங்களில் ஏந்திச், சிவந்த திருமேனியுடன் பெருச்சாளி வாகனராகத் திகழும் சிருஷ்டி கணபதி, நம் இடையூறுகளைக் களைவாராக.



24. <u>உத்தண்ட கணபதி:</u> அழகிய தாமரை மலரைத் தாங்கியிருக்கும் பொன் மேனியளாகிய தேவியால் தழுவப் பெற்றிருப்பவர் உத்தண்ட கணபதி; சிவந்த மேனியினரான இவர், தம் கரங்களில் நீலோற்பலம், தாமரை, மாதுளம்பழம், கதை, தந்தம், கரும்பு வில், இரத்தின கலசம், பாசம், நெற்கதிர், மாலை, அங்குசம் ஆகியவற்றைக் கொண்டிருப்பவர்.



25. <u>ரணமோசன கணபதி:</u> பாசம், அங்குசம், தந்தம், நாவற்பழம் ஆகியவற்றைக் கரங்களில் கொண்டிருப்பவர்; வெண்பளிங்கு போன்ற நிறத்தினர்; செந்நிறப் பட்டாடை தரித்தவர்.



26. <u>துண்டி கணபதி:</u> அட்சமாலை, கோடரி, இரத்தின கலசம், தந்தம் ஆகியவற்றை ஏந்தியிருப்பவர்.



27. <u>துவிமுக கணபதி:</u> இரு முகங்களைக் கொண்டவரான துவிமுக கணபதி, மயில் போலும் பசுநீல மேனியர்; செம்பட்டாடை உடுத்தவர்; இரத்தின கிரீடம் தரித்தவர்; தம்முடைய நான்கு கரங்களில் தந்தம், பாசம், அங்குசம், இரத்தின பாத்திரம் ஆகியவற்றைத் தாங்கியிருப்பவர்.



28. <u>மும்முக (திரிமுக) கணபதி:</u> மும்முகத்தினர்; புரசம்பூப் போன்ற சிவந்த திருமேனியர்; பொற்றாமரை ஆசனத்தின் பொகுட்டில் (pericarp of the lotus) அமர்ந்திருப்பவர்; வலப்பக்க முன்கை வரதகரமாகவும், இடப்பக்க முன்கை அபயகரமாகவும் கொண்டிருப்பவர்; மற்ற நான்கு கரங்களில் அங்குசம், அட்சமாலை, அமுத கலசம், பாசம் ஆகியவற்றைத் தாங்கியிருப்பவர்.



29. <u>சிங்க(ம்ம) கணபதி:</u> வீணை, கற்பகக் கொடி, சிங்கம், தாமரை, இரத்தின கலசம், பூங்கொத்து ஆகியவற்றைத் தாங்கி, வல-இட முன் கரங்கள் முறையே வரத-அபய கரங்களாகவும் அமைந்தவர்; வெண்ணிற மேனியர்; யானை முகத்தினர்; பெயருக்கேற்பச் சிங்க வாகனத்தில் எழுந்தருளியிருப்பவர். (சில திருமேனிகள் பத்மபீடத்தில் எழுந்தருளியிருக்கவும் காணலாம்)



30. <u>யோக கணபதி:</u> யோக பட்டம் (strap used by a yogi sitting on his hams, to bind his folded legs with the body) தரித்து யோகநிலையில் காணப்பெறுவது இத்திருமேனி. இளங் கதிரவன் போன்ற நிறத்தோடு ஒளிர்பவர்; இந்திரநீல (*நீலமணி, sapphire*) நிற ஆடை தரித்தவர்; பாசம், அட்சமாலை, யோக தண்டம், கரும்பு ஆகியவற்றைக் கரங்களில் தாங்கியிருப்பவர்.



31. <u>துர்கா கணபதி:</u> உருக்கிய பசும்பொன் நிறத்தினர்; எட்டுக் கைகளோடு கூடிய பெரிய திருமேனி; அங்குசம், பாணம், அட்சமாலை, தந்தம் ஆகியவற்றை வலக்கரங்களிலும், பாசம், வில், கொடி, நாவற்பழம் ஆகியவற்றை இடக்கரங்களிலும் கொண்டவர் துர்கா கணபதி; செந்நிற ஆடை உடுத்தவர்.



32. <u>சங்கடஹர கணபதி:</u> இளஞ்சூரியன் போன்ற நிறத்தோடு, இடது தொடையில் அம்மையை அமர்த்திக் கொண்டிருப்பவர்; பொன்னிற மேனியளாகிய அம்மை, நீல மலரை ஏந்தியிருக்கக் காணப்பெறுவார்; முன் வலக்கை வரதகரமாக அமைந்த சங்கடஹர கணபதி, மற்றொரு வலக்கரத்தில் அங்குசத்தையும், இடக்கரங்களில் பாசம், பாயச பாத்திரம் ஆகியவற்றையும் தாங்கியிருப்பார்; நீல நிற ஆடை அணிந்து, செந்தாமரைப் பீடத்தில் அமர்ந்திருப்பவர் இந்தக் கணபதி.

(நன்றி: எஸ். நாராயணசுவாமி, *தெய்வத் திருமேனிகளின் தியானம் - யந்திரம் - மந்திரம்; Rare & Divine*)

இந்த 32 திருவுருவங்களுக்குரிய வடமொழித் தியான சுலோகங்கள், சிற்பி திரு. தி.பா. கணேசமூர்த்தியால் தமிழில் கவிதையாக வடிக்கப் பெற்றுள்ளன. ஆலய விக்கிரக நிருமாண ஆயாதி சிற்ப இரகசியம் என்னும் நூலில் இடம்பெற்றுள்ள அப்பாடல்கள், பின்னர், பாராயணத்திற்குரிய பாடல்கள் பகுதியில் (பக். 184) இடம் பெறுகின்றன)

(இவை தவிரப், பால-தருண-பக்த-வீர-சக்தி-த்வஜ-பிங்கள-உச்சிஷ்ட-விக்நராஜ-க்ஷிப்ர-ஹேரம்ப-லக்ஷ்மி-மஹா-புவனேச-நிருத்த-ஊர்த்துவ கணபதியரின் திருமேனிகளைக் கொண்ட ஷோடச (16) விநாயக தியான சுலோகங்களும் நூல்களில் காணப்பெறுகின்றன)

## யோகீஸ்வரர்

பிள்ளையார் என்றால் உடனே தோப்புக்கரணத்தைத்தான் நினைத்துக் கொள்ளுகிறோம். மற்ற சுவாமிகள் மாதிரி இவர் ரொம்ப சிரமம் தருகிற சுவாமி இல்லை.

பெருமாள் என்றால் அங்கப் பிரதக்ஷிணம், "முழங்கால் முறிச்சான்" மலை ஏறணும். முருகனுக்குக் காவடி என்று பெரியதாகக் கட்டித் தூக்கிக் கொண்டு மைல் கணக்காக மலை ஏறிப் போக வேண்டும். (அலகு, செடில் குத்திக் கொள்வது என்றெல்லாம் உண்டு). ஈஸ்வரனுக்கோ ஒரே பசியும் பட்டினியுமாய் உபவாசம் இருக்கவேண்டும். இப்படியெல்லாம் இல்லாமல் ரொம்பக் கொஞ்சமாக வேலை வாங்குகிறவர், மிகக் குறைந்த சிரமமே தருகிறவர் பிள்ளையார்தான் *(-காஞ்சிப் பெரியவர்).*

நெற்றிப்பொட்டில் (temple of the forehead; the flat portion on either side of the head above the cheek bone) குட்டிக் கொள்வதும், தோப்புக்கரணம் போடுவதும் விநாயகர் வழிபாட்டில் தலையாய இடத்தை வகிக்கின்றன.

நெற்றிப் பொட்டில் குட்டிக் கொள்வதால், சுஷும்னா என்னும் நாடி சுறுசுறுப்படையக் குழப்பம் நீங்கித் தெளிவு பிறக்கிறது. (The devotee is called upon to stroke gently with closed fists on both temples. When this is done in the morning it produces vibrations in the veins that bestows on the performer a singular joy and strength).

தோர்பி கர்ணம் என்பதே தோப்புக்கரணம் ஆகியது என்பர். தோர்பி என்றால் கைகளினால்; கர்ணம் என்றால் காது. கைகளினால் காதைப் பிடித்துக் கொள்வது என்பது இதன் பொருள். இவ்வாறு பிடித்துக்கொண்டு உட்கார்ந்து எழுவது சிறந்த உடற்பயிற்சி ஆகிறது. (The devotee, with his hands, hold the lobes of his ears crosswise and in this posture come down on his knees and rise up (thrice). It is said that the pendent lobes are the confluence of certain veins. When gentle tugging is done while knees bend, the veins are activated. Such bending exercises of the body parts regulate breathing through mild changes and devise ways and means for the mind's upliftment. So says the science of yoga. By such exercises the body feels refreshed and mind experiences welcome changes).

## குடும்ப விவகாரம்

இறைவனின் நெற்றிக்கண்ணிலிருந்து எழுந்த ஆறு தீப்பொறிகளே ஆறுமுகனாயின என்பது போன்று, விநாயகரும் சிவபெருமானின் நெற்றியிலிருந்து தோன்றியவர்தாம் என்று வராக புராணம் கூற, சிவபெருமானின் சிரிப்பிலிருந்து விநாயகர் தோன்றியதாக மற்றொரு புராண வரலாறு குறிப்பிடுகிறது. பிரமகைவர்த்த புராணமோ, கணபதியைக் கண்ணனின் அவதாரமாக்குகிறது.

தென்னவர் வழிபாட்டில் ஆனைமுகத்தவரே மூத்தபிள்ளை என்னும் முதல் மரியாதைக்கு உரியவரானாலும், வடநாட்டில் (ஸ்)கந்தனுக்கே அந்த மூத்த இடத்தை வழங்கும் வழக்கு நிலவுகிறது.



வட இந்தியாவில் விநாயகரைச் சித்தி - புத்தி என்னும் இரு தேவியரை உடன் வைத்து வழிபடுகின்றனர். ஆனால் தமிழ்நாட்டில் பெரும்பாலும் இவர் பிரம்மச்சாரியே. சித்தி - புத்தி என்னும் இரு தத்துவங்களையே, விநாயகரின் தேவியர் என்று உருவகமாகச் சொல்லியிருக்கின்றனர் என்பர். விநாயகரை வழிபட்டால், சித்தி *(நற்பேறு)*, புத்தி *(நல்லறிவு)* ஆகியவற்றைப் பெறலாம் என்பார்கள்.

விநாயகருக்கு **க்ஷேமம்** (நல்வாழ்வு), **லாபம்** என்னும் இரு புதல்வர்கள் இருப்பதாகச் சிவபுராணம் கூறுகிறது. வடக்கே இது **சுபம், லாபம்** என மாற்றிக் கூறப் பெறுகிறது. விநாயகர் வழிபாடு நல்வாழ்வை நல்கும் என்னும் தத்துவத்தின் அடிப்படையில் எழுந்ததாகவே இதைக் கருத வேண்டும்.

## காண(ா)பத்தியம் (Ganapatya)

*(கணபதியை முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபடும் சமயம்)*

இந்தியாவின் மகாராஷ்டிர மாநிலத்தில்தான் கணபதியை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் **காணாபத்தியம்** மிகுதியாக வழக்கில் உள்ளது.

9ஆம் நூற்றாண்டில் வழக்கிற்கு வந்த இந்தக் காணாபத்திய வழிபாட்டைத் தொடர்ந்தே, விநாயகர் வழிபாடு மக்களிடையே பிரபலமானது.

வைதிகர்களிடையே (வேதநெறியைப் பின்பற்றுவோர், those living in conformity with Vedic precepts) நிலவும் தெய்வபேதத்தை அகற்றும் முயற்சியாக, 9ஆம் நூற்றாண்டினராகக் கருதப்பெறும் (ஆதி)சங்கரர் வகுத்த வழிபாட்டு முறை **பஞ்சாயதன பூசை** என்பது. **மார்க்கண்டேய சம்ஹிதையின்** 72ஆவது கண்டம், 7ஆவது பரிஸ்பந்தம், 27ஆவது சுலோகத்தில் **பஞ்சாயதநார்ச்சநம் ப்ரகர்த்தவ்யம்** என்று கூறப்பெறுவதன் அடிப்படையில் எழுந்ததே இந்தப் பஞ்சாயதன வழிபாட்டு முறை. ஈஸ்வரன் (சிவன்), விஷ்ணு, அம்பிகை, விக்னேஸ்வரர், சூரியன் ஆகிய ஐந்து கடவுளரை முதன்மைப்படுத்தி, **சைவம், வைணவம், சாக்தம், காணாபத்யம், சௌரம்** என்னும் ஐந்து பிரிவுகளாக இந்த வழிபாட்டு முறை அமைந்துள்ளது.



**பாண லிங்கங்கள்**

இந்தப் பூசை முறையில், கண் - காது - மூக்கு வைத்துத் திருமேனி அமைக்க வேண்டும் என்றில்லாமல், இயற்கையில் கிடைக்கும் கற்களே போதுமானவை என்று சொல்லப் பெற்றிருக்கிறது. (சிவனுக்கு நர்மதாபாணம், விஷ்ணுவுக்கு சாளக்கிராமம், அம்பிகைக்கு ஸ்வர்ண ரேகா சிலா, **விநாயகருக்கு நேபாளத்தில் கிடைக்கும் சிவப்பு வண்ணம் கொண்ட சோணபத்திரக் கல்**[@], சூரியனுக்கு ஸ்படிகம் ஆகியவை கூறப்பெற்றுள்ளன)

---

அடிக்குறிப்பு:

@ சோணபத்ரம் தோன்றிய வரலாறு: சிந்தூரன் என்னும் அசுரனை அழிப்பதற்காக விநாயகர் உமையம்மையின் வயிற்றில் கருவாக வளர்ந்து வந்தார். அதை அறிந்த அசுரன், அம்மை அறியாத வகையில் கருவைக் கலைத்துக் கவர்ந்து வந்து, நர்மதை ஆற்றோரமாக அதை வீசிச் சென்றான். அந்தக் கருவின் சிரம் விழுந்த இடம் கணேச குண்டம் என்னும் பெரும்





**நர்த்தன கணபதியின் நளினத் தோற்றங்கள்**

(திருப்போரூர் கனகசபை)

(நன்றி: திருத்தொண்டர் புராணம்)

(தாயுமானவர் கோயில், திருச்சி)

(நன்றி: விநாயகர் பெருமை)

(சூரியனுக்குக்கூடப் பரம்பொருள் தகுதியை வழங்கிய சங்கரர், மலையும் மலைசார்ந்த பகுதிகளும் அடங்கிய குறிஞ்சி நிலத் தலைவனான முருகன் (Muruhan as the god of the hilly tracts), தமிழ்த் தெய்வம் என்பதாலோ என்னவோ, தம் பஞ்சாயதன பூசையில் முருகனுக்கு முக்கியத்துவம் வழங்கவில்லை. பின்னர் நடைமுறைக்கு வந்த **ஷண்மத** (The six Vedic religious system, ஆறு வைதிக சமய) வழிபாட்டில்தான் முருக வழிபாடு **கௌமாரம்** என்னும் பெயரில் இடம்பெறலாயிற்று)

காணாபத்ய ராஜதானியாகக் கருதப்பெறும் மகாராஷ்டிர மாநிலத்தில், **அஷ்ட விநாயகர்** என்று எட்டுப் பிள்ளையார்களுக்கான எட்டுத் தலங்கள் இருக்கின்றன. அவர்களில் **மயூரேசர்** என்னும் பிள்ளையாருக்கும், அவர் வீற்றிருக்கும் **மோர்காம்** என்னும் தலத்துக்கும் சிறப்பு அதிகம். பிள்ளையாரைச் சுற்றி அவருடைய பரிவார தேவதைகள் இருக்க வேண்டிய முறையிலேயே, மோர்காமைச் சுற்றிப் பரிவார தெய்வங்களாக எட்டுக் கோயில்கள் அமைந்துள்ளன.

வடக்கே **மயூரேசம்** (ஸ்வானந்தேசர்), **ஹளபேடு** (நர்த்தன கணபதி), **காசி** (டுண்டி விநாயகர்), **பாலி** (கல்லாள கணபதி), **விஜயபுரி** (விக்னராஜர்), **தேவூர்** (பிரும்ம வரதர்), **மட்** (வரத விநாயகர்), **சித்தடேக்** (மதுகைடபர்) ஆகியவை **அஷ்ட (எட்டு) கணபதித் தலங்களாகக்** கூறப்பெறுகின்றன.

அத்தலத்தின் தலபுராணத்தில், தமிழ்நாட்டில் உள்ள திருமுறைத் தலமான **திருவலஞ்சுழி, தக்ஷிணாவர்த்தம்** என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. (தக்ஷிணம் - *வலம்*, ஆவர்த்தம் - *சுழி*) அந்தத் திருவலஞ்சுழிதான் பிள்ளையாரின் ராஜதானி *(தலைநகர்)* என்று கூறி அதற்குச் சிறப்புச் சேர்க்கிறது அந்தத் தலபுராணம். அத்தலத்தில் உள்ள விநாயகர் வலம்புரியாக இருப்பது போன்றே, அத்தலத்தை ஒட்டி ஓடும் காவேரி ஆறும் வலப்பக்கமாகவே ஓடுகிறது.

திருவலஞ்சுழியில் கோயிலினுள் உள்ளவரே வலஞ்சுழிப் பிள்ளையார். வெளியில் இருக்கும் வெள்ளைப் பிள்ளையார் (சுவேத விநாயகர்) இடம்புரிதான். அவர் வீற்றிருக்கும் மண்டபம் வேலைப்பாடு மிகுந்தது. அங்கு உள்ள சலவைக்கல் பலகணி (ஜன்னல்), ஷோடச கணபதி என்று சொல்வதற்கேற்பப் பதினாறு நுட்பமான துவாரங்களைக் கொண்டிருக்கிறது. பதினாறுதான் பூரணத்துவம்; **ஷோடச கலாபூர்ணம்** என்பது வழக்கு. *(- இவை காஞ்சிப் பெரியவர்கள் வெளியிட்ட தகவல்கள்)*

## ஆனைமுகன் வழிபாட்டிலும் ஆறு பிரிவுகள்

ஆறு சமய வழிபாட்டில் ஒன்றான காணாபத்தியத்திலும் ஆறு பிரிவுகள் காணப்பெறுகின்றன என்று, ஆதிசங்கரரின் வரலாற்றைக் கூறும் **சங்கர திக்விஜயம்** என்னும் நூலில் **ஆனந்தகிரி** குறிப்பிடுகிறார். கணபதியையே பரம்பொருளாகக் கொண்டுள்ள அவர்கள், வெவ்வேறு வடிவங்களில், வெவ்வேறு மந்திரங்களால் அவரை வழிபடுகின்றனர்.

முதற் கூட்டத்தார் மகா கணபதியை வழிபடுகின்றனர்; பத்துக் கரங்களைக் கொண்டு, சக்தியோடு கூடிய நிலையில், செம்மை நிறத்தில் இந்த வடிவம் தியானிக்கப்பெறுகிறது.

---

அடிக்குறிப்பு:

(முன் பக்கத் தொடர்ச்சி)

பள்ளமாகியது. சிரத்திலிருந்து பெருக்கெடுத்த இரத்தம் ஆறாகப் பெருக்கெடுத்துச் சோணநதி (சோணம் = சிவப்பு)ஆகியது. கணேச குண்டத்தின் அருகிலிருந்த சிலைகள் நொருங்கிக் குண்டத்தினுள் விழுந்து, ஆனைமுகனைப் பிரதிநிதிக்கும் புனிதக் கற்கள் ஆயின.அந்தச் சுயம்பு மூர்த்தியை (சோணபத்திரக் கல்லை) வீட்டில் வைத்து வழிபடுவோர், அறம் - பொருள் - இன்பம் - வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களையும் பெறுவர் என்று கணேசமூர்த்தி அருள் பாலித்திருக்கிறார் - *பார்க்கவ புராணம்*

மூன்று கண்களையும் நான்கு கைகளையும் கொண்டுள்ள மஞ்சள் நிறத்தினரான ஹரித்ரா கணபதியை வழிபடுவோர் இரண்டாவது பிரிவினர். இவர்கள் ஒரு தந்தத்தோடு கூடிய விநாயகரின் யானை முகத்தைத் தங்கள் கைகளில் பச்சை குத்திக் கொள்கின்றனர்;

உச்சிஷ்ட கணபதியை வழிபடுவோர் மூன்றாவது பிரிவினர். நான்கு கரங்களைக் கொண்ட இந்த மூர்த்தம், சக்தியோடு கூடியிருக்கிறது. இப்பிரிவினரின் நெற்றியில் சிவப்பு அடையாளம் ஒன்று காணப்பெறும். இடக்கை முறைகளைப் பின்பற்றும் இவர்களிடம் ஜாதி வேறுபாடு போன்ற கட்டுப்பாடுகள் இல்லை;

எஞ்சிய மூன்று பிரிவினர், முறையே நவநீத கணபதி, சுவர்ண கணபதி, சந்தான கணபதி ஆகிய மூன்று வடிவங்களை வழிபடுகின்றனர். இவர்கள் அனைவரும் தாங்கள் வேத மார்க்கத்தைப் பின்பற்றுவதாகக் கூறிக்கொள்கின்றனர்.

## <u>கோலமும் பலபல உடையார்</u>

*(பல்வேறு கோலங்கள் கொண்டவர்)*

வாராணசி (*காசி*)யில் விசுவநாதர் கோயிலின் எட்டுத் திக்குகளிலும் எட்டு விநாயகர்கள் (துண்டி விநாயகர், துர்க்க கணபதி, தேஹளீ கணபதி, உத்தண்ட கணபதி, பாசபாணி கணபதி, துர்வ கணபதி, பீமசண்ட கணபதி, சித்தி கணபதி) உள்ளனர்#. இவர்களில் ஒருவரான து(டு)ண்டி விநாயகர், விசுவநாதர் - அன்னை அன்னபூரணி கோயில்களுக்குச் செல்லும் சந்தில் உள்ள சிறியதோர் இடத்தில் ஏனைய விநாயக மூர்த்தங்களைப் போன்று இல்லாமல், யானை வடிவமாகவே ஒரு காலை மடித்து வீற்றிருக்கிறார். வட இந்திய அமைப்பில் இவரும் எந்நேரமும் செந்தூரம் பூசப்பெற்றே காணப்பெறுகிறார்.

டுண்ட்னா என்றால் தேடுதல் என்று பொருளாம்; விசுவநாதரைத் தரிசிக்க வரும் உண்மையான பக்தர்களைத் தேடிக் கண்டு பிடித்து அவர்களுக்கு முகமன் (greetings) கூறி அருளாசி வழங்கி, விசுவநாதர் கோயிலுக்கு அனுப்பி வைப்பதால், இவருக்கு இந்தப் பெயராம்.

துராசாரன் என்னும் அசுரனைக் கொல்லும் பொருட்டுப் பார்வதி தேவி ஐந்து முகங்களும், பத்துக் கரங்களும் கொண்டிருக்க அதிலிருந்து இம்மூர்த்தம் தோன்றியது என்றும், அதனால் இவருக்கு வக்கிரதுண்டர் என்னும் பெயரும் உண்டு என்றும் கூறுகின்றனர். இவரை வழிபட்டாலே போதும்; காசியில் உள்ள மற்ற விநாயகர்களை வழிபட்டதாகிவிடும் என்று ஜபல்பூர் நாகராஜ சர்மா கூற *(- பன்னிரு ஜோதிர்லிங்கத் தலங்கள்)*, எல்லாத் தெய்வங்களையும் வழிபட்ட பலனும் கிட்டிவிடும் என்று சித்தாந்த வித்தகர் முரு.பழ. இரத்தினம் செட்டியார் கூற *(- ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்)*, இந்த டுண்டி விநாயகர் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவராகி விடுகிறார்.

"தந்தையைப் பூசிக்கும் தனயன்"

தென்னகத்தின் பிள்ளையார்பட்டியில் உள்ள கற்பக விநாயகர் திருமேனியும் சற்று வித்தியாசமானதே. கி.பி. 4ஆம் நூற்றாண்டுக்கும் 6ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் இவ்விநாயகர் திருமேனி உருவாக்கப் பெற்றிருக்க வேண்டும் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர் (காலம் குறித்த ஆய்வுத் தகவல்கள் பின்னர் இடம்பெறுகின்றன). குடைவரைக் கோயிலாகத் திகழும் திருவீசர் என்னும் திருவீங்கைக்குடி மகாதேவர் கோயிலில், 1.83மீட்டர் உயரத்தில் அர்த்த சித்திரமாக (Bas-relief) அமர்ந்திருக்கிறார் இந்தக் கற்பக விநாயகர் என்னும் தேசி விநாயகர். ஒட்டிய வயிறும், இரு கரங்களும், வலப் பக்கம் வளைந்த

<u>அடிக்குறிப்பு:</u>

# இந்த எட்டு மூர்த்தங்கள் தவிரக், காசித் தலத்தின் சத்தாவரணத்தில் (ஏழு சுற்றுகளில்) 56 விநாயக மூர்த்தங்கள் பிரதிஷ்டை செய்யப்பெற்றிருப்பதாகவும் பார்க்கவ புராணம் கூறுகிறது.

தும்பிக்கையுமாக வீற்றிருக்கும் இத்திருமேனியின் வலக்கையில் சிவலிங்கம் உள்ளது. தந்தையை வழிபடும் தனயன் இப்போது மிகப் பலரால் வழிபடப் பெறுகிறார்.



“குடைவரைக் குணேசர்”

75 செ.மீ. உயரத்தில் அமைந்த இத்தகைய இருகை விநாயகர் சிற்பம் ஒன்று, குன்றக்குடிக் குடைவரைக் கோயிலிலும் காணப்பெறுகிறதாம். இவை போன்ற சிற்பங்கள் வேறு எங்கும் காணக் கிடைக்கவில்லை என்று, தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை மேனாள் இயக்குநர் இரா. நாகசாமியை மேற்கோள் காட்டி, டாக்டர் தேனப்பன் கூறுகிறார்.

பிள்ளையார்பட்டி விநாயகர் சிலையின் அருகில் அச்சிற்பத்தைச் செதுக்கிய சிற்பியின் பெயர் (எக்காட்டூரு, க்கோன் பெருந்தச்சன்) இரு வரிகளில் செதுக்கப் பெற்றுள்ளது. அவ்வெழுத்துகள் ஆதி காலத் தமிழ் எழுத்து வடிவமான தமிழி என்பதைச் சேர்ந்ததாகும் என்றும், அவ்வெழுத்துகளின் காலம் கி.பி. நான்காம் நூற்றாண்டு என்றும், அதைக் கொண்டு பார்க்கும்போது, அச்சிற்பம் கி.பி. 3 அல்லது 4ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்றும் கம்பன் அடிப்பொடி சா. கணேசன் கருதுவதாக டாக்டர் தேனப்பன் கூறுகிறார்.



பிள்ளையார்பட்டிக் கல்வெட்டு
(நன்றி: *ஒன்பது நகரக் கோயில்கள்*)

அவ்வெழுத்து வடிவம், தமிழி எழுத்தின் முதிர்ந்த நிலையில் இருப்பதால், அக்குடைவரைக் கோயிலின் காலம் கி.பி. ஆறாம் நூற்றாண்டு என்பது டாக்டர் நாகசாமியின் ஆய்வு. கி.பி. 630 முதல் 668 வரை ஆண்ட முதலாம் நரசிம்மவர்மன் காலத்தில் இந்தக் குடைவரைக் கோயில் திருப்பணி நிகழ்ந்திருக்கக்கூடும் என்று சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர். *(தகவல்: செட்டிநாடும் செந்தமிழும்)*

ஆறாம் நூற்றாண்டின் இறுதியாகத்தான் அது இருக்க வேண்டும் என்பதை அங்குள்ள தூண் அமைப்புகள் குறிப்பிடுவதாக ஆய்வாளர் வெ. வேதாசலம் அறுதியிடுகிறார். *(- ஒன்பது நகரக் கோயில்கள்)*

தமிழ்நாட்டின் கன்னியாகுமரி மாவட்டத்தில் பத்மநாபபுரத்துக்கு அருகில் கேரளபுரம் என்னும் சிற்றூர் உள்ளது. அவ்வூர்ச் சிவாலயத்தின் ஆலமரத்தடியில் உள்ள விநாயகர், ஆவணி முதல் ஆறு மாதங்களுக்கு வெள்ளை நிறமாகவும், மாசியிலிருந்து அடுத்த ஆறு மாதங்களுக்குக் கறுப்பு நிறமாகவும் காணப்பெறுவாராம். இச்சிலை சந்திரகாந்தக் கல்லால் (Moonstone) உருவானது என்று கூறுகிறார்கள். (- புலவர் சு. வடிவேலன், *கணபதி வரலாறு*)

சுசீந்திரம் தாணுமாலயன் கோயிலின் அம்பிகை சந்நிதிக்கு எதிரில், விநாயகர், பெண்மைக் கோலத்தில் **கணேசானி**யாகத் தரிசனம் தருகிறார். சுகாசன நிலையில் (a yogie posture characterized by ease and comfort) பாசம் - அங்குசம் ஏந்தி, அபய - வரத முத்திரைகளுடன் அவர் காணப்பெறுகிறார். ஜபல்பூருக்கு அருகில் பேரேகாட் என்னும் இடத்திலும் இத்தகைய கணேசானியைக் காணலாம். மதுரைக் கோயிலின் கம்பத்தடி மண்டபத்தில் வியாக்கிரபாத கணேசானியைத் தரிசிக்கலாம். (- ந.ரா. முருகவேள், *விநாயகர் பெருமை*).

வடநாட்டின் உத்தரப் பிரதேச மாநிலத்தின் நிகியானில் பரியங்காசன விநாயகியாகவும், ராஜஸ்தானத்தின் ஹர்ஷநகரில் மகுடம் தரித்த விநாயகியாகவும், தென்னகத்தின் நெல்லை மாவட்டத்தில் உள்ள வாசுதேவ நல்லூரில் போர்க்கால விநாயகியாகவும், நாகர்கோவிலின் வடிவீஸ்வரத்தில் வீணை இசைக்கும் விநாயகியாகவும் ஆனைமுகன் அருள் பாலிப்பது கண்கொள்ளாக் காட்சியாகும். (- சுப.அருணாசலம், *சிங்கப்பூர் ஸ்ரீ லயன் சித்தி விநாயகர் கோயில் குடமுழுக்கு விழா மலர்*)



ஸ்ரீ பஞ்சமுக ஹேரம்ப கணபதி

(ஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள் அதிஷ்டானம்,
புதுக்கோட்டை)

(நன்றி: RARE & DIVINE)



மாணிக்க விநாயகர்

(திருச்சிராப்பள்ளி)

(நன்றி: அலங்காரம் நடராஜ ஐயர்)

ஆண் உருவில் இருந்துகொண்டு, அடியார்களுக்கு அருள் பாலிப்பதற்காகப் பெண் வேடமிடும் ஒரு விநாயகரைச், செட்டிநாட்டின் நாட்டரசன்கோட்டையை அடுத்துள்ள **வாணியங்குடியில்** காண்கிறோம். கோயில் பெயர் அடைக்கலங்காத்த அன்னை திருக்கோயில்; மூலவர் திருமேனியின் கீழ் பிரதிஷ்டை செய்யப்பெற்றிருக்கும் இயந்திரத்தகடு அம்பாளுக்கு உரியது; ஆனால் மூலவரோ விநாயகர். உருவம்தான் விநாயகரே தவிர, எந்த நேரமும் அவர் அன்னை உருவிலேயே காட்சி தருகிறார். தனயனைக் காட்டிலும் தாயிடம் முறையிட்டால் ஆதரவு - அரவணைப்பு அதிகமிருக்கும் என்னும் நம்பிக்கையில், அந்த விநாயகரை அடைக்கலங்காத்த அன்னையாக அந்த ஊராரும், அக்கோயிலுக்கு அடிமைப்பட்ட நகரத்தார்களும் வழிபடுகிறார்களாம். *(- நகரத்தார்களின் குலதெய்வங்கள்)*

**வேலூர்க்** கோட்டையில் திருமண மண்டபத்தில், தவழும் கண்ணனைப் போன்று குழந்தை வடிவில் கணபதி காட்சி தருகிறார். ஆந்திர மாநிலத்தின் **ஸ்ரீசைலத்தில்** (தேவாரத் தலம் - திருப்பருப்பதம்) கண்ணனைப் போன்று குழலூதும் நிலையில் காணப்பெறுகிறார். (- சுப. அருணாசலம்)


நவக்கிரக விநாயகர்

சென்னைக்கருகில் உள்ள **வேடந்தாங்கலில்** விநாயகப் பெருமான் நவக்கிரக நாயகராக நல்லாட்சி புரிகிறார். விநாயகர் உருவத்தில் ஒன்பது கிரகங்களும் பொறிக்கப்பட்டிருப்பதைக் கொண்டு, அவரை வழிபடுவதன்வழி நவக்கிரக நாயகர்களின் நல்லருளைப் பெறலாம் என மக்கள் நம்புகின்றனர்.

திருச்சிக்கு அருகில் உள்ள **துறையூரில்** அசுரன் ஒருவனைத் துதிக்கையால் தூக்கிய வண்ணம், போர்க்கருவிகளைத் தாங்கிய சீற்றம் மிகுந்த **சிந்தூர கணபதி** தரிசனம் தருகிறார். அரக்கோணம் அருகில் உள்ள **மின்னல்** என்னும் கிராமத்தில் ஐந்து அடி உயரத்தில் **ஐம்முக விநாயகர்** சிங்கத்தின் மீது சீற்றத்துடன் நின்று தரிசனம் தருகிறார். அவரது பத்துக் கரங்களில் இரண்டு அபய - வரத கரங்களாக அமைய, மற்றவற்றில் போர்க்கருவிகள் காணப்பெறுகின்றன. **கும்பகோணம்** நாகேஸ்வர சுவாமி கோயிலில் கையில் குடையுடன் கூடிய **ஜீரஹர விநாயகரை**யும், மனித முகத்துடன் கூடிய விநாயகர் திருமேனிகளைத் **திலதர்ப்பணபுரி**யிலும், திருச்சி கீழப்புலிவார் தெருவிலும் கண்டு வழிபடலாம். (- சுப. அருணாசலம்)

ஹம்பியில் உள்ள **கடுகுப் பிள்ளையார்**, மற்றும் ஏராளமான விநாயக மூர்த்தங்கள் பற்றிய குறிப்புகளையும், படங்களையும் *சக்தி விகடன் விநாயக சதுர்த்திச் சிறப்பிதழ்* (செப்டம்பர் 2008) வெளியிட்டிருந்தது.

கி.பி. 1357ல் உருவான **ஹம்பி** நகரில், **ஹேமகுட்டா** என அழைக்கப்பெறும் மலைக்கிராமம், முன்னர் புனிதமான சைவத் தலமாகத் திகழ்ந்ததாம். அங்கு திறந்ததொரு மண்டபத்தில் வீற்றிருக்கிறார் **சாலுவேச கணேசர்**. 'சாலுவேகலு' என்றால் 'கடுகு' என்று பொருள். ஆம், அவர்தாம் பெயருக்கு நேர்மாறாக, எட்டு அடி உயரத்தில், ஒரே கருங்கல்லில் உருவான **கடுகுப் பிள்ளையார்.** சரிந்து தொங்கும் தொந்தி நிலத்தைத் தொடும் வகையில் அமர்ந்துள்ள அப்பிள்ளையார், 14 அல்லது 15ஆம் நூற்றாண்டில் வடிக்கப் பெற்றவராய் இருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். (- சுரேஷ் - பாலா, *ஆனந்த விகடன் தீபாவளி மலர்*)

அதே இடத்தில் இருபது அடிப் பிள்ளையார் ஒருவரும் இருப்பதாகக் காஞ்சிப் பெரியவர் கூறுகிறார். எட்டு அடிப் பிள்ளையார் **கடுகுப் பிள்ளையா**ரானால், இருபது அடிக்காரர் **கடலைப் பருப்புப் பிள்ளையாராம்.**

மலையாள நாட்டில், நென்மேனி, கிடங்கல்நாடு, நூல்புழை முதலிய கிராமங்களை உள்ளடக்கிய **கணபதி வட்டம்** என்னும் ஒரு பகுதி உள்ளது. வேற்றுச் சமய அரசன் ஒருவனின் வேண்டாத செயலால் அங்கிருந்த விநாயகர் கோயில் விக்கினப்படுத்தப்பட்டது. மக்கள் கலங்கிக் கண்ணீர் வடித்த நேரத்தில், அதே அரசன் தன் தவற்றை உணர்ந்து, அக்கோயிலுக்குப் பொன்னையும் பொருளையும்





பேருருவப் பிள்ளையார்கள்

15 அடி உயரப் படா கணபதி
(உஜ்ஜைனி)

(நன்றி: பன்னிரு ஜோதிர்லிங்கத் தலங்கள்)

கடுகுப் பிள்ளையார்
(ஹம்பி)

(நன்றி: ஆனந்த விகடன், தீபாவளி மலர்)

வாரி வழங்கினான். தொடர்ந்து, சேதமுற்ற அந்த விநாயகத் திருமேனியையே வைத்து அப்பகுதி மக்கள் வழிபட்டு வரலாயினர். அவர்களுக்கு அந்த விநாயகர் கண்கண்ட தெய்வமாக இருந்து அருள் பாலித்து வருகிறார். (- C. Gopala Nair, Malabar Serief - Wyanad. மேற்கோள்: *கணபதி*)

அதே அரசனின் அட்டகாசத்துக்கு உள்ளான மற்றொருவர், **சிதம்பரத்தில்** உள்ள செங்கழுநீர் விநாயகர். கலகக்காரர்களால் (துதிக்)கை ஒடிக்கப்பெற்ற அந்த விநாயகர் திருமேனியை அப்பகுதி மக்கள் பின்னர் மாற்ற முயன்றபோது, அவர்களின் கனவில் தோன்றி அவர் அதைத் தடுத்து விட்டாராம். இப்போதும் அவர் துதிக்கை இல்லாத தூயவராகவே இருந்து மக்களுக்கு மாறாத அருளை அள்ளி வழங்குகிறாராம். *(- கணபதி)*

உமையோடும் கந்தனோடும் கூடிய சிவமூர்த்தத்தை **சோமாஸ்கந்தர்** (ச+உமா+ஸ்கந்தா, Sa+Uma+Skanda) என்பது போன்று, விநாயகரும் உமையம்மையும் கூடிய மூர்த்தத்தை **சோமகணபதி** என்று சொல்வதுண்டு. அத்தகைய சோமகணபதியின் திருவுருவைக் காஞ்சிக்கு அருகில் உள்ள **தேனம்பாக்கத்தில்** தரிசிக்கலாம் என்கிறார் கோ. செல்வம் *(- அருள் தரும் அபிராமி)*

தென்கிழக்காசியாவில் **கரண்ட் மகுடத்**தால் அலங்கரிக்கப்பெற்ற விநாயகர் திருப்படிமங்கள் காணப்பெறுவதாகவும், அம்மகுடங்கள் சிலவற்றின் உச்சியில், புத்தர் சிலைகளில் காணப்பெறுவது போன்று, தீப்பிழம்பை ஒத்த **உஷ்னீஷ்** என்னும் சின்னம் இருப்பதாகவும், தென்கிழக்காசியாவில் இந்து சமயம் - பண்பாடு பற்றி விரிவான ஆய்வுகள் மேற்கொண்டு வருபவரான பேராசிரியர் டாக்டர் சிங்காரவேலு கூறுகிறார்.

இந்தோனீசியாவின் கிழக்கு ஜாவாவில் கிடைத்த ஒரு விநாயகர் சிலை, **கபால மகுடத்தைத்** தரித்தவாறு, கபாலங்கள் நிறைந்த ஆசனத்தின்மீது அமர்ந்திருக்கக் காணப்பெறுகிறது. இது சிவபெருமானின் பைரவக் கோலத்தை நினைவுபடுத்துவதாகக் கொள்ளலாம் என்று கூறும் பேராசிரியர், விநாயகரும் சிவனும் ஆதியில் ஒரே அம்சமாகவே கருதப்பெற்றனர் என்னும் பேராசிரியர் பிரிஸிலுஸ்கி (Prof. Przyluski)யின் கருத்தையும் சுட்டிக் காட்டுகிறார். *(தகவல்கள் : ஸ்ரீலயன் சித்தி...... மலர்)*

Bhitargaonனில் பறக்கின்ற நிலையிலான விநாயகர் உருவ அமைப்பைக் கொண்ட பழைமையான செங்கற்கோயில் இருப்பதை இரா. இராஜசேகரன் சுட்டிக் காட்டுகிறார் *(- சைவப் பெருவெளியில் காலம்)*

## <u>பாடல் பெற்ற தலங்களில் பார்வதி புத்திரன்</u>



தேவாரப் பாடல் பெற்ற தலங்களில் உள்ள சில விந்தைத் திருமேனிகளை இனித் தெரிந்து கொள்வோம்:

**திருஅறையணிநல்லூர்**த் தலத்தின் பிராகாரத்தில் உள்ள பெரிய உருவமான தல (வலம்புரி) விநாயகர், எப்படிப் பார்த்தாலும், நம்மையே பார்ப்பது போன்று தோற்றமளிக்கிறார்.

**திருஆலங்காடு** - துதிக்கை உள்ளிட்ட பதினொரு கரங்களுடன் கணபதி காட்சி தருகிறார்.

**திருஆமாத்தூர்** - இங்குள்ள விநாயகர், பூசை செய்யும் அமைப்பில் கையில் மலருடன் காட்சியளிக்கிறார்.

திரு ஆலவாய் - சொக்கநாதர் கோயிலின் இரண்டாம் பிராகாரத்தில் காணப்பெறும் முக்குறுணி விநாயகர் ஏழு அடி உயரமுள்ள பெரிய திருவுருவம். இவரை ஆண்ட விநாயகர் என்றும் அழைப்பர். மாரியம்மன் தெப்பக்குளம் இவரது பூர்விகம் என்று சொல்லப் பெறுகிறது. விநாயக சதுர்த்தியன்று 12 படி (முக்குறுணி) அரிசி கொண்டு ஒரே மோதகமாகச் செய்து இவருக்கு நிவேதிப்பது வழக்கம். திருச்செந்தூர், சிதம்பரம், குமரகோட்டம் முதலிய இடங்களிலும் முக்குறுணி விநாயக மூர்த்தங்கள் காணப்பெறுகின்றன.

திரு உசாத்தானம் - சூதவன விநாயகர்; கையில் மாவிலை ஏந்திக் காட்சி தருகிறார்.

திருக்குறுக்கை - குறுங்கை விநாயகர்; சதுர ஆவுடையாரின்மீது அமர்ந்துள்ள திருக்கோலம். (திருவையாற்றிலும் ஆவுடையார் மீது விநாயகர் அமர்ந்த அமைப்பு உள்ளது)

திருக்கோகர்ணம் - யானை முகத்துடன், இரு கரங்களோடு நின்ற கோலத்தில் அமைந்துள்ள இங்குள்ள விநாயகரின் முடியில், யானைத்தலை போன்று இரு புறமும் மேடாக உள்ளது; நடுவில் காணப்பெறும் பள்ளம் (குழி), தான் கொடுத்த சிவலிங்கத்தை விநாயகர் கீழே வைத்ததன் காரணமாக இராவணன் குட்டியதால் ஏற்பட்டது என்பர்.

திருச்சிராப்பள்ளியில் உள்ள உச்சிப் பிள்ளையாரும், இத்தகைய குழியைக் கொண்டிருக்கிறார். விபீஷணனிடமிருந்து அரங்கநாதரை வாங்கித் திருவரங்கத்தில் வைத்துவிட்டு இம்மலையில் ஏறி மலை உச்சியில் அமர்ந்து விட்டதாகக் கர்ணபரம்பரைக் கதை ஒன்று கூறுகிறது. அண்ணனைப் (இராவணனைப்) போலத் தம்பியும் (விபீஷணனும்) விநாயகரின் தலையில் குட்டியதால் ஏற்பட்டதே இந்த வடு என்று சொல்லப் பெறுகிறது.

திருக்கோவலூர் - சுந்தரருக்கு முன்னதாக ஔவைப் பாட்டியைக் கயிலையில் சேர்த்த பெரியானைக் கணபதி இங்கு தரிசிக்க வேண்டியவர்.

திருக்கஞ்சனூரில் உள்ள கற்பக விநாயகரும் தம் பக்தைக்கு இத்தகைய உதவியைச் செய்திருக்கிறாராம். விநாயகருக்கு மோதகம் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்ததால், ஹரதத்த சிவாசாரியாருடன் கயிலை செல்ல இயலாது கவலைப்பட்ட ஓர் அந்தணப் பெண்ணை, விநாயகர், தம் துதிக்கையால் தூக்கிக் கயிலையில் சேர்த்ததாகத் தல புராணம் கூறுகிறது.

திருத்திலதைப்பதி - கோயிலுக்கு எதிரில் உள்ள சிறிய சந்நிதியில் குடி கொண்டிருக்கும் ஆதி விநாயகர், தும்பிக்கை இல்லாமல், வலக்காலைத் தொங்கவிட்டு, இடக்காலை மடித்து, இடக்கையை இடக்காலின் மீது வைத்து, வலக்கை சற்றே சாய்ந்த அபயகரமாக விளங்க, அதிசயக் கோலத்தில் காட்சி தருகிறார்.

திருச்சத்திமுற்றத்தில் உள்ள நரமுகப் பிள்ளையார் பெயருக்கேற்ப நரமுகம் கொண்டவரே.

திருநெல்வேலி - இங்குள்ள பொல்லாப் பிள்ளையார் சந்நிதி சிறப்பானது. பிள்ளைப்பேறு இல்லாதவர்கள் இச்சந்நிதியில் 41 நாள் விரதமிருந்து இவரை வழிபடுகின்றனர். பின்னர் கருப்பமுற்றுப் பிள்ளை பிறந்த பின்னர், இங்கு கொண்டு வந்து, சந்நிதியின் எதிரே உள்ள சன்னல் போன்ற அமைப்பின்வழி, உள்ளே இருந்து பிள்ளையைக் கொடுக்க, வெளிப்புறமிருந்து பெற்றுக் கொள்ளும் மரபு இங்கு நிலவுகிறது. அதனால் இவர் பிள்ளைத்துண்டு விநாயகர் என்றும் அழைக்கப் பெறுகிறார். இது மிகச் சிறந்த பிரார்த்தனை சந்நிதியாகக் கருதப் பெறுகிறது.

திருப்பாசூர் - இங்குள்ள விநாயகர் சபையில் பதினொரு விநாயகர்கள் உள்ளனர்; வலம்புரி விநாயகர் நடுநாயகமாக உள்ளார்.

**திருப்புறம்பயம்** - தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருப்புறம்பயத்தில் எழுந்தருளியிருக்கும் வெண்ணிறத் திருமேனியினரான பிரளயம் காத்த விநாயகர், தேன் பிரியராம். ஆவணி விநாயக சதுர்த்தியன்று அவருக்கு இரவு முழுவதும் தொடர்ந்து தேனபிஷேகம் நடைபெறுமாம். ஆனால் அபிஷேகத் தேனில் ஒரு சொட்டுக்கூடக் கீழே சிந்துவதில்லையாம். தேன் முழுவதையும் அவரே உறிஞ்சி விடுகிறார் போலும்! தேன் உறிஞ்சு விநாயகர் என்றும் அவரை அன்புடன் அழைக்கின்றனர். (- ஏ.எம். ராஜகோபாலன், *பாரதத் திருக்கோயில்கள்*; புலவர் சு. வடிவேலன், *கணபதி வரலாறு*) இவர் நந்தாங்கூடு, கிளிஞ்சல், மணல் ஆகியவற்றால் உருவானவர் என்று கூறுகின்றனர்.

**திருமாற்பேறு** - பத்துக் கரங்களுடன் வல்லபை விநாயகர் காட்சி தருகிறார்.
மதுரையிலும் இத்தகைய விநாயகரைத் தரிசிக்கலாம். திருக்கழுக்குன்றத்தில் ஆறுமுக விநாயகர் தரிசனம் சிறப்புடையது.

**திருவலஞ்சுழி** - கடல்நுரையால் அமைந்த இந்த வெள்ளை வாரணப் பிள்ளையார், இந்திரனால் பிரதிஷ்டை செய்யப்பெற்றவர் என்று கூறுகின்றனர். (இத்தலத்தின் சிறப்புக் குறித்துக் காஞ்சி முனிவர் தெரிவித்துள்ள கருத்தை முன்னர் கண்டிருக்கிறோம்.)

**திருவேதிகுடி** - வேத விநாயகர்; இறைவன் அருளிய வேதங்களைச் செவி சாய்த்துக் கேட்பது போன்று, இடக்காலை உயர்த்திய நிலையில் அற்புதமாகக் காட்சி அளிக்கிறார்.

**மயிலாப்பூர்** - நர்த்தன விநாயகர் நம்மை வரவேற்பது போன்று அமைந்துள்ளார்.

**திருப்பழுவூரிலும்** நிருத்த விநாயகர் குடி கொண்டிருக்கிறார். கயமுகாசுரனை அழித்த பின்னர், விநாயகர் இங்கு ஆனந்த நடனம் ஆடினாராம். திருக்குடமூக்கில் உள்ள நிருத்த விநாயகர், தாண்டவம் - லாசியம் - நாட்டியம் - நிருத்தம் - நடனம் என் ஐந்து வகையில் ஆடித் தந்தையின் பாராட்டைப் பெற்று நிருத்த கணபதி என்று பட்டமும் வழங்கப் பெற்றவராம். திருமண்ணிப்படிக்கரை, திருக்காளத்தி, மற்றும் தில்லையிலும் நிருத்த கணபதியர் நர்த்தனமிட்டுக் கொண்டிருக்கின்றனர்.

**திருநள்ளாற்றில்** உள்ள விநாயக மூர்த்தம், (திருமால் உருவமாகப் பூசித்தற்கு உரிய பெருமை வாய்ந்த, கண்டக் ஆற்றில் கிடைப்பதான) சாளக்கிராமம் (Black fossil chiefly found in the river Gandak) என்னும் கல்லால் உருவானது.

காஞ்சிபுரத்தின் **திருவோணகாந்தன்தளி**யில் கருவறை மண்டப முகப்பில் உள்ள விநாயகர் அருகே சென்று உற்றுக் கேட்டால், ஓங்காரஒலி கேட்கிறதாம்.



**ஸ்ரீசைலம்** என இப்போது வழங்கும் பாடல்பெற்ற தலமான திருப்பருப்பதத்தில், மல்லிகார்ஜுன மகாலிங்கேசுவரர் கோயிலிலிருந்து 5 கி.மீ. தொலைவில் சாலையோரமாக வீற்றிருப்பவர் சாட்சி கணபதி. சிவபெருமானுடைய இளகிய மனத்தைப் பயன்படுத்திக், கபட வேடதாரிகள்கூட, அவரிடமிருந்து எளிதில் வரங்கள் பெற்று விடுகின்றனர் என்பதால், கோயிலுக்குச் செல்வோரைக் குறித்து வைத்திருந்து, அவர்கள் பற்றிய உண்மைத் தகவல்களைத் தந்தையாருக்குத் தெரிவிப்பது அவரது வேலையாம். அந்த விநாயக மூர்த்தத்தின் முன் கைகள் இரண்டிலும், சித்திரகுப்தரைப் போன்று, ஏடும் எழுத்தாணியும் காணப்பெறுகின்றன.

கம்பநாடருடன் தொடர்புடைய திருவழுந்தூர் என்னும் பாடல்பெற்ற தலம், இப்போது தேரழுந்தூர் என வழங்குகிறது. அங்கு சிவபெருமான் வேதபுரீசுவரர் என்னும் திருநாமத்துடன் வீற்றிருக்கிறார்.
வைணவர்களுடனும் தொடர்புடைய (மங்களாசாசனம் செய்யப்பெற்ற) அவ்வூரில் உள்ள பெருமாள், ஆமருவியப்பன் என்னும் பெயருடையவர். திருஞானசம்பந்தர் அவ்வூருக்குச் சென்றபோது,

எதிரெதிரே இருந்த அந்த இரு (சைவ - வைணவக்) கோயில்களில், எது சிவத்தலம் என்று அவருக்குக் குழப்பம் ஏற்பட்டதாம்; அப்போது அருகிலிருந்த பிள்ளையார்தான், அப்பா கோயிலை அடையாளம் காட்டினாராம். அதனால் அவர் சம்பந்தப் பிள்ளையார் என அழைக்கப் பெறுகிறார். அந்தப் பிள்ளையார் கோயில் சந்நிதியில்தான், ஆருத்ரா தரிசன மண்டகப்படி நடைபெறுகிறதாம்.

மாணிக்கவாசக சுவாமிகளுடன் தொடர்புடைய தலம், ஆவுடையார்கோயில் என இப்போது வழங்கும் திருப்பெருந்துறை. அங்கு மணிவாசகர் கோயில் கட்டுவதற்குத் திட்டமிட்டுக் கொடுத்தவர் நம் பிள்ளையார்தானாம். கருவறையில் அருவுருவாக இருந்து அருள் பாலிக்கும் இறைவன் (அம்பிகையும் அருவுருவே.) அமைந்துள்ள அக்கோயிலில், பிள்ளையாரோடு பெற்றோர் இருவரையும் சேர்த்து, ஒன்றுக்கு மூன்றாகப் பிள்ளையார் திருமேனிகள் காட்சியளிக்கின்றன. (சில கோயில்களில் இரட்டைப் பிள்ளையார் இருப்பதுண்டு; இங்கு மூன்று பிள்ளையார்கள்!)

சமயபுரம் மாரியம்மன் கோயிலின் உள்ளும் இத்தகைய மூவரை, இச்சாசக்தி - கிரியாசக்தி - ஞானசக்தி கணபதி என்னும் பெயரில் ஒருசேரக் காணலாம். காஞ்சிப் பெரியவரின் ஆலோசனையின் பேரில், அம்பிகையின் உக்கிரத்தைத் தணிக்க இத்தகைய ஏற்பாடு செய்யப் பெற்றதாம். (*- சந்திரசேகர சர்மா, பெரிய கடவுள்*) ஆதிசங்கரரின் அடிச்சுவட்டையே மறைந்த மாமுனிவரும் பின்பற்றி இருக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். காரணம், திருச்சிக்கு அருகில் உள்ள திருவானைக்காவிலும் இத்தகைய ஏற்பாட்டை ஆதிசங்கரர் அந்தக் காலத்திலேயே செய்திருக்கிறார்.

வெள்ளையானையும், சிலந்தியும் வழிபட்ட தலம் திருவானைக்கா. அன்னை அகிலாண்டேஸ்வரி அங்கு வீற்றிருந்து அருள் பாலிக்கிறாள். கலிகாலத்து மக்களின் மனப்போக்கைக் கண்டு கலக்கமடைந்த சாந்தசொரூபியான அன்னை, ஆங்காரமடைந்து உக்கிர மூர்த்தியாகி விட்டாளாம். அங்கே சென்றிருந்தபோது, அன்னையின் உக்கிரத்தைக் கண்டு, அவளைச் சாந்தப்படுத்த வேண்டி, ஆனைமுக அண்ணலை அவள் எதிரே பிரதிஷ்டை செய்தாராம் ஆதிசங்கரர். செல்லப்பிள்ளையைக் கண்ட அன்னை அக்கணமே அடங்கிவிட்டாள், அன்பு மயமாகிவிட்டாள். ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த அந்தப் போரானைக் கன்றைப் போற்றினால்,

புத்தி-வரும், பத்தி-வரும், புத்திர உற்பத்தி-வரும்,
சக்தி-வரும், சித்தி வருந்தான் என்று கவி காளமேகம் பாடுகிறார்.

மிளகுப் பிள்ளையார்: தாமிரபரணி ஆற்றில் நீர் வரவேண்டும் என்பதற்காகக், கங்கையை வரவழைக்கக் கடுமையான தவம் மேற்கொண்ட பகீரதனைப் போன்று, தாமிரபரணி ஆற்றில் தலைகீழாக நின்று தவம் மேற்கொண்டார், கன்னடக்காரரான பிரம்மசாரி ஒருவர். அவர்முன் தோன்றிய அகத்தியர், சேர்மாதேவியில் ஒரு மகா கணபதியைப் பிரதிஷ்டை செய்தார். "மிளகுப் பொடியை நீரில் குழைத்து இவர்மீது பூசிவிட்டு, எப்படியாவது குடங்குடமாகத் தண்ணீர்கொண்டு வந்து இவருக்கு அபிஷேகம் செய்; மழை கொட்டும்" என்று கூறி மறைந்தார். அவர் கூறியபடியே பிரம்மசாரி செய்ததைத் தொடர்ந்து மழை கொட்டியது; தாமிரபரணியில் நீர் கரை புரண்டு ஓடியது. இப்போதும் மழை தப்பினால், அந்த மிளகுப் பிள்ளையாருக்கு மிளகுப்பொடிக் காப்பிட்டு நீர் அபிஷேகம் செய்தால் பெருமழை பெய்யத் தவறுவதில்லையாம். (*- தெய்வத்தின் குரல், பகுதி* 3)

இலங்கையின் கதிர்காமம் தலைசிறந்த முருகன் தலம். அங்கு தனிச் சந்நிதியில் வீற்றிருக்கும் விநாயகரைக் கிறிஸ்துவர்களும், முஸ்லிம்களும்கூட வழிபடுவது கண்கொள்ளாக் காட்சியாகும். *(- விநாயகர் பெருமை)*

திருஅச்சிறுபாக்கம் அச்சிறுத்த விநாயகரைப் போன்று, கதிர்காமத்தில் முறிவண்டி விநாயகர் விளங்குகிறார். வாகன விபத்துகளைத் தவிர்க்க உதவுவதால், இப்பெயரைப் பெற்ற இவரை

வணங்கிவிட்டே வாகனங்கள் செல்கின்றனவாம். *(- சக்தி விகடன்)* (அச்சிறுபாக்கத்திலும் இப்படித்தான் அச்சிறுத்த விநாயகர் அவ்வழியே செல்வோரை ஆட்டிப் படைக்கிறார். காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகளையே அசர வைத்தவர் அவர்! *(- தெய்வத்தின் குரல்)*

காரைக்குடி நகரச் சிவன் கோயிலின் இடப்புறத்தில், குளக்கரையில், 108 விநாயகர் திருமேனிகள், கோயில் அமைப்பில்லாத ஒரு மண்டபத்தில் அண்மைக் காலத்தில் பிரதிஷ்டை செய்யப் பெற்றுள்ளன.

கோயம்புத்தூரிலும் சாலை ஓரத்திலேயே 108 விநாயகர்களைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வருகின்றனர். *(- பெரிய கடவுள்)*

தமிழகத்தின் இராமநாதபுரத்தில், ஊர் நடுவில் ஒரு சிறு பிள்ளையார் கோயில். அங்கு சந்நிதி எப்போதும் திரை போட்டு மூடப்பட்டே இருக்குமாம். ஏனென்று கேட்டபோது, விநாயகரின் தும்பிக்கை நுனி, அவரது மடிமீது உள்ள வல்லபையின் யோனித் துவாரத்தின் (vagina) மீது வைக்கப்பட்டிருப்பதுபோல் மூர்த்தி அமைந்துள்ளது; அந்த அந்தரங்கத்தை யாரும் காணக்கூடாது என்பதற்காகத் திரை போட்டு மறைத்திருக்கிறார்கள் என்று காரணம் கூறினார்களாம். *(தகவல்: கவிஞர் காரைக்கிழார்)*



பொய்யாத விநாயகமூர்த்தி கோயில், மலாக்கா
*(நன்றி: The Star, பிப்ரவரி 16, 2009)*

இதற்கான புராண வரலாற்றைக் கோலாலம்பூர் ஸ்ரீ மகாமாரியம்மன் தேவஸ்தானத் தலைமை அர்ச்சகர் சிவஸ்ரீ சிவகுமார் பட்டர் கூறுகிறார்: விநாயகரின் தேவியாக வல்லபையைக் கூறுவதுண்டு. மரீசி முனிவரின் புத்திரியாகப் பிறந்த அவர், விநாயகரை நோக்கித் தவமியற்றி அவரைக் கணவராக்கிக் கொண்டார் என்று புராணங்கள் கூறும்.

ஆனால், அவரை ஓர் அசுரப் பெண்ணாகவும் சில புராணங்கள் வருணிக்கின்றன. அவள் தன் தவ வலிமையால், நினைத்தபோதெல்லாம் ஆயிரக் கணக்கில் அசுரக் குழந்தைகளைப் பெற்றுக்கொள்ள வரம் பெற்றிருந்தாள். அசுரர்கள் பெருகிக் கொண்டே வருவதால் கவலையுற்ற தேவர்கள் விநாயகப் பெருமானிடம் முறையிட, அவர் வல்லபையை மணந்து, அவளை மடியில் இருத்தி, அவளது யோனித் துவாரத்தைத் தம் தும்பிக்கையால் மூடியதன்வழி, அசுர இனம் பெருகுவதைத் தடுத்தார் என்று அந்தப் புராணங்கள் கூறுகின்றன. அத்தகைய ஒரு திருமேனி, விநாயகரின் 32 திருமேனிகளில் ஒன்றாகவும் அமைந்துள்ளது.

மலாக்காச் செட்டி சமூகத்தாருக்குச் சொந்தமான ஸ்ரீ பொய்யாத விநாயகமூர்த்தி கோயில், 1871ஆம் ஆண்டு கட்டப்பெற்று, இப்போது மலாக்கா நகரத்தாரால் நிர்வகிக்கப்பெற்று வருகிறது. இக்கோயில், இவ்வாண்டுத் தொடக்கத்தில், வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த தேசிய மரபுடைமைச் சின்னம் (National Heritage) என்னும் அரசு அங்கீகாரத்தைப் பெற்றிருக்கிறது.

சிங்கப்பூர் சிலோன் ரோட் செண்பக விநாயகர் கோயிலில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட விநாயகர் திருவுருவங்கள் கண்ணாடிப் பேழையில் காட்சிக்கு வைக்கப் பெற்றுள்ளன. (-என்.எஸ். நாராயணன், கட்டுரை, *ஸ்ரீலயன் சித்தி.... மலர்)*



## ஸ்வஸ்திக் சின்னத்திற்குச் சொந்தக்காரர்

பண்டையக் கல்வெட்டு சாசனங்களில் மங்கலத்தைக் குறிக்க ஸ்வஸ்திஸ்ரீ (Sanskrit expression used at the beginning of inscriptions, letters etc. to denote auspiciousness) என்னும் வடமொழித் தொடர், சாசனத் தொடக்கத்தில் பயன்படுத்தப் பெற்று வந்ததாகக் கல்வெட்டு ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

மகேந்திரப் பல்லவ மன்னன் காலத்துக் (கி.பி. 590 முதல் 630 வரை ஆட்சி புரிந்தவர்) குடைவரைக் கோயில்களின் கல்வெட்டுகளில் ஸ்வஸ்திஸ்ரீ மகேந்திர விக்ரம என்று, இந்தச் சொல்லாக்கத்தைக் காணமுடிகிறது. 10, 11, 13ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளிலும் இந்தச் சொல்லாட்சி இடம் பிடித்துக் கொண்டிருந்தது. 19ஆம் நூற்றாண்டில்தான் இச்சொல் இரண்டாம் இடத்துக்குத் தள்ளப்பெற்று, முதலிடத்தை சுபமஸ்து என்னும் வடமொழி மங்கலச் சொல் பிடித்துக் கொண்டிருக்கிறது. (- மு. நளினி, டாக்டர் இரா. கலைக்கோவன், *மகேந்திரர் குடைவரைகள்*)

இந்த ஸ்வஸ்திஸ்ரீ என்னும் சொல், நலம், சுகம் என்று பொருள்தரும் சுவஸ்தி என்னும் சொல்லை ஒட்டி அமைந்ததே. அதிலிருந்து கிளைத்த மற்றொரு சொல்தான் ஸ்வஸ்திகா அல்லது ஸ்வஸ்திகம். மங்கலத்தைக் குறிக்கும் 卐 என்னும் குறியீடே ஸ்வஸ்திகா எனப்பெறுகிறது (A mystical mark in the form of 卐, denoting auspiciousness - Tamil Lexicon).

அதிர்ஷ்டம், சூரியன், பிரமன், இல்லறக் கோட்பாடு போன்றவற்றைக் குறிக்கும் வகையில், வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே ஓவியங்களில் இந்த ஸ்வஸ்திகா இடம் பெற்று வந்திருப்பதாக ஆய்வாளர்களும், மொழி வல்லுநர்களும் கூறுகின்றனர்.

இத்தகைய மிகப் பழையதோர் சின்னத்தை இந்துக்கள், இடர்களைக் களைந்து மங்கலத்தை அருளும் விநாயகருக்கு உரியதாக்கினர்.



**மண்டல நாயகர்:** யாகசாலை (The sacrificial hall of a temple)களில் இறைமூர்த்தங்களைக் கும்பம்-(இ)யந்திரம்-மண்டலம் ஆகிய ஏதேனும் ஒன்றில் ஆவாகனம் செய்து (invocation to a deity, by mantras, to be present in an object) வழிபாடு செய்வது வழக்கம். லதாலிங்க மண்டலம், நவநாப மண்டலம், அனந்தவிஜய மண்டலம், பத்திர மண்டலம், தராகார மண்டலம், கௌரிலதாகாரலிங்க மண்டலம், சுபத்திர மண்டலம், உமாகாந்த மண்டலம், ஸ்வஸ்திக மண்டலம், டங்கம் என்னும் அர்த்த சந்திர மண்டலம் என, ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒவ்வொரு மண்டலம் உண்டு. அவற்றில் ஸ்வஸ்திகா மண்டலம் விநாயகருக்கு உரியதாகிறது.

படத்தில் காணும் (ஸ்வஸ்திக)மண்டலத்தின் நடுவில் விநாயகரை ஆவாகனம் செய்து, யாகசாலைகளில் வழிபாடு செய்வது வழக்கம். இந்த மண்டலத்தைக் கூர்ந்து நோக்கினால், சுற்றிலும் நான்கு லிங்க வடிவங்கள் அமைந்திருப்பது தெரியவரும். அதாவது, லிங்க வடிவான சிவபெருமானுக்கு நடுவில் விநாயகப் பெருமான் இடம் பிடித்துக் கொண்டிருக்கிறார்என்பது

புலப்படும். "கணபதியும் நானும் வேறல்லோம்"என்று சிவபெருமான் கூறியதன் கருத்து இம்மண்டல அமைப்புவழி வெளிப்படுகிறது என்று சொல்லலாம். இந்த மண்டலத்தின் நடுவில் இடம்பெற்றுள்ள ஸ்வஸ்திகாதான் விநாயகருக்கு உரிய சின்னமாகிறது. *(- சிவஸ்ரீ ம. சிவகுமார் பட்டர்)*

இந்த ஸ்வஸ்திக அமைப்பை சாந்தநிலை அல்லது அனுக்கிரகநிலை என்று கூறுவர். இதே சின்னத்தை, இடப்பக்க முனை மேல் நோக்கி வருமாறு நகர்த்தி, 卐 இவ்வாறு செய்யும்போது, அது பிரயோக நிலையாகிறது. அதாவது, அழிவுக்கு அது ஆயத்தமாகிறது.

இந்து சமயம், சாந்த அல்லது அநுக்கிர நிலையில் ஸ்வஸ்திகத்தை விநாயகருக்குரிய சின்னமாக்கிக் காட்டுகிறது. அதே ஸ்வஸ்திகத்தின் பிரயோக நிலையை, ஹிட்லரின் தேசிய சோஷலிஸ உழைப்பாளர் கட்சி, போரில் வெற்றி காண்பதற்கெனத், தனக்குரிய அடையாளமாக்கிக் கொண்டது. (இது குறித்த மேலும் சில விவரங்களை, இணைப்பு ஐந்தில் (பக். 209) காணலாம்)

## கொண்ட சமயத்தார் தேவனாம்

*(ஒவ்வொரு சமயத்தாரும் வழிபடும் தேவனாக உள்ளவன்)*

வைணவர்கள் விநாயகரை **விஷ்வக்சேனர்** என்றும், **சேனை நாயகர்** என்றும், **தும்பிக்கை யாழ்வார்** என்றும் பல பெயர்களில் வழிபடுகின்றனர்.

பௌத்த சமயம் இவரைப் **புத்தநாயகர்** என்று போற்றுகிறது. புத்தர் பெருமான் தம் சீடர்களில் தலையாயவரான ஆநந்தாவிற்கு **நமோ பகவதே ஆர்யகணபதி ஹ்ருதயாய** என்னும் ஓர் ஆற்றல் வாய்ந்த மந்திரத்தை உபதேசித்ததாகச் சொல்லப்பெறுகிறது.

கம்பூச்சிய (Cambodia) மக்கள் **பிரா கெனெஸ்** (Phra Kenes, கணேசப் பிரான்) என்னும் திருப்பெயரால் விநாயகரை வழிபடுகின்றனர். *(- தகவல்கள்: பேரா. ச. சிங்காரவேலு)* (மலாயாப் பல்கலைக் கழகத்தின் ஓய்வுபெற்ற கௌரவப் பேராசிரியரான டாக்டர் சிங்காரவேலு அவர்கள் அனுப்பித்தந்த சில அபூர்வப் படங்கள் பின்னர் சில பக்கங்களில் இடம் பெறுகின்றன)

ஜைனர்கள் **அருகநாயகர்** என்று ஆராதிக்கின்றனர். வாணிகத் தொடர்புகளின் விளைவாகவே, அவர்களிடையில் கணபதி வழிபாடு இடம் பிடித்தது என்று சொல்லப்பெறுகிறது. அவர்கள் நிதி அதிதேவதையான குபேரனுடன் தொடர்புபடுத்தி அவரை வழிபடுகின்றனர். ஜைனர்களின் வழிபாட்டில் இடம்பெறும் பழைமையான விநாயகர் சிலை 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்பெறுகிறது.

## பார்க்கவ புராணம் கூறும் பன்னிரு திருவிளையாடல்கள்

ஆலவாயில் (மதுரை) இறைவன் நிகழ்த்திய அறுபத்து நான்கு திருவிளையாடல்களைப் போன்று, ஆனைமுகரின் அவதாரத் திருவிளையாடல் பன்னிரண்டைப் பார்க்கவ புராணம் எடுத்துரைக்கிறது. சிவபெருமானே ஆறுமுகனுக்கு அவற்றைத் தெரிவித்ததாகவும் புராணம் கூறுகிறது. அவ்வாறு திருவிளையாடல் நிகழ்த்திய அவதாரங்களாக, வக்கிரதுண்ட விநாயகர், சிந்தாமணி விநாயகர், கஜானனர், விக்கினராஜர், மயூரேசர், பாலச்சந்திரர், தூமகேது, கணேசர், கணபதி, மகோற்கடர், உடுண்டி விநாயகர், வல்லபை விநாயகர் ஆகிய மூர்த்தங்கள் கூறப்பெறுகின்றன.

## அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாள்

கணேசரை வழிபடுவதற்குக் கடுமையான விதிமுறைகளோ, ஆசார நியமங்களோ கிடையாது. அன்பும் நம்பிக்கையும்தாம் அவசியம்.

**போதும் பெறாவிடில், பச்சிலை**
**உண்டு, புனல்-உண்டு-எங்கும்,**
**ஏதும் பெறாவிடில், நெஞ்சு-உண்டு-அன்றே?**

*(வழிபட மலர்இல்லையானால், பச்சிலைகள் இருக்கின்றன; நீர் இருக்கிறது; அவை போதும். அவையும் கிடைக்காவிடில், அவரை வழிபட உள்ளம் என்னும் மலர் ஒன்றே போதும்)* என்கிறார் பட்டினத்து அடிகள் *(- பதினொராந் திருமுறை)*

கணபதிக்கு 21 என்பது மிகவும் சிறப்பானது. 21 மலர்கள்; 21 பச்சிலைகள்; 21அறுகம்புல்; 21 அதிரசம்; 21 பழம்; 21 கொழுக்கட்டை (மோதகம்); 21 நாள் (மார்கழி சஷ்டி) விரதம்.*

**21 பச்சிலைகள்:** *அலரி, துளசி, மருதமர இலை, எருக்கு, அறுகு (வேருடன் கூடிய வெள்ளறுகு மிகச் சிறந்தது என்று கூறுவர்), கையாந்தகரை (கரிசிலாங்கண்ணி), முள்ளி, அரசமர இலை, மாசிப்பச்சை, நாயுருவி, நாவல்மர இலை, எலுமிச்சை இலை, நொச்சி, சாதிப்பூ இலை, இலுப்பைமர இலை, வன்னி, ஊமத்தை இலை, இலந்தைமர இலை, தேவதாருமர இலை, மாதுளை இலை, விஷ்ணுகாந்தி இலை.*

<u>விநாயகர் வழிபாட்டுக்கு உகந்த மலர்கள்:</u> சண்பகம், சாமந்தி, மல்லிகை, சம்பங்கி, செங்குவளை, தாழை, மகிழம், தாமரை, புன்னை, ஊமத்தை, முல்லை, விஷ்ணுகிராந்தி, வெள்ளைக் காக்கணம், மந்தாரை, குரா, கோங்கு, செம்பிருத்தம், வெள்ளெருக்கு, அகத்தி முதலியவை.

---

<u>அடிக்குறிப்பு:</u>

* விநாயகருக்கு உகந்ததாகக் கருதப்பெறும் இந்த இருபத்தொன்றின் சிறப்பை நூலாசிரியர் நஜன் பின்வருமாறு விளக்குகிறார்:

**ஞானேந்திரியம்** (அறிவுப் பொறிகள், sensory organs) ஐந்து (உணர்தற்குரிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள்)
**அவற்றின் செயல்கள்** (ஐம்புலன்கள், தன்மாத்திரைகள், இந்திரிய விஷயங்கள்) ஐந்து**:** (ஊறு, சுவை, ஒளி (உருவம்), நாற்றம், ஓசை)
**கர்(ரு/ன்)மேந்திரியங்கள்** (தொழிற்பொறிகள், organs of motor action) ஐந்து**:** வாக்கு (மொழி), பாணி (கை), பாதம் (கால்), பாயு (குதம், எருவாய், anus) உபத்தம் (கருவாய், ஜன்மேந்திரியம், generative organ)
**அவற்றின் செயல்கள்** (தொழிற்பொறிப் புலன்கள்) ஐந்து**:** வசனம், தானம் (ஈகை), கமனம் (நடத்தல்), விசர்க்கம் (மலங்கழிதல்), ஆனந்தம்.
**மனம் 1** - ஆக 21.
வழிபாட்டு நேரங்களில் இந்த இருபத்தொன்றும் கட்டுக்கடங்காவிட்டால், பூஜை செய்வதில் பொருள் இல்லை. அதை நினைப்பூட்டவே, பூஜைப் பொருட்களின் எண்ணிக்கை 21 என வகுக்கப் பெற்றுள்ளது. (நன்றி: *கணபதி ஹ்ருதயம் / சைவ சித்தாந்த அகராதி*)



**பூத நாயகன் புண்ணிய மூர்த்தி**

(கபாலப் பிள்ளையார் - ஜாவா, 13ஆம் நூற்றாண்டு)

## அர்ச்சனைக்கு உகந்த அறுகும் வன்னியும்

விநாயகர் வழிபாட்டுக்கு அறுகும், வன்னிப் பத்திரமும், மந்தாரைப்பூவும் மிகச் சிறந்தவை. விநாயகருக்கு உரிய அஷ்டோத்திர சத (108) நாமங்களில், **தூர்வ-பில்வ ப்ரியாய நம:** என்பது ஒரு நாமம். அறுகும் (தூர்வம்), வில்வமும் (பில்வம்)அவருக்குப் பிரியமானவை என அந்நாமம் கூறுகிறது. சாதாரணமாகச் சிவபூசைக்கு உகந்த எல்லா மலர்களும், பத்திரங்களுமே விநாயகர் வழிபாட்டுக்கும் ஏற்றவைதாம். (இருப்பினும், தாழம்பூ, துளசி ஆகியவற்றால் விநாயகரை வழிபடக்கூடாது என்று பெரியோர் கூறுகின்றனர். அதே நேரத்தில், விநாயகருக்கு உகந்த 21 இலைகளில் துளசியும், அவருக்கு உகந்த மலர்களில் தாழையும் உள்ளிட்டிருக்கின்றன என்பதைக் குறிப்பிடாதிருக்க இயலவில்லை)

ஓரிடத்தில் முளைத்துக் கொடி போல் நீண்டு ஆறு இடங்களில் வேரூன்றிக், கிளைத்துக் கொண்டே போவது அறுகு. **ஆல் போல் தழைத்து அறுகு போல் வேர் ஓடி** என்பது பழமொழி.

மூலாதார மூர்த்தியாகிய - குண்டலினியில் வசிப்பவராகிய விநாயகப் பெருமானே, குண்டலினி ஆகிய அறுகைச் சுவாதிட்டானம் முதலிய ஏனைய ஐந்திடங்களிலும் பொருந்தச் செய்து, சகஸ்திராரத்தில் பல நுனிகளாகத் தழைக்கச் செய்கிறாராதலின், அறுகு அவருக்கு உகந்ததாயிற்று என்று சொல்வர்.

அறுகின் சிறப்பை விளக்கச் சில புராணக் கதைகளும் கூறப்பெறுகின்றன.

அவற்றில் ஒன்று, யமன் மகனாகிய அனலாசுரன் என்பவனை விநாயகப் பெருமான் விழுங்கியதால் நேர்ந்த விளைவு பற்றியதாகும். அனலாசுரனை (அனல் = சூடு) விழுங்கியதால் ஆனைமுக அண்ணலின் உடல் முழுவதும் காந்தத் தொடங்கியது என்றும், தேவரும், மூவரும் எவ்வளவோ முயன்றும் அதைத் தணிக்க முடியவில்லை என்றும், எண்ணாயிரம் முனிவர்கள், தனித்தனியே, 21 அறுகுகளை இட்டு வைத்திருந்த நீரை அவர்மீது சொரிந்தபோது, அவ்வெப்பம் நீங்கியது என்றும் விநாயக புராணம் கூறுகிறது.

வெப்பத்தைத் தணிக்க அறுகு அருமருந்தாக விளங்குகிறது என்பதையே இது உணர்த்துகிறது.

வெப்பு நோயாகிய சுரநோய் கண்டோருக்கு, அறுகு இட்ட நீரைக் காய்ச்சிச் சுருக்கிக் கொடுத்தால், சுரநோய் நீங்கும் என்று கூறுகின்றனர்.

அறுகை மஞ்சளோடு சேர்த்து அரைத்துத் தோல் நோய்களுக்கு மேற்பூச்சாகப் பயன்படுத்தலாம்.

யோகியர், யோகப் பயிற்சியால் ஏற்படும் மூலாதார வெப்பத்தைத் தணித்துக் கொள்ள அறுகுக் கஷாயம் (அறுகும் மிளகும் சேர்த்துச் செய்த கஷாயம்) அருந்துவது உண்டாம். அது **மூதண்டக் கஷாயம்** (Decoction of the root of Bermuda-grass and pepper) என வழங்குகிறது.

இரட்டை அறுகுகளால் விநாயகரின் 21 நாமங்களைக் கூறி தூர்வாயுக்ம அர்ச்சனை செய்வது சிறப்பானது. (வழிபாட்டுப் பகுதியில் (பக். 73) இந்த அர்ச்சனை இடம் பெறுகிறது)

(இவ்வளவு சிறப்புகள் மிகுந்த - விநாயகருக்கு உகந்த அறுகு, சில கோயில்களில் அனுமதிக்கப்படுவதில்லை என்பது வருத்தத்திற்கு உரியது. தூய்மை காரணமாக இந்தத் தடை உத்தரவாம்! விநாயகருக்கு *உச்சிஷ்ட கணபதி* (Uccista Ganapati - Ganapati associated with unclean things) என ஒரு நாமம் இருப்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள் போலிருக்கிறது!)

வன்னி இலையும் கணபதி வழிபாட்டில் சிறப்பான இடத்தை வகிக்கிறது. இந்த இலையும் வெப்பம் தணிக்கும் மூலிகையாகும். நெருப்பைச் சார்ந்த பொருள்கள் தூய்மையுறுவது போல, வன்னி

மரத்தையும், அதன் இலையையும் தீண்டிய அடியார் பாவங்களும் அகலும் என்று ஆன்றோர் கூறுகின்றனர்.
(நன்றி: மகா வித்வான் ச.தண்டபாணி தேசிகர், *கணபதி*)

விநாயக உருவத்தை வெள்ளெருக்கில் செய்வது மிகவும் சிறப்பானதாகக் கருதப் பெறுகிறது. வெள்ளெருக்கின் முற்றிய வேரை எடுத்து நன்றாகக் காய்ந்த பின்னர், அதில் விநாயகர் உருவம் செதுக்கப் பெறுகிறது. இவ்வெள்ளெருக்கில் விநாயகர் உருவம் மட்டுமே செய்யப் பெறுகிறது.

## கணபதி பூசை கைமேற் பலன்

*(விநாயகர் வழிபாடு விரைவில் பலன் தரும்)*

கணபதி ஹோமம் : சிவப்புப் பட்டு, சிவப்பு மலர்கள் முதலியவை விநாயகருக்கு உகந்தவை என்று தவத்திரு ஞானியாரடிகள் கூறுகிறார் *(- சாத்தூர் கும்பாபிஷேக மலர்)*

விநாயகருக்கு மிகவும் விருப்பமான **கொழுக்கட்டை (மோதகம்), அவல், நெற்பொரி, சத்துமா** (வறுத்த அரிசியின் மா) அல்லது **நெய் அப்பம், கரும்பு, தேங்காய், எள், வாழைப்பழம்** ஆகிய எட்டுப் பொருட்களால் ஹோமம் செய்து, **சதுர் ஆவிருத்தி** (நான்கு முறை) **தர்ப்பணம்** என்னும் தர்ப்பணத்தையும் செய்து வந்தால், மிக விரைவில் தேவகுமாரனின் திருவருள் கிட்டும். இந்த ஹோமத்தைச் சூரிய உதயத்திலிருந்து 1 நாழிகை 40 விநாடிக்கு (100 விநாடிகள்) உள்ளாகத்தான் செய்ய வேண்டும். (- *ஸ்ரீவித்யா வாசஸ்பதி சி.வி. ஸ்வாமி சாஸ்திரிகள், பெங்களூர் மலர்*)

### விநாயகருக்குரிய விரத-வழிபாட்டு நாட்கள்:

- ஒவ்வொரு வாரமும் வரும் **வெள்ளிக்கிழமையும்,**
  (சித்திரை மாத வளர்பிறைச் சுக்கிரவாரத்தி(வெள்ளிக்கிழமையி)லிருந்து இந்நோன்பைத் தொடங்க வேண்டும் என்று கூறப்பெறுகிறது. நன்மக்கள், கல்வி, செல்வம் முதலியவற்றைப் பெற்று இனிது வாழ இவ்விரதம் உறுதுணை புரியும்)

- ஒவ்வொரு மாதமும் வரும் **வளர்பிறைச் சதுர்த்தி**#யும்,

- மாதந்தோறும் வரும் **தேய்பிறை (சங்கடஹர) சதுர்த்தி**#யும்,
  (மாசி மாதம் அமரபட்சம் (தேய்பிறை) மங்களவாரம் (செவ்வாய்க்கிழமை) கூடிய நாளில் வரும் சதுர்த்தியிலிருந்து இந்த விரதம் தொடங்கப்பெறுகிறது. இந்த விரதத்தை ஓராண்டுக்கு மேற்கொள்வது சிறப்புடையதாகச் சொல்லப்பெறுகிறது. அந்த நாளில் உண்ணாநோன்பிருந்து சந்திரோதயமானதும் விநாயகருக்கு ஆராதனைகள் செய்வது சங்கடஹர சதுர்த்தி விரத வழிபாடாகும். அன்று இரவு துயில் கொள்ளாது விநாயகர் வரலாறுகளைப் படிப்பது சிறப்புடையது);

அடிக்குறிப்பு:

# சாதாரணமாக ஒவ்வொரு தெய்வத்துக்கும் ஒரு குறிப்பிட்ட திதி விசேஷமானதாக இருக்கும். சிவனுக்குக் கிருஷ்ணபட்ச சதுர்த்தசி (மாத சிவராத்திரி), அம்பிகைக்குப் பௌர்ணமி, முருகனுக்கு சுக்ல சஷ்டி, இராமருக்கு சுக்லபட்ச நவமி, கிருஷ்ணருக்குக் கிருஷ்ணபட்ச அஷ்டமி என்று, அவை, வளர்பிறை, தேய்பிறை என்னும் இரண்டில் ஒன்றில் வருவதாகத்தான் இருக்கும். ஆனால் பிள்ளையாருக்கு மட்டும் சுக்லபட்ச சதுர்த்தி, கிருஷ்ணபட்ச (சங்கடஹர)சதுர்த்தி ஆகிய இரண்டுமே சிறப்பான நாட்கள்தாம். - காஞ்சிப் பெரியவர், *தெய்வத்தின் குரல்.*

- ஆவணித் திங்களில் வரும் வளர்பிறை (விநாயக) சதுர்த்தியும்,
(இதுவே கஜானனரின் அவதார நாளாகக் கருதப் பெறுகிறது. (பரம்பொருளுக்குப் பிறப்பு - இறப்பு இல்லை என்பதே சைவ சமயக் கொள்கை என்பதை இங்கு நினைவுபடுத்தாது இருக்க இயலவில்லை.) கருவில் இருக்கும்போது சிந்தூரனால் சிரம் துணிக்கப்பெற்ற விநாயகர், முன்னர் தம்மால் வதைக்கப்பெற்ற கஜமுகாசுரனின் யானைத் தலையைப் பொருத்திக் கொண்டு, கஜானனர் எனும் திருநாமத்தைப் பெற்றார். அவ்வாறு அவர் அவதாரம் செய்தருளிய நாள் ஆவணி மாதப் பூர்வபட்ச சதுர்த்தியும், விசாக நட்சத்திரமும், சோமவாரமும் (திங்கட்கிழமை), சிம்ம இலக்கினமும் கூடிய நாளாகும். சிவபெருமான் பூசித்த நாள் என்னும் சிறப்பும் ஆவணி சதுர்த்திக்கு உண்டு. இவற்றின் காரணமாகவே ஆவணி மாத வளர்பிறைச் சதுர்த்தி, விநாயகர் வழிபாட்டில் தலையாய இடத்தை வகிக்கிறது என்று விநாயக புராணம் கூறுகிறது.
ஆவணி சதுர்த்திக்குப் பத்து நாட்கள் முன்பிருந்து இதற்கான விரதம் மேற்கொள்ளப் பெறுகிறது. அந்த நாளிலிருந்து அடுத்த மாதம் (புரட்டாசி) சுக்கிலபட்ச சதுர்த்தி வரை 30 நாட்கள் செய்யப்பெறும் வழிபாடு விநாயக புராண விரதம் என்று கூறப்பெறுகிறது. அந்த நாட்களில் விநாயக புராணம் படிப்பது அல்லது கணபதி மூலமந்திரத்தை இயன்ற அளவு ஜபிப்பது சிறப்புடையது)

- மார்கழி மாதம் வரும் வளர்பிறை (விநாயக) சஷ்டியும்,
(இதனைக் குமார சஷ்டி விரதம், பிள்ளையார் நோன்பு, பெருங்கதை விரதம் என்று பலவாறாகக் கூறுவர். கார்த்திகை மாதக் கிருஷ்ணபட்ச (தேய்பிறை)ப் பிரதமை முதல் மார்கழித் திங்கள் சுக்கிலபட்ச சஷ்டி ஈறாகிய 21 நாட்கள் இந்த விரதம் கடைப்பிடிக்கப்படுகிறது. இந்த நோன்பு நோற்பவர்கள் 21 இழைகளாலாகிய காப்புக் கயிற்றினை, ஆண்கள் வலது மணிக்கட்டிலும், பெண்கள் இடது மணிக்கட்டிலும் அணிந்து கொள்ளுதல் வழக்கம். நோன்பு முடிக்கும் நாளில் மட்டும் முழுமையாக உண்ணாநோன்பிருக்கலாம்.
பொய் சாட்சி கூறியதற்காக உமையம்மையால் சபிக்கப்பெற்ற திருமால், குருட்டு மலைப்பாம்பாகி வடதீவில் ஒரு மரப்பொந்தில் மறைந்து வாழ்ந்து வந்தார். கஜமுகாசுரனை வதைத்துவிட்டுத் திரும்பிய கணேசரின் பார்வை பட்டதும், திருமால் சாபம் நீங்கித் தம் சுய உருவைப் பெற்றார். அது ஒரு மார்கழி மாத சஷ்டி நாளாகும். அந்த நாளையே பிள்ளையார் நோன்பு என்று கொண்டாடுகிறோம் - *பார்க்கவ புராணம்*)

- விநாயக சதுர்த்தியிலிருந்து தொடர்ச்சியாக ஒன்பது நாட்கள் கொண்டாடப்பெறும் விநாயக நவராத்திரியும், (யாழ்ப்பாணத்து வழக்கை மேற்கோள் காட்டித் தமிழ் லெக்சிகன் இத்தகவலைக் கூறுகிறது)

- பெண்கள் மட்டுமே மேற்கொள்ளும் வெள்ளிப் பிள்ளையார் கும்பிடுதல், செவ்வாய்ப் பிள்ளையார் கும்பிடுதல் ஆகியவையும்,
(வெள்ளிக்கிழமைகளில் விடியற்காலையிலும் (சூரியன் உதிப்பதற்கு முன்னதாகவே பூசையை முடித்து விடவேண்டுமாம்), தை, ஆடி மாதச் செவ்வாய்க்கிழமைகளில் இரவிலும் இப்பூசைகளை ஆண்கள் அறியாத வண்ணம் பெண்கள் மேற்கொள்வார்களாம்)
விநாயகருக்குரிய சிறப்பு, மற்றும், விரத நாட்களாகச் சமய நூல்களில் கூறப்பெறுகின்றன.

<u>சதுர்த்தி நாட்களில் விநாயகரை வழிபடுவதால் கிடைக்கும் 21 பேறுகள் :</u>
தர்மம், பொருள், இன்பம், சௌபாக்கியம், கல்வி, பெருந்தன்மை, நல்வாழ்வுடன் கூடிய மோட்சம், முகத்தில் பால் வடியும் தன்மை, வீரலக்ஷ்மி கடாட்சம், விஜயலக்ஷ்மி கடாட்சம், எல்லாரும் தன்னிடம் அன்பாக இருக்கும் தன்மை, குடும்பத்தில் கர்ப்ப ரக்ஷை, மக்கட்பேறு, நுண்ணறிவு, நற்புகழ், சோகத்தினால் வாடாத தன்மை, அசுபங்களை அகற்றல், தன் வாக்குக்கு எதிர்வாக்கு அடங்கிப் போதல், கோபங்கொண்டவர்களைச் சாந்தப்படுத்தும் தன்மை, பிறர் ஏவும் ஆபிசாரம் (பகைவன் மரணமடையும்படி செய்யும் கொடுந்தொழில்) அடக்குதல், துயர் தீர்தல்.

எல்லா நாட்களிலும் - குறிப்பாக இச்சிறப்பு நாட்களில் விநாயகரை வழிபட்டு, அவர் அருள் பெற்று உய்வடைவோம்.

## அபிஷேகமும் நைவேத்தியமும்

இறைமூர்த்தங்களுக்குப் பின்வரும் முறையில் **அபிஷேகம்** செய்யப்பெற வேண்டும் என்று **காரணாகமம்** கூறுகிறது.

சந்தனாதித் தைலம் (Fragrant medicated oil having sandal as the Chief ingredient), மாப்பொடி., மஞ்சள்பொடி, திரவியப்பொடி (அபிஷேகத்தூள்), பஞ்சகவ்யம், பஞ்சாமிர்தம், நெய், பால், தயிர், தேன், கருப்பஞ்சாறு, பழங்கள், இளநீர், சந்தனம், ஸ்நபனம் (மந்திரங்களால் உருவேற்றப்பெற்ற கலசநீர்), சங்கம் (சங்குநீர்)

**நிவேதனப் பொருட்கள்:** மக்கள் உண்ணக்கூடிய உயர்ந்த பொருட்கள் யாவும் இறைவனுக்கு உகந்தவையே. அதே நேரத்தில் விநாயகருக்கு உகந்தவையாகத் தேங்காய், வெல்லம், எள்ளுருண்டை, அப்பம், அவல், வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி ஆகியவை கூறப்பெறுகின்றன.

மேலும், **எப்பயறும், எக்கனியும், எக்கிழங்கும் எத்தேனும்** (பயறு வகைகள், பழங்கள், கிழங்கு வகைகள் ஆகிய எல்லாம்), **தொப்பையொரு பெருவயிற்றுப் பிள்ளைக்குச் சுமத்துதியே** என்று தக்கயாகப்பரணியும் பட்டியல் இடுகிறது. *(- கணபதி)*

## காலனித்துவப் போராட்டத்துக்குக் கணேசர் கவசமானார்

விநாயக சதுர்த்தியன்று புற்று மண்ணால் விநாயகப் பெருமானின் திருவுருவம் அமைத்து, அதில் விநாயகரை மந்திரம், பாவனை, கிரியைகளால் எழுந்தருளச் செய்து வழிபாடு செய்வதும், அடுத்தநாள் அவ்வுருவத்தை ஆற்றிலோ, குளத்திலோ, கடலிலோ விடுவதும் மரபு. ஆனால் காணாபத்தியம் வெகுவாகப் பரவியுள்ள மகாராஷ்டிராவில், பத்து நாட்கள் இவ்வாறு வழிபாடாற்றிப், பத்தாவது நாளான **ஆனந்த சதுர்த்தசி**யன்று விநாயகர் சிலைகளை நீர் நிலைகளில் விடுவதோடு, சதுர்த்தி விரதம் நிறைவு பெறும்.

இந்திய சுதந்திரப் போராட்ட வீரர்களில் குறிப்பிடத்தக்கவர்களில் ஒருவராகத் திகழ்ந்தவர் **லோகமான்ய பால கங்காதர திலகர்.** காலனித்துவத்தை எதிர்த்துப் போராடுவதில் மக்களை ஒன்று திரட்டவும், பிராமண - அப்பிராமண சமூகங்களிடையே ஒற்றுமையை உருவாக்கவும், கணேசரை (ஆவணி சதுர்த்தி நிறைவு நிகழ்ச்சியை) ஒரு கருவியாக அவர் பயன்படுத்திக் கொண்டார்.



"விரதத்தைத் தொடக்கி வைக்கும் விநாயகர்"



1893ஆம் ஆண்டு தொடங்கிப் பெரிய மைதானங்களில் பெரிய பெரிய விநாயகர் சிலைகளை வைத்து வழிபட்டுவிட்டு, நிறைவு நாளன்று அச்சிலைகளை ஆற்றிலோ கடலிலோ விடுவது என்று, சமய நிகழ்ச்சியைச் சாக்காக வைத்துப் பெருந்திரளான மக்களைக் கூட்டினார்; வழிபாட்டின் முடிவில் சுதந்திர உணர்வை மக்களிடையே ஊட்டினார். (மத விவகாரம் என்பதால் காலனித்துவ ஆட்சியாளர்கள் அதில் தலையிடவில்லையாம்). இவ்வாறு சமய - அரசியல் நிகழ்வாகத் தொடங்கிய விழா, இப்போது மகாராஷ்டிராவில் மட்டுமன்றித் தெற்கிலும் வேரூன்றி விட்டது.

"விழாவை முடித்து வைக்கும் விநாயகர் (மும்பை)"
(நன்றி: *The Star*)



***Follow your Dharma with zeal and enthusiasm.***
***Discharge your duties faithfully.***
***Develop all the virtues which constitute Dharma.***
***Never deviate an inch from the path of righteousness.***
***May the eternal Dharma of Hinduism***
***be preserved for ever.***

*- Swami Sivananda*

## Lord Ganesa



**We worship the sacred feet**
**Of the remover of obstacles,**
**The child of *Mahesvara*;**
**The diminutive Being**
**Who adorns the sacred thread;**
**The fan-eared; first-born,**
**With the *motaka*-filled hand;**
**Who bestrides the *musika*;**
**We worship *Vinayaka* of victory**

One of the many glories of Hinduism is the wide variety of divine manifestations that have been conceived. The Hindu pantheon is rich in deities, all of them represent the same divine ***Brahman*** (the ultimate reality) and are powerful pathways to salvation.

There is no gainsaying the possibilities of man developing the concept of God and faith in Him as a result of his experiences through the various vicissitudes of life that prove his helplessness. He often disposes, what man proposes. Such a God must be all-powerful. If He is pleased, all the obstacles in our path will be removed. If He is displeased He may thwart our efforts. Hence the paramount need to appease Him and please Him.

What could be the form of this almighty God? For a simple aboriginal living in a group (= *Gana*) near a forest or a mountain, the mighty elephant might have provided the clue. This might have led to the worship of an elephant-like God. He being the ***Pathi*** (= Lord) of the ***Gana*** (clan or group) might have obtained the name ***Gana-pathi***. As the group became more refined and cultured, this Elephant God might have been transformed into the present form.

A common Sanskrit word to denote the Elephant is ***Gaja***. Hence the name ***Gajanana*** or ***Gajamukha*** (elephant-faced) for Ganapathi. But the word ***Gaja*** has a much deeper connotation. ***'Ga'*** indicates ***Gati***, the final goal towards which the entire creation is moving, whether knowingly or unknowingly. ***'Ja'*** stands for *Janma*, birth or origin. Hence *Gaja* signifies God from whom the worlds have come out and towards whom they are progressing, to be ultimately dissolved in Him. The elephant head is thus purely symbolical and points to this truth. (- Swami Harshananda, *Hindu Gods and Goddesses*)

This divinity also bears the names of ***Pillaiyaar, Vignesvara, Ganapathi***, etc. The signification of the name ***Vignesvara*** is twofold. It means

1) He who forfends troubles, and
2) He who creates obstacles.

(***Vignam*** = obstacle, hindrance, difficulty; ***Esvaran*** = the Almighty, Head). And by reason of this a Hindu begins every serious undertaking by seeking to propitiate Him.

He is venerated by Hindus of all sects, and His cult is universal. One comes across the idol everywhere - in Temples, schools, public places; in short, in all frequented places. Ganesa is always the first God to be worshipped in all public ceremonies.

The most commonly accepted form of ***Ganapathi*** depicts Him in a human body with an elephant's head.

(The number of heads may be raised to five.) Out of the two tusks, one is broken. The one that is whole stands for the Truth, the One without a second. The broken tusk, which is imperfect, stands for the manifest world, which appears to be imperfect because of the inherent incongruities. That tusk (with which He indited the ***Maha Bharatha***) emphasizes the importance of instruction (learning).



He has four arms. (The arms may vary from two to ten.) Two of the arms hold the ***Pasa*** (noose) and ***Ankusa*** (goad). The ankusa guides souls on the righteous path; His rope *(pasa)* fetters the evil-doers and plunges them in misery. The other two are held in the ***Abhaya*** and ***Varada Mudras***. In one of His lower hands He, sometimes, holds a rosary (garland of ***rudraaksha*** beads) used both in telling prayers and counting beads. This suggests the idea that though the intellectual progress happens to be slow and imperceptible it ought to be pursed ceaselessly and His ***modhaka*** is symbolic of man's need to live on consecrated food. His five hands (in which His trunk is included) are symbolic of His five atcs of creation, preservation, destruction, concealment and grace. He may be seated in ***Padmasana*** (lotus-posture).

His huge and broad ears attest to the fact that those who seek enlightenment should listen more and talk less. They are large enough to listen to the supplications of everyone, but, like the winnowing basket, are capable of sifting what is good for the supplicant from what is not.

The bent trunk is a representation of ***Onkara*** or ***Pranava*** which being the symbol of *Brahman*, the Absolute, is declaring as it were that Ganesa is Brahman itself.

His immense belly which contains all the worlds and lives testify to His unbounded prowess and puissance.

The big size Ganapati's mount is a small size mouse (***Mushika***)! The word mushika is derived from the root 'mush' which means 'to steal'. A mouse stealthily enters into things and destroys them from within. Similarly egoism enters unnoticed, into our minds and quietly destroys all our undertakings. Only when it is controlled by divine wisdom, it can be harnessed to useful channels.

The unique quality of the mouse is that, while the rest of the world sleeps with great abandon, it quietly hoards all sorts of things in its hole, to be discovered only when its young ones start playing around!

**Similarly, before starting any task**, it is essential to undergo the penance of collecting all related information and making necessary preparations. This wisdom fuelled by hard work is the vehicle for success, signified by the laddoos in Ganesha's hands!

One of the varieties of Ganesa is called ***Uccista Ganapathi***, the ***Ganapathi*** associated with unclean things. There is nothing to dread or recoil in this concept. Dirty things are as much a part of nature as clean things. Making Ganesa preside over it and handle dirt scientifically and religiously can also be a spiritual discipline. This seems to be the philosophy behind this concept.

***Nirutta Ganapathi*** is a beautiful image showing Him as dancing. It seems once *Brahma* met Ganapathi and bowed down to Him with great devotion and reverence. Being pleased with this Ganapathi started dancing gracefully. That is why Ganapathi is declared to be the master of the arts of music and dancing.

Ganesa is worshipped not only in images but also in ***Yantras*** (geometrical diagrams), ***Kalasas*** (pots of water) and ***Sonapatra*** stones. The Svastika is also accepted as a graphic symbol of Ganapathi. *(Hindu Gods and Goddesses)*

## The Two Saktis of Lord Ganesa

There is a confusion regarding the two consorts of Lord Ganesa: Buddhi and Siddhi, with who He is often represented.



- Buddhi is wisdom, or more precisely sagacity, the intelligent and discriminating use of knowledge.
- Siddhi is success, or more precisely fulfillment, accomplishment or attainment.

While in North India Ganesa is conceived as having two consorts, in the South He is looked upon as a brahmachari, or bachelor.

Esoterically, it must be stressed that none of the Gods has a wife. Their consorts are not to be considered as separate from them, but as aspects of their being, as their Saktis, or power.

The Mahadevas, who live in the inner Third World, cannot be likened to men and women who live on the earth, known as the First World. They exist in perfectly evolved soul bodies, bodies which are not properly differentiated by sex.

They are pure beings made of pure consciousness and light; they are neither male nor female. To better understand these divine Gods, we sometimes conceive of them as being the man if they are strong in expression or the woman if they are gentle and compassionate. In truth, this is a misconception. There are no husbands and wives in the vast super conscious realms of the Third World, or Sivaloka.

Thus, Buddhi and Siddhi are properly seen as the two Saktis - wisdom and succes - of the great Ganesa, and not as His so-called consorts. These two represent benefits or boons accrued by His worshipers.

In an inner sense, Buddhi and Siddhi are the *Ida* and *pingala nadis*, the female and male currents, both of which are embodied within the being of Ganesa, corresponding to Valli and Devayani, the mythological consorts of Lord Murugan.

> ***Not every old text is excellent***
> ***nor is every new poem to be censured.***
> ***The wise make their selection***
> ***only after careful examination.***
> ***The mind of a fool***
> ***follows the opinion of others.***
>
> *- Malavikagnimitra Prologue*

## Thirty-Two Forms of Ganesa

A critical examination of the various names of Deities will enable us to know and trace the features of religious development and understand the religious tendencies of the people. Here an attempt is made to highlight how Lord Ganesa in His different ***bhangimas*** (postures and attitudes) is worshiped in ***Agamic*** temples.



1. **Bala Ganapati**
Bala Ganapati is "the Childlike" God of golden hue. In His hands He holds a banana, mango, sugar cane and jackfruit, all representing the earth's abundance and fertility. His trunk garners His favorite sweet, the *modaka*.



2. **Taruna Ganapati**
Eight-armed, Taruna Ganapati, "the Youthful," holds a noose and goad, modaka, wood apple, rose apple, His broken tusk, a sprig of paddy and a sugar cane stalk. His brilliant red colour reflects the blossoming of youth.



3. **Bhakti Ganapati**
Shining like the full moon during harvest season and garlanded with flowers, Bhakti Ganapati, dear to devotees, is indeed pleasant to look upon. He holds a banana, a mango, coconut and a bowl of sweet *payasa* pudding.



4. **Vira Ganapati**
The "Valiant Warrior," Vira Ganapati, assumes a commanding pose. His 16 arms bristle with weapons, symbols of mind powers: a goad, discus, bow, arrow, sword, shield, spear, mace, a battleaxe, a trident and more.



5. **Sakti Ganapati**
Four-armed and seated with one of his Saktis on His knee, Sakti Ganapati, "the Powerful," of orange-red hue, guards the householder. He holds a garland, noose and goad, and bestows blessings with the abhaya mudra.



6. **Dvija Ganapati**
Four-headed Dvija Ganapati, "the Twice-born," is moon-like in colour. Holding a noose, a goad, an ola leaf scripture, a staff, water vessel and japa beads, He reminds one and all of the urgency for disciplined striving.



7. **Siddhi Ganapati**
Golden-yellow Siddhi Ganapati, "the Accomplished," is the epitome of achievement and self-mastery. He sits comfortably holding a bouquet of flowers, an axe, mango, sugar cane and, in His trunk, tasty sesame sweet.



8. **Ucchishta Ganapati**
Ucchishta Ganapati is "Lord of Blessed Offerings" and guardian of culture. Of blue complexion and six-armed, He sits with His Sakti, holding a *vina*, pomegranate, blue lotus flower, japa mala and a sprig of fresh paddy.



9. **Vighna Ganapati**
Vighna Ganapati, "Lord of Obstacles," is of brilliant gold hue and bedecked in jewels. His eight arms hold a noose and goad, tusk and modaka, conch and discus, a bouquet of flowers, sugar cane, flower arrow and an axe.



### 10. Kshipra Ganapati

Handsome, red-hued Kshipra Ganapati, "Quick-acting" giver of boons, displays His broken tusk, a noose, goad and a sprig of the *kalpavriksha* (wish-fulfilling) tree. In His uplifted trunk He holds a tiny pot of precious jewels.



### 11. Heramba Ganapati

Five-faced, white in colour, Heramba Ganapati, "Protector of the weak," rides a big lion. He extends the gestures of protection and blessing while holding a noose, japa beads, axe, hammer, tusk, garland, fruit and *modaka*.



### 12. Lakshmi Ganapati

Lakshmi Ganapati, pure white giver of success, sits flanked by wisdom and Achievement. Gesturing *varada mudra*, He holds a green parrot, a pomegranate, sword, goad, noose, sprig of *kalpavriksha* and a water vessel.



### 13. Maha Ganapati

Accompanied by one of His Saktis, "the Great," Maha Ganapati, is red-complexioned and three-eyed. He holds His tusk, a pomegranate, blue lily, sugar-cane bow, discus, noose, lotus, paddy sprig, mace and a pot of gems.



### 14. Vijaya Ganapati

Four-armed, of red hue and riding His resourceful *mushika*, Vijaya Ganapati is "the Victorious" bestower of success. His insignia are the broken tusk, elephant goad, a noose and a lucious golden mango, His favorite fruit.



### 15. Nritta Ganapati

The happy "Dancer," Nritta Ganapati, is four-armed and golden, with rings on His fingers, holding a tusk, goad, noose and modaka sweet. He prances under the kalpavriksha tree, epitomizing exuberant activity and joy.



### 16. Urdhva Ganapati

Seated with one of his saktis on His left knee, Urdhva Ganapati is "the Elevated" Lord of Golden hue. In His six hands He holds a sprig of paddy, a lotus, the sugar-cane bow, an arrow, His ivory tusk and a blue water lily.



### 17. Ekakshara Ganapati

Ekakshara, of "single-Syllable" (*gam*), is three-eyed, of red complexion and attire. Crescent moon on His crown, He sits in lotus pose upon Mushika, offers the boon-giving gesture and holds a pomegranate, noose and goad.



### 18. Vara Ganapati

Vara ganapati, "the Boon-giver" with prominent third eye of wisdom, holds a dish of honey, the noose and goad and encloses a pot of jewels in His trunk. His sakti is at His side, and the crescent moon adorns His crown.



### 19. Tryakshara Ganapati

Tryakshara Ganapati, "the Lord of Three Letters" (A-U-M), is gold in colour and has fly whisks in His big floppy ears. He carries the broken tusk, goad, noose and mango and is often seen grasping a sweet modaka in His trunk.



**20. Kshipra Prasada Ganapati**

Kshipra Prasada Ganapati, "the Quick Rewarder," presides from a *kusha*-grass throne. His big belly symbolizes the manifest universe. He holds a noose, goad, tusk, lotus, pomegranate and a twig of the wish-fulfilling tree.



**21. Haridra Ganapati**

Haridra Ganapati, the golden one dressed in bright yellow vestments, sits calmly on a posh, regal throne. Along with His tusk and a modaka, He wields a noose to hold devotees close and a sharp goad to spur them onward.



**22. Ekadanta Ganapati**

Ekadanta, of "Single Tusk," is distinguished by His blue colour and sizeable belly. The attributes of this *murti* are an axe for cutting the bonds of ignorance, prayer beads for japa, a laddu sweet and the broken right tusk.



**23. Srishti Ganapati**

Riding on His docile and friendly mouse, Srishti Ganapati is the lord of happy " Manifestation." This active God, of red complexion, holds His noose a goad, a perfect mango, and His tusk, representing selfless sacrifice.



**24. Uddanda Ganapati**

Uddanda Ganapati is the bold "Enforcer of Dharma," the laws of being. His ten hands hold a pot of gems, a blue lily, sugar cane, a mace, lotus flower, sprig of paddy, a pomegranate, noose, garland and His broken tusk.



**25. Rinamochana Ganapati**

Rinamochana Ganapati is humanity's liberator from guilt and bondage. His figure of alabaster skin is apparelled in red silks. He bears a noose and a goad, His milk-white tusk and a favorite fruit, the rose apple.



**26. Dhundhi Ganapati**

Red-hued Dhundhi Ganapati, "the Sought After," holds a strand of *rudraksha* beads, His broken tusk, an axe and a small pot of precious gems thought to represent the treasury of awakenings He saves for all ardent devotees.



**27. Dvimukha Ganapati**

Dvimukha Ganapati, called Janus by the Romans, with two divergent faces, sees in all directions. His blue-green form is dressed in red silk. He wears a bejeweled crown and holds a noose, goad, His tusk and a pot of gems.



**28. Trimukha Ganapati**

Trimukha Ganapati, the contemplative "three-faced" Lord of red hue, sits on a golden lotus, telling His beads, holding a noose, goad and vessel of nectar. He gestures protection with a right hand and blessings with a left.



**29. Sinha Ganapati**

Sinha Ganapati, white in colour, rides a lion and displays another lion in one hand, symbolizing strength and fearlessness. He also holds a kalpavriksha sprig, the vina, a lotus blossom, flower bouquet and a pot of jewels.



30. **Yoga Ganapati**
Yoga Ganapati is absorbed in mantra japa, His knees strapped in meditative pose, hands holding a yoga staff, sugar cane stalk, a noose and prayer beads. His colour is like the morning sun. Blue garments adorn His form.



31. **Durga Ganapati**
Durga Ganapati, the "Invincible," waves the flag of victory over darkness. This splendid murti is of deep gold hue, dressed in red, holding a bow and arrow, noose and goad, prayer beads, broken tusk and a rose apple.



32. **Sankatahara Ganapati**
Sankatahara Ganapati, "the Dispeller of Sorrow," is of sunlike hue, dressed in blue, and seated on a red lotus flower. He holds a bowl of pudding, a goad and a noose while gesturing the boon-granting varada mudra.

(Courtesy: R. Sri Ram)

## The breaking of coconut

Breaking coconuts into smithereens is done before the idol of Ganapati. This is deemed an important act of devotion.

It is an indication of the devotee's preparedness to sacrifice anything to please his deity. On the tufted portion of the coconut there are three eye-like formations. Every human being is said to be endowed with a third eye situated between the brows. This bears a nexus with the third eye of Lord Siva. The tufted portion is like the human head and the veins running down are likened to the nerves running down from the brain. In other words, the coconut is symbolic of the human head. The devotee by his act of breaking the coconut metaphorically sacrifices his very head, which is the supreme part of the body. This is dedication par excellence.

By such breaking, it is considered, that three *malas* (*aanavam*, *kanmam* and *maayai*) are smashed. The coconut must be so broken that the pieces should count more than three.

With the perishing of *aanava malam* (the sect of ego), the soul stands cleansed; then wells up ambrosia. The broken outer covering reveals the white kernel, symbolic of purity, as well as the sweet liquid of the coconut. This is symbolic of the ambrosial up surging.

In India teeming with poverty-ridden villages, when coconuts are thus broken in the shrines, urchins gather them for eating.

**O Lord!**

**You are indeed both form and formlessness;**
**Existence and non-existence;**
**The bud and its blossom;**
**The sound and shining light;**
**Life and its very source;**
**Hope and remorseless fate;**
**Come as my Guru;**
**Grant me Your matchless grace.**





பாதம் ஏத்தப் பறையும்-நம் பாவமே

(பாத விநாயகர் - பழநி)

(நன்றி: பழநி குடமுழுக்கு விழா மலர்)

மணக்குள விநாயகர் - பாண்டிச்சேரி

(நன்றி: ஆனந்த விகடன், தீபாவளி மலர்)

உ
சிவமயம்
ஓம் கம் கணபதயே நம:

# Pronunciation Guide (Sanskrit)

## VOWELS

| | | |
|---|---|---|
| அ | a | **a**nnam (food) |
| ஆ | ā | **ā**śramah (hermitage) |
| இ | i | **i**nduh (moon) |
| ஈ | ī | g**ī**tam (song) |
| உ | u | **u**daram (belly) |
| ஊ | ū | s**ū**ryah (sun) |
| ரு | ṛ | K**ṛ**ṣṇah (Lord Krishna) |
| ரூ | ṛū | pit**ṛū**ṇām (father's) |
| லு | ḷ | **ḷ**u (mountain) *(one letter word)* |
| ஏ | ē | **ē**kah (one) *(There is no short vowel 'எ' - 'e' - (as the **e** in the Tamil word, eṭṭu (eight) in Sanskrit)* |
| ஐ | ai | **ai**kyam (unite) |
| ஓ | ō | l**ō**kah (world) *(There is no short vowel 'ஒ' - 'o' - (as the **o** in the Tamil word onru (one) in Sanskrit)* |
| ஔ | au | G**au**ri (Parvathi) |
| அம் | am | h**am**sah (swan) |
| அஃ | ah | sur**ah** (deity, Deva) |

## CONSONANTS

| | | |
|---|---|---|
| க | k | **k**āraṇam (cause) |
| க | kh | na**kh**ah (nail) |
| க | g | **g**uruh (teacher) |
| க | gh | vi**gh**nah (obstacle) |
| ங | ṅ | a**ṅ**kah (number) |

## Pronunciation Guide (Sanskrit)

| CONSONANTS | | |
|---|---|---|
| ச | c | u**c**cah (high) |
| ச | ch | **ch**ittam (mind) |
| ஜ | j | **j**alam (water) |
| ஜ | jh | nir**jh**arah (stream) |
| ஞ | ñ | j**ñ**ānam (knowledge) |
| ட | ṭ | nā**ṭ**yam (dance) |
| ட | ṭh | pā**ṭh**asāla (school) |
| ட | ḍ | garu**ḍ**ah (the king of birds; vehicle of Lord Vishnu) |
| ட | ḍh | dṛ**ḍh**am (firmly) |
| ண | ṇ | Viṣ**ṇ**uh (Vishnu) |
| த | t | ra**t**nam (jewel, gem) |
| த | th | ka**th**ā (story) |
| த | d | **D**ēvī (Goddess) |
| த | dh | **dh**anam (wealth) |
| ந | n | **n**adi (river) |
| ப | p | **p**akṣi (bird) |
| ப | ph | **ph**alam (fruit) |
| ப | b | **B**rahmā (Creator) |
| ப | bh | **Bh**ānuh (Sun) |
| ம | m | **m**adhyah (middle) |
| ய | y | **y**antrah (machine) |
| ர | r | **r**ājyam (kingdom) |
| ல | l | ka**l**yāṇam (happiness) |

## Pronunciation Guide (Sanskrit)

| CONSONANTS | | |
|---|---|---|
| வ | v | **vighnah** (obstacle, hindrance) |
| ஸ | ś | **āśramah** (hermitage) |
| ஷ | ṣ | **Viṣṇuh** (Lord Vishnu) |
| ஸ | s | **saundaryam** (beauty) |
| ஹ | h | **Harah** (Siva) |
| க்ஷ | kṣ | **lakṣyam** (aim) |
| ராம: | ராமஹ | Rāmaha |
| ஸ்ரீ: | ஸ்ரீஹி | Srihi |
| பாண்டு: | பாண்டுஹு | Pāṇḍuhu |
| க: கிம் | கஹ் கிம் | kah kim |

*Source: 'Learn Sanskrit in 30 days', Balaji Publications*



*Worship of God is the indispensable preliminary*
*condition for obtaining the grace of God.*
*The Soul is saved by the knowledge*
*that it is dependent on God*
*and is under His control.*
*Correct knowledge results in the love of God.*
*Bhakti is the result of knowledge of th greatness of God.*

*- Swami Sivananda*

உ
சிவமயம்
ஓம் கம் கணபதயே நம:

# விநாயகர் வழிபாடு

பாராயணத்திற்குரிய வடமொழி சுலோகங்கள், **அர்ச்சனைத் தொடர்கள்,**
தோத்திர-சாத்திரப் பாடல்கள், புராணங்கள், மற்றும் ஏனைய நூல்களிலிருந்து சில பாடல்கள் ஆகியவற்றோடு, தேவாரத் தலங்களிலுள்ள விநாயக மூர்த்தங்களின் பெயர்கள் அடங்கிய **108 அர்ச்சனைத் தொடர்கள்**, ஔவை மூதாட்டியின் விநாயகர் அகவல், விநாயக புராணத்தில் காணப்பெறும் **விநாயக கவசம்** ஆகியவையும் இப்பகுதியில் இடம் பெறுகின்றன.
இவை அனைத்தும் குறுந்தட்டிலும் பதிவு செய்யப்பெற்று இந்நாலுடன் இணைக்கப் பெற்றுள்ளன.
விநாயக பக்தர்கள் இவற்றை இயன்ற அளவு பாராயணம் செய்து - பாடி - மலர் தூவி வழிபட்டு ஆனைமுகனின் அருளைப் பெறுவார்களாக!

## வேதியர் பேணிய வேழமுகன்

*(மறையவர் விரும்பி வழிபடும் யானைமுகத்தவர்)*

1. **தியான சுலோகம்:**
ஒவ்வொருவரின் உடலிலும் குதத்திற்கு (*மலங்கழியும் வாயில்*, anus) இரண்டு அங்குலம் மேலாக, மூலாதாரத்தின் (a cakram or nerve-plexus in the body, described as a four-petalled lotus) நான்கு தளங்களில், வ-ச-க்ஷ-ஸ என்னும் எழுத்துகளால் அலங்கரிக்கப்பெற்ற முக்கோண மத்தியில், ஓங்காரம் என்னும் கர்ணிகை (தாமரைப் பொகுட்டு, pericarp of the lotus)யில்,வல்லபை சமேதராகக் கணபதி எழுந்தருளியிருக்கிறார் என்று ஒரு சுலோகம் கூறுகிறது. அவர், யானை முகத்தோடு செந்நிறமாக, அபய-வரத கரங்கள், பாச - அங்குசங்கள் ஏந்திய கரங்கள் என நான்கு கரத்தை உடையவராக, மூஷிக வாகனத்தோடு எழுந்தருளி இருப்பார். அதற்கேற்ப அந்த இடத்தில் விநாயகர் இருப்பதாக நினைத்துப் பின்வரும் சுலோகத்தால் அவரது திருவுருவைத் தியானிப்போம்.

**சுக்லாம்பரதரம், விஷ்ணும், சசிவர்ணம், சதுர்புஜம் |**
**ப்ரஸந்ந வதநம் த்யாயேத் ஸர்வ விக்நோபசாந்தயே ||**

*(வெண்மையான ஆடை உடுத்திருப்பவரும், எங்கும் நிறைந்திருப்பவரும் (சர்வ வியாபி), நிலவு போன்ற ஒளி மிகுந்தவரும், நான்கு கைகளை உடையவரும், மலர்ந்த முகத்தினரும் ஆகிய பெருமான் (விநாயகர்), எல்லா இடையூறுகளையும் விலக்கிச் சாந்தியை உண்டாக்கும் பொருட்டு அவரைத் தியானிக்கிறேன்)*

**Suklām bharadaram viṣṇum, sasi varṇam, catur bhujam|**
**prasanna vadanam, dyāyedh sarva vighnōpa sāntayē||**

இந்த சுலோகத்தில் இடம்பெற்றுள்ள **சுக்லாம்பரதம், விஷ்ணும், சசிவர்ணம், சதுர்புஜம், ப்ரஸந்ந வதநம்** என்னும் ஐந்து பெயர்களுக்கும் ஐந்து முறை நெற்றிப் பொட்டில் குட்டிக் கொண்டு கணேசப் பெருமானைத் தியானித்து வணங்க வேண்டும்.
(இது போன்று விநாயகரின் ஐந்து பெயர்களை உள்ளடக்கிய தமிழ்ப் பாடல், பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தின் காப்புச் செய்யுளாக அமைந்துள்ளது. (இது குறித்துக் கருத்து வேறுபாடு நிலவுகிறது; அதைப் பொருட்படுத்தாது வழிபாட்டில் சிந்தையைச் செலுத்துவோம்)

ஐந்து கரத்தனை, யானை முகத்தனை,
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை,
நந்தி மகன்தனை, ஞானக் கொழுந்தினைப்,
புந்தியில் வைத்து,அடி போற்றுகின் றேனே.

*- திருமந்திரம்*

*(தும்பிக்கையையும் சேர்த்து ஐந்து கைகளை உடையவரும், யானை முகத்தினரும், பிறைச் சந்திரன் போன்று வளைந்த ஒற்றைத் தந்தத்தை உடையவரும், நந்தி (சிவன்) மகனும், ஞானச்சுடரும் ஆகிய பெருமானை (கணபதியை) உள்ளத்தில் இருத்தி அவர்தம் பாத கமலங்களைப் போற்றி வணங்குகின்றேன்)*

**Aindu karattaṉai, yāṉai muhattaṉai,**
**indiṉ iḷam piṟai pōlum eyiṟṟaṉai,**
**Nandi mahaṉdaṉai, ñāṉa-k koḻundiṉai-p**
**pundiyil vaittu aḍi pōṟṟuhiṉṟēṉē.**

2. <u>அ. விடியலில் விநாயகர் வழிபாடு:</u>

(விடியற்காலையில் எழுந்ததும் படுக்கையில் அமர்ந்தபடியே 'இன்று பொழுது நன்கு புலரவேண்டும்; எல்லாச் செயல்களும் இனிதே நடைபெற வேண்டும்' என்று மஹா கணபதியைப் பிரார்த்தித்துப், பின்வரும் தமிழ்ப் பாடலையும், வடமொழி சுலோகங்களையும் (கணபதி ப்ராதஸ்மரணம்) சொல்லி வழிபடுவது உத்தமமானது)

தேவர்-தொழுது எழும்-கருணைச் செல்வனே போற்றி!
சிறந்து-ஒளிரும் மங்கல-சொ ரூபனே போற்றி!
ஓவறு-சித் திகள்-அனைத்தும் உதவுவோய் போற்றி!
ஒலி-கெழு-கிண் கிணி-பாத சால-நூ புரங்கள்
மேவி-ஒளிர் சரணனே போற்றி!மத தாரை
விரவிய-திண் கபோலனே போற்றி!நினது அருளால்
பாவமொடு, பல-பிணியும், பம்பு-வறு மைகளும்,
பலவான இடர்களையும் பாற்றுக-இன் புறவே.

*- விநாயக புராணம்*

*(வானோர் விடியலில் தொழுது எழுகின்ற கருணையாளனே! உன்னைப் போற்றுகின்றோம்; சுடர் விட்டுப் பிரகாசிக்கும் மங்கல உருவினனே! உனக்கு வணக்கம்; எல்லையற்ற எல்லாச் சித்திகளையும் வழங்கும் வள்ளலே! போற்றி; ஓசை மிகுந்த கால் அணிகளையும், சிலம்பினையும் தரித்த திருவடிகளைக் கொண்டவனே! போற்றி; மதநீர் ஒழுக்கினால் ஏற்படும் சுவடுகளைக் கொண்ட வலிமையான கன்னங்களை உடையவனே! உன்னைப் போற்றுகின்றோம்; அடியேங்கள் செய்த பாவங்களைப் போக்கி, எங்களுக்கு ஏற்படும் பலவாறான நோய்களையும், கடுமையான வறுமையையும், மற்றும் எங்களுக்கு ஏற்படும் துயர்களையும் களைந்து, நாங்கள் இன்புற்று வாழ அருள் புரிவாயாக!*

**Dēvar toḻudu eḻum karuṇai-c celvaṉē pōṟṟi!**
**Siṟandu oḷirum maṅgala sorūpaṉē pōṟṟi!**
**Ōvaṟu siddihaḷ aṉaittum udavuvōy pōṟṟi!**
**Oli keḻu kiṇ-kiṇi pādasāla nūpuraṅgaḷ**

mēvi oḷir saraṇaṉē pōṟṟi! Mada tārai
viraviya tiṉ kapōḷaṉē pōṟṟi! Niṉadu aruḷāl
pāvamoḍu, pala piṇiyum, pambu vaṟumaihaḷum,
palavāṉa iḍarhaḷaiyum pāṟṟuha iṉbuṟavē.

2. ஆ. கணபதி ப்ராதஸ்மரணம் (வடமொழியில் விடியற்காலை விநாயகர் வழிபாடு)

ப்ராத: ஸ்மராமி கணநாதம் அனாத பந்தும்
ஸிந்தூர பூர்ண பரிசோபித கண்ட யுக்மம்|
உத்தண்ட விக்ன பரிகண்டன சண்ட தண்டம்
ஆகண்டலாதி ஸுரநாயக ப்ருந்த வந்த்யம் || 1

Prādhaha smarāmi Gaṇanātam aṉātha bhandum
sindhūra pūrṇa parisōbita gaṇda yugmam|
udhdaṇḍa vigṉa parikaṇḍaṉa chaṇḍa dhaṇḍam
ākaṇḍalāti suranāyaka brundha vandhyam||

ப்ராதர் நமாமி சதுரான வந்த்யமானம்
இச்சானுகூலம் அகிலம் ச வரம் ததானம்|
தம் துந்திலம் த்விர ஸநாதி பயஞ்ஜ ஸூத்ரம்
புத்ரம் விலாஸ சதுரம் சிவயோ: சிவாய || 2

Prādhar namāmi chathurāṉa vandyamāṉam
icchāṉukūlam akilam ca varam dhadāṉam|
tham thundilam dvira sanādhi bhayañja sūthram
puthram vilāsa chathuram Sivayōh Sivāya||

ப்ராதர் பஜாம்ய பயதம் நிஜ பக்த சோக
தாவானலம் ஸுரவரம் வரகுஞ்ச ராஸ்யம்|
அக்ஞான கானன விநாசன ஹவ்ய வாஹம்
உத்ஸாக வர்த்தனமஹம் ஸுதமீ ஸ்வரஸ்ய || 3

Prādhar bhajāmya bhayatham nija bhakta sōkha
tāvāṉalam suravaram varakuñja rāsyam|
agñāṉa kāṉaṉa vināsaṉa havya vāham
uthsāha varthaṉamaham sudhamī svarasya||

ஸ்லோகத்ரய மிதம் புண்யம் ய: படேத் ப்ரயத புமான்|
ப்ராதருத்ராய ஸததம் ஸ ஸாம்ராஜ்ய ம வாப்னுயாத் ||

Slōkathraya midham puṇyam yah paḍēt prayadha pumān|
prādharudhrāya satatam sa sāmrājya ma vāpnuyāth ||

பொழிப்புரை:

1. கணபதியை, ஏழை பங்காளனை, சிவந்த இரு கன்னங்களை உடையவனை, எல்லா இடையூறுகளையும் களைபவனை, வானோர் கோமானைக் காலையில் தியானிக்கிறேன்.
2. நான்முகன் தொழும் தேவனை, அடியாருக்கு அருள் புரியும் அண்ணலைப், பாம்பாபரணனை, உமையருள் பாலனை, மங்களம் அருளக் காலையில் வணங்குகின்றேன்.
3. அபயம் அளிப்பவனை, அடியார் துயர் அகற்றுபவனை, தேவர் கோமானை, யானைமுகத்தவனை, அஞ்ஞானமாகிய ஆரண்யத்தை எரிக்கும் அனலனை (அக்கினியை), உற்சாகம் ஊட்டுபவனை, அரன் மகனைக் காலையில் வழிபடுகின்றேன்.
யாரொருவர் காலையில் எழுந்ததும் மனமுவந்து பக்தியுடன் இந்த சுலோகங்களைச் சொல்கிறாரோ, அவர் பேரின்பம் பெறுவார்.

(நன்றி: நஜன், *கணபதி ஹ்ருதயம்*)

3. கணேச மானஸ பூஜா:

(*மானசபூஜை* (மனத்தில் பாவனையாலே வழிபடுதல்) செய்வதால், பக்தன் கணபதியாகவே ஆகிவிடுகிறான் என்று கிருத்ஸமதர் என்னும் முனிவர் பிரஹலாதனிடம் கூறினார். உள்ளத்தில் விநாயகரின் உருவைத் தியானித்துப், பாவனைகளால் எல்லா உபசாரங்களையும் செய்து வழிபடுவது மானச பூஜை எனப்பெறும். வெளிப்படையாகச் செய்யும் சடங்குகளை விட, இத்தகைய உள்ள வழிபாடு மிகவும் உயர்ந்தது)

வாத்ஸல்யபா ஜனமகாதி பகன்யகாயா
மாத்ஸர்ய ஸூன்ய ஹ்ருதயைர் புவி பாவனீயம்|
ப்ரத்ஹஜாத் விநிபாதன லப்த வர்ணம்
அத்யூர்ஜிதம் ஹ்ருதி பஜாமி கணாதி நாதம் || 1

Vātsalyabā janamahāti baganyakāyā
mātsarya sūnya hrudayair bhuvi bhāvanīyam|
brathajāt vinipātana labhda varṇam
atyūrjitam hruti bhajāmi Gaṇāti nādham ||

ஆவாஹயாமி கணநாத உமாமஹேச
ஸர்வ தஸ்வ பூடிதம் அபநீத துரந்தராயம்|
யோகீந்திர மானஸ ஸரோருஹ ஸம்விகாஸ
லீலா விசேஷ சதுரம் நிகமாந்த நிஷ்டம் || 2

Āvāhayāmi Gaṇanāta Umāmahēsa
sarva tasva pūḍitam apanīta durantarāyam|
yōgīndra māṉasa sarōruha samvikāsa
līlā visēṣa caturam nikamānta niṣṭam||

மாணிக்ய மஞ்ஜுல மரீசி மனோஜ்ஞ பார்ஸ்வம்
ஸாந்த்ரீபவன் மரகதாவலி மேசகாயம்|
முக்தா மணி ப்ரகரமே துரிதாந்த ராலம்
ரத்னாஸனம் தவ ஹ்ருதா பரிகல்பயாமி || 3

Māṇikya mañjula marīci manōjña bhārsvam
sāntrībhavaṉ maragatāvali mēsakāyam|
muktā maṇi prakaramē turitānta rālam
ratṉāsaṉam tava hrutā parikalpayāmi||

கங்காதி புண்ய ஸரிதாம் பரிபூத தீர்த்தை:
பாத்யம் தவாத்யவதி ஸுன்ய ஸமர்ப்பயாமி |
அர்க்கியம் ததாம்யஹம் அநர்க்க குணாபிராம
ப்ரத்யூஹவாரண ஸுவாரண வக்த்ர துப்யம் || 4

Gaṅgāti puṇya saritām paribūta tīrtaihai
pādhyam tavātyavati sūṉya samarppayāmi|
arkyam datāmyaham anarka guṇābhirāma
pratyūhavāraṇa suvāraṇa vaktra tubyam||

ப்ரத் யாஹ்ருதைர அகில புண்ய ஸரித்வராப்ய
தீர்த்தைர் ததாம்யமலம ஆசமனம் ச துப்யம் |
ஸுக்தாதி மந்த்ர நிவஹைரபி மந்த்ரி தைஸ்ச
புண்யோதகை ஸ்தவ ஸிர: ஸ்நபயாம் யஜஸ்ரம் || 5

Prat yāhrudaira akhila puṇya saritvarābhya
tīrtair tatāmyamalama ācamaṉam ca tubyam|
sūktāti mantra nivahairabhi mantri taisca
puṇyōdakai stava sirah snabayam yajasram||

ஆரூட மா சரணம் அப்ய பிஷிச்ய தீர்த்தை:
ஆலோக யந்நகில மங்கல மானனம் தே |
ஆனந்த நிர்பரம் நாஸ்சுலு கீக்ருதாக்ஷ:
கிம்வா பவாமி ஸபலீ க்ருத புண்ய ஜன்மா || 6

Ācūḍa mā caraṇam abya bhiṣicya tīrtaihi
ālōka yannakila maṅgala māṉaṉam tē|
āṉanda nirparam nāsculu kīkrudhākṣa
kimvā bhavāmi sapalī kruta puṇya jaṉmā||

கஸ்தூரி காகுமரு மீக்ருத சந்தநானி
திவ்யம் து கூலயுகலம் ச ததாமி துப்யம் |
யக்ஞோப வீதமபி மந்த்ரி ஸமர்ப்பயாமி
திவ்யாம் ஸ்ச பூஷண கணான் ப்ரதி பாதயாமி || 7

Kastūri kākumaru mīkruta candanāṉi
divyam tu kūlayukalam ca dhadāmi tubyam|
yagñōpavītamabhi mantri samarppayāmi
divyāmsca bhūṣaṇa gaṇāṉ prati pādayāmi||

ஜாதீ ஸு சம்பக ஸரோருஹ குந்தமல்லீ
பில்பாதி பிர்பஹு விதைரி தரைஸ்ச புஷ்பை: |
த்வா மர்ச்ச யந்நமர ஸம்ஹதி ஸேவ்யமானம்
ஆராத் பஜாமிது கதா க்ருதக்ருத்ய பாவம் || 8

jāti su campaka sarōruha kundamallī
bilpāti birbahu vidairi daraisca puṣpaihi|
tvāmarcca yannamara samhati sēvyamāṉam
ārāt bhajāmitu gatā kruta krutya bhāvam||

ஸ்வாமிந் ததாம்ய கருகுக்குலு சந்தனாதி
தூபாந் ஸுகந்த பரிதான் சிவ ஸுநவே தே |
ஆஜ்யப்லு தாமல ஸுவர்த்தி பிரேத மாநம்
ஆதர்சயாமி தநுதே தபநீய தீபம் || 9

Svāmin dhadāmya karugugkulu candanāti
dūpān suganta paritān Siva sunavē tē|
ājyaplu tāmala suvartti prēdha mānam
ādharsayāmi danutē tapanīya dīpam||

சோஷ்யைஸ்ச பக்ஷ்ய நிவஹைச்ச கரம்பிதம் தே
போஜ்யம் தாமி கணநாயக திவ்யம் அன்னம்|
ஆமோதகம் ச கிரி ஸுத மோதகானாம்
ஸ்வாமிந் பர: ஸதமபி ப்ரதிபாதயாமி || 10

Chōṣyaisca bhakṣya nivahaicca karabidam tē
bhōjyam dhadāmi Gaṇanāyaka divyam annam|
āmōtakam ca Giri suda mōtagānām
svāmin parah satamabhi pradipādayāmi||

ஆனம்ர நாகி கணமஞ்ஜுல மௌலி மாலா
நீராஜ்யமான சரணத்வய விக்னஹந்த:|
கர்ப்பூர தீ நிவஹைஸ்தவ பாத பத்மம்
நீராஜயாமி தநுமாம் பரிபாஹி முக்தம் || 11

Ānamra nāgi gaṇamañjula mauli mālā
nīrajyamāna caraṇatvaya vignahantaha|
karpūra dī nivahaistava pādha padmam
nīrājayāmi danumām paripāhi muktam||

புஷ்பாஞ்ஜலிம் ப்ரசுரயாமி ஸுவர்ண புஷ்பை:
ஸந்மந்திர புஷ்பமபி ச ப்ரதிபாதயாமி |
ஸர்வோபசார நிவஹாம்ஸ்ச ஸமர்ப்பயாமி
ஸ்வாமிந் கணாதிப ஸமுத்தரமாம் பவாப்தே: || 12

Puṣpāñjalim prasurayāmi svarṇa puṣpaihi
sanmantra puṣpamabhi ca pradipādayāmi|
sarvōpacāra nivahāmsca samar payāmi
Svāmin Gaṇātipa samuddaramām bavāptē||

ந ஆரோக்ய மத்ய கலயே ந சபோக்ய ஜாதம்
பாக்யம் நவா விஷய லம்படதா நிதானம் |
வைராக்யமேவ ஸு தராமுபலம் பயன்மாம்
ஸ்வாமிந் ஸமுத்தர பவாம்புரிதேர் துரந்தாத் || 13

Na ārōkya madya kalayē na cabōgya jātam
bāgyam navā viṣaya lampaḍatā nidānam |
vairāgyamēva su darāmubhalam bayanmām
Svāmin samuddara bavāmpuritēr durantāt ||

இத்தம் கணாதிபதி மானஸ பூஜனம்
ய: கைவல்யதம் ஸுலலிதம் படதீஹ பக்த்யா |
நாகாமி ஜன்ம பயமஸ்தி ஹி தஸ்ய பும்ஸ:
கைவல்ய ஸௌதம சிராதனு வீக்ஷதே ஸ: || 14

Ittam Gaṇātipati mānasa pūjanam
ya kaivalyatam sulalitam padadīha baktyā |
nāgāmi janma bayamasti hi tasya pumsaha
kaivalya saudama sirādanu vīkṣatē saha ||

<u>பொழிப்புரை:</u>

1. உமாமஹேஸ்வரரின் புதல்வரே! மாதவசிகளின் இதயங்களில் கதிரவனாகப் பிரகாசிப்பவரே! வேதாந்தப் பொருளே! உம்மை ஆவாஹனம் செய்கின்றேன்.
2. சக்தி மகிழ் பாலனே! சித்தர் தொழும் சீலனே! விக்னகோடி ஹரனே! உம்மை ஒருமைப்பட்ட மனத்துடன் பூஜிக்கின்றேன்.
3. உமக்கு இரத்தினத்தினாலான ஆசனத்தைச் சமர்ப்பிக்கிறேன்.
4. கங்கை முதலான புனித ஆறுகளின் தூய நீரால் உமக்குப் பாத்யமும், அர்க்கியமும் (தீர்த்த உபசாரங்கள்) சமர்ப்பிக்கிறேன்.
5. புண்ணிய ஆறுகளின் நீரால் ஆஸமனம் செய்து (வலது குடங்கையால் மந்திரபூர்வமாக நீரை மும்முறை உட்கொள்ளுதல்), புருஷ ஸூக்தாதி (ரிக் வேதத்தில் உள்ள சிறப்பு மந்திரம்) மந்திரங்களால் ஜபிக்கப்பெற்ற புண்ணிய நீரால் உமக்கு நீராட்டுகிறேன்.
6. பாதாதிகேசமாகப் புனித நீரால் அபிஷேகம் செய்து தியானிக்கிறேன்.
7. கஸ்தூரி கலந்த சந்தனத்தையும், அழகான பட்டாடைகளையும், பூணூலையும் உமக்குச் சாத்துகின்றேன்.
8. ஜாதி மல்லி, சம்பகம், தாமரை, தும்பை, மல்லிகை, மற்றும் பல மலர்களும், வில்வமும் கொண்டு உம்மை அர்ச்சிக்கிறேன்.
9. தூப - தீபம் காட்டுகிறேன்.
10. சோக்ஷ்யம், பக்ஷ்யம், லேக்யம், போஜ்யம் என நான்கு வகை ஆகாரங்களையும், உமக்கு மிகவும் பிடித்தமான மோதகங்களையும் சமர்ப்பிக்கிறேன்.
11. கர்ப்பூர தீபம் காட்டி ஆராதிக்கிறேன்.
12. மலர்களைத் தூவி அஞ்சலித்து, மந்திர புஷ்பமும் சமர்ப்பிக்கிறேன்.
13. ஆரோக்கியம் (உடல்நலம்) வேண்டேன், போகங்கள் (இன்பம்) வேண்டேன், பாக்கியங்கள் (செல்வம்) வேண்டேன், வைராக்கியத்தையே (உலகப் பற்றின்மை) வேண்டுகின்றேன். அதை அளித்துப் பவம் (பிறப்பு) அகல அருள வேண்டும்.
14. இந்த கணேச மானஸ பூஜையை யார் பக்தியுடன் படித்து அகபூஜை செய்கிறாரோ அவருக்கு மறுபிறப்பு இல்லை.

4. <u>அ. பலன் தரும் பதினாறு பெயர்கள் (ஷோடச நாம அர்ச்சனை):</u>
விநாயகருக்குப் பதினாறு பெயர்கள் முக்கியமானவையாகச் சொல்லப்பெற்றிருக்கின்றன•. இந்தப் பதினாறு பெயர்களை (ஷோடச நாமாக்களை)க் கொண்டு விநாயகரை வழிபடுவோருக்கு (மற்றவர் சொல்லக் கேட்பவருக்குக்கூட)க், "கல்வி கற்கத் தொடங்கும்போதும் (வித்யாரம்பே), திருமணத்தின்போதும் (விவாஹே), ஓரிடத்திற்குள் நுழையும்போதும் (ப்ரவேசே), ஓரிடத்திலிருந்து புறப்படும்போதும் (நிர்கமே), சண்டை சச்சரவுகளிலும் (ஸங்க்ராமே), எல்லாச் செயல்களிலுமே (ஸர்வ கார்யேஷு) இடையூறு (விக்கினம்) ஏற்படாது என்று பலன் சொல்லப் பெற்றிருக்கிறது. (- காஞ்சி முனிவர், *தெய்வத்தின் குரல்*)

அந்த நாமங்களும், அவற்றைச் சொல்வதால் அல்லது கேட்பதால் ஏற்படும் பலன்களும் அடங்கிய சுலோகத்தில் சொல்லப்பெற்றிருக்கும் பதினாறு பெயர்கள்: ஸுமுகர், ஏகதந்தர், கபிலர், கஜகர்ணகர், லம்போதரர், விகடர், விக்நராஜர், விநாயகர், தூமகேது, கணாத்யக்ஷர், பாலசந்த்ரர், கஜானனர், வக்ரதுண்டர், சூர்ப்பகர்ணர், ஹேரம்பர், ஸ்கந்தபூர்வஜர்)
(இந்த பதினாறு பெயர்களும் அடங்கிய தமிழ்ப் பாடல் பக்கம் 143ல் இடம் பெறுகிறது)

<u>அந்தப் பதினாறு பெயர்களும் அடங்கிய அருச்சனைத் தொடர்கள்:</u>

ஓம் ஸுமுகாய நமஹ Ōm Sumukhāya Namaha

(அ) ஸுமுகர் = சிரித்த முகமுடைய ஆனந்த சொரூபர். ஸு - முகம் = நல்ல முகம், இன்முகம்.
(ஆ) ஸுமுகர் = கற்றறிந்தவர். வித்வத் (புலமை), வித்யை (கல்வி), அதனால் அடையும் ஞானம் ஆகியவற்றைக் கொண்டவர்.

ஓம் ஏகதந்தாய நமஹ Ōm Ēkadantāya Namaha

ஒரே தந்தம் உடையவர் (1)

ஓம் கபிலாய நமஹ Ōm Kapilāya Namaha

தேன் போன்று பழுப்புச் சிவப்பு நிறமாக இருப்பவர்.

ஓம் கஜகர்ணகாய நமஹ Ōm Gajakarṇakāya Namaha

யானைக்காது உள்ளவர் (2)

ஓம் லம்போதராய நமஹ Ōm Lambōdarāya Namaha

தொங்குகின்ற வயிற்றினை உடையவர் (3)

ஓம் விகடாய நமஹ Ōm Vikaṭāya Namaha

வேடிக்கைகள், குறும்புகள் செய்து மற்றவர்களைச் சிரிக்கச் செய்பவர்.

ஓம் விக்நராஜாய நமஹ Ōm Vighnarājāya Namaha

விக்கினங்களை (இடையூறுகளை) நீக்குவதற்கென்றே ஏகபரம்பொருள் எடுத்த வடிவம்தான் விக்னராஜர் என்னும் விக்கினேசுவரர் (4)

**ஓம் விநாயகாய நமஹ** Ōm Vināyakāya Namaha

தமக்கு மேல் நாயகர் (தலைவர்) இல்லாதவர்; தாமே மிக மேலான தலைவராகவும் இருப்பவர்.

**ஓம் தூமகேதவே நமஹ** Ōm Dhūmakētavē Namaha

புகையைக் கொடியாகக் கொண்டவர் [5]

**ஓம் கணாத்யக்ஷாய நமஹ** Ōm Gaṇādhyakṣāya Namaha

பூதகணங்களுக்கு அதிபதி (அத்யக்ஷகர் = தலைவர்) (எல்லா வகையான ஜீவகணங்களுக்குமே தலைவர் என்று சொல்வது பொருத்தமாகும்)

**ஓம் பாலசந்த்ராய நமஹ** Ōm Phālacandrāya Namaha

கேசத்தின் முன்பக்கம் சந்திரனைக் கொண்டவர். (சந்திரசேரன், சந்திரமௌளி) (Phaalam = கேசத்தின் முன்பக்கம்) (Baala என்று உச்சரிக்கக்கூடாது)

**ஓம் கஜானனாய நமஹ** Ōm Gajānanāya Namaha

யானைமுகம் படைத்தவர் (கஜம் = யானை; ஆனனம் = முகம்)

**ஓம் வக்ரதுண்டாய நமஹ** Ōm Vakratuṇḍāya Namaha

வளைந்த (பக்கவாட்டில் வளைந்திருக்கும்) தும்பிக்கையை உடையவர். (வக்ரம் = வளைவு; துண்டம் = மூக்கு; யானைக்குத் தும்பிக்கையே மூக்காகிறது). விநாயகரின் வளைந்த (வக்ர) தும்பிக்கையைத் தியானித்தால், நம் வக்ரங்கள் (தீய குணங்கள்) அகன்று விடும்.

**ஓம் சூர்ப்பகர்ணாய நமஹ** Ōm Sūrppakarṇāya Namaha

முறம் போன்ற காதுகளை உடையவர் [6]

**ஓம் ஹேரம்பாய நமஹ** Ōm Hērambāya Namaha

பஞ்சமுக விநாயகர். (நான்கு திக்குகளுக்கு நான்கு முகமும், அவற்றுக்கு மேலே ஒரு முகமுமாக ஐந்து முகங்களைக் கொண்டவர்.) [7]

**ஓம் ஸ்கந்தபூர்வஜாய நமஹ** Ōm Skandapūrvajāya Namaha

முருகனுக்கு மூத்தவர் [8]

<u>விளக்கம்:</u>

1. (அ) தம்முடைய வலப்பக்கத் தந்தத்தை ஒடித்து (1) வியாசர் பாடிய பாரதத்தை மேரு மலையில் வரைந்தார் என்றும், (2) எந்த ஆயுதத்தாலும் வதைக்க இயலாதவனாக இருந்த கஜமுகாஸுரனை வதம் செய்தார் என்றும் இரு புராண வரலாறுகள் உள்ளன.
(ஆ) ஆண் யானைக்குத்தான் கொம்பு (தந்தம்) உண்டு; பெண்யானைக்குக் கொம்பு கிடையாது. ஆனால், விநாயகர் ஆண் - பெண் என வரையறுக்க இயலாத இரண்டும் இணைந்த உருவினர் என்பதை இது உணர்த்துகிறது என்று தத்துவரீதியாகக் கூறுவர்.
2. (அ) விநாயகர் நம் வேண்டுதல்களை நன்றாகக் கேட்டுக் கொள்வார் என்பதை அவருடைய முறம் போன்ற யானைக்காது உணர்த்துகிறது.

(ஆ) யானையைப் போன்று காதை மட்டும் ஆட்டுவது மனிதர்களால் இயலாத செயல். அதை விநாயகர் விளையாட்டுப் போன்று செய்வதால் அவர் 'கஜகர்ணகர்' எனப்பெறுகிறார். வேறு யாருடைய உதவியும் இல்லாமல் தமக்குத் தாமே சாமரம் (விசிறி) போட்டுக் கொள்கிறார். அதன்வழி கரணம் (இந்திரியம், Organ of sense), காரணம் (மூலம், source), கர்த்தா (செய்பவர், doer), கருவி (சாதனம், means, material) எல்லாமே தாம்தாம் என்பதை அவர் உணர்த்துகிறார்.

(இ) மிகுதியான சிறப்புகளை உடையது யானை. யானை நடையை 'கஜகதி' என்று சொல்வார்கள். ஆண்மை, பெண்மை ஆகிய இரண்டையும் கொண்டது யானையின் நடை. மிகச் சிறந்த முத்து விளையும் இடம் யானையின் கும்பம் (மத்தகம், frontal globe, round protuberance on the temples of the elephant) தான். மற்றும், யானையின் மத்தகம் மகாலக்ஷ்மியின் இருப்பிடமுமாகும்). யானை வாலில் உள்ள மயிர், ஆவி சேட்டைகளுக்குப் பெரிய ரக்ஷை (காப்பு) ஆகும். அதை வைத்து மோதிரம் செய்து அணிந்து கொண்டால் எந்தத் தீய சக்தியும் அணுகாது.

3. (அ) மிக மதுரமான (இனிமையான) அன்பு என்னும் பூரணத்தை (மோதகத்தின் உள்ளீடு, pie inside a pastry or confection) வயிற்றினுள் வைத்துக் கொண்டிருப்பதைக் காட்டவே உருண்டையான தொப்பை வயிற்றோடு விநாயகர் விளங்குகிறார்.

   (ஆ) சிரித்த முகத்துடன் கூடிய விநாயகர் (சுமுகர்), தம் அடியாரும் தம்மைக் கண்டவுடன் சிரித்து மகிழும் வகையில் தொந்தியும் தொப்பையுமாகத் தோற்றமளிக்கிறார்.

4. (அ) தீயோருக்கு நல்லறிவு புகட்டுவதற்கென அவ்வப்போது இடையூறுகளை ஏற்படுத்துபவரும் அவரே.

   (ஆ) இடையூறுகளைப் போக்குகின்றவர்; பிறகு போக்குவதற்காக எப்போதாவது இடையூறுகளை ஏற்படுத்துகிறவர் என இரு பொருள்களைக் கொண்டது இந்நாமம்.

5. நச்சுப்புகையைப் படைக்கலமாகக் கொண்ட தூமாசுரன் என்பவனை, அவனுடைய படைக்கலமாகிய புகையைக் கொண்டே அழித்து வெற்றிக்கொடி நாட்டியவர் என்பது இப்பெயரில் பொதிந்திருக்கும் புராண வரலாறு. 'தூமம்' என்பதைத் 'தூம்ரம்' என்றும் சொல்வதுண்டு; அந்த வகையில் இந்த நாமம் 'தூம்ரகேது (Dhumraketu) எனப்படுவதுமுண்டு.

6. மற்ற விலங்குகளைப் போல் இல்லாமல், விநாயகர் பெரிய - விரிந்த காதுகளைக் கொண்டிருப்பதால், நம்முடைய எல்லாப் பிரார்த்தனைகளையும் ஏற்றுக் கொள்வார் என்று நினைத்து ஏமாந்துவிடக் கூடாது. நம்முடைய எல்லாப் பிரார்த்தனைகளையும் கேட்பார்; ஆனால் எது சரியானது, எது தவறானது என்று சீர்தூக்கிப் பார்த்துச், சரியானதை மட்டுமே ஏற்றுக் கொண்டு அதை நிறைவேற்றி வைப்பார்.

7. 'ஹேரம்பம்' என்னும் நாமத்துக்குச் சரியான பொருளை யாரும் சொல்லவில்லை என்று சங்கராச்சாரிய சுவாமிகள் கூறுகிறார். ஐந்து முகங்கள், பத்துக் கரங்கள், சிம்ம வாகனத்தைக் கொண்டிருப்பவரே ஹேரம்பர். சிங்கத்தைப் 'பஞ்சாஸ்யம்' என்று குறிப்பிடுவதுண்டு. பஞ்சமுக விநாயகரின் வாகனம் பஞ்சாஸ்யம்!

8. பூர்வஜர் = முன்னவர், முதலில் தோன்றியவர், ஆதி. முதலில் தோன்றிய விநாயகர், இந்தப் பதினாறு நாமங்களில் அந்தமாக இடம் பெறுகிறார்.

   (* இந்தப் பதினாறு பெயர்களில், கணாதிபர் என்னும் பெயரைச் சேர்த்து, விநாயகர், வக்கிரதுண்டர், சூர்ப்பகர்ணர், ஹேரம்பர், ஸ்கந்தபூவஜர் என்னும் ஐந்து பெயர்கள் நீங்கலாக உள்ள பன்னிரு நாமங்களைத் துவாதச நாமங்கள் என்று சொல்லி, அந்தப் பன்னிரு பெயர்களாலும் விநாயகரை அர்ச்சிப்பதுமுண்டு. அப்பன்னிரு நாமங்களும் பிள்ளையாரின் சகஸ்ரநாமங்களிலிருந்து (1008 அர்ச்சனைத் தொடர்கள்) தொகுக்கப்பெற்றவையாகச் சொல்லப் பெறுகின்றன. கூடுதலாக உள்ள கணாதிபர் (ஓம் கணாதிபாய நம: Ōm Gaṇadhipāya Namaha) என்னும் நாமம், விக்னராஜர் என்னும் நாமத்தைத் தொடர்ந்து இடம்பெறும்.

4. <u>ஆ. இன்றியமையாத எட்டுப் பெயர்கள்:</u>

சிவனுக்குரிய நாமங்களில் மிக உயர்ந்தவையாக பவன் (Bhavan), சர்வன் (Sarvan), ஈசானன் (Isanan), பசுபதி (Pasupati), ருத்ரன் (Rudran), உக்ரன் (Ugran), பீமன் (Bhiman), மஹான் (Mahan) என்னும் எட்டுப் பெயர்கள் விளங்குகின்றன. அஷ்டோத்தரசதம் (நூற்றெட்டு நாமங்கள்), சகஸ்ரநாமம் (ஆயிரம் நாமங்கள்), த்ரிசதி (முந்நூறு நாமங்கள்) - இப்படி எது சொல்லி முடித்தாலும், முடிவில் இந்த எட்டுப் பெயர்களை "பவாயதேவாய நமஹ, சர்வாயதேவாய நமஹ... மஹாதேவாய நமஹ" என்று சொல்லி அருச்சித்துவிட்டுத் தூப - தீப - நைவேத்தியம் என்று செய்வதுதான் தொன்றுதொட்டு இருந்துவரும் பூஜாவிதி. இவ்வாறே விநாயகருக்கோ முருகனுக்கோ அருச்சனை செய்யும்போதும், இந்து எட்டு நாமக்காரரின் பிள்ளை (பவஸ்ய தேவஸ்ய புத்ராய) என்று சொல்லி அருச்சித்து முடிக்க வேண்டும். அந்த வகையில் விநாயகருக்கான இந்த ஷோடசநாம அர்ச்சனை முடிவில் பின்வரும் எட்டு நாமங்களையும் சொல்லி அருச்சிக்க வேண்டும்.

| | |
|---|---|
| ஓம் பவஸ்ய தேவஸ்ய புத்ராய நமஹ | Ōm Bhavasya Dēvasya Putrāya Namaha |
| ஓம் ஸர்வஸ்ய தேவஸ்ய புத்ராய நமஹ | Ōm Sarvasya Dēvasya Putrāya Namaha |
| ஓம் ஈசானஸ்ய தேவஸ்ய புத்ராய நமஹ | Ōm Īsānasya Dēvasya Putrāya Namaha |
| ஓம் பசுபதயே தேவஸ்ய புத்ராய நமஹ | Ōm Pasupatayē Dēvasya Putrāya Namaha |
| ஓம் ருத்ரஸ்ய தேவஸ்ய புத்ராய நமஹ | Ōm Rudrasya Dēvasya Putrāya Namaha |
| ஓம் உக்ரஸ்ய தேவஸ்ய புத்ராய நமஹ | Ōm Ugrasya Dēvasya Putrāya Namaha |
| ஓம் பீமஸ்ய தேவஸ்ய புத்ராய நமஹ | Ōm Bhīmasya Dēvasya Putrāya Namaha |
| ஓம் மஹதோ தேவஸ்ய புத்ராய நமஹ | Ōm Mahadō Dēvasya Putrāya Namaha |

4. இ. தூர்வாயுக்ம 21 நாம அர்ச்சனை
(ஒவ்வொரு நாமத்தின் முடிவிலும், தூர்வாயுக்மம் ஸமர்ப்பயாமி (Durvayugmam Samarppayami) என்று கூறி (தூர்வம் - dūrvā = அறுகு; யுக்மம் - yugmam = இரட்டை; ஸமர்ப்பித்தல் = அர்ப்பணித்தல்), இரண்டு இரண்டாக 21 அறுகுகளை சுவாமி பாதத்தில் இடுக)

| | |
|---|---|
| ஓம் கணாதிபாய நமஹ | தூர்வாயுக்மம் ஸமர்ப்பயாமி |
| Ōm Gaṇātipāya Namaha | Dūrvā yugmam Samarppayāmi |
| ஓம் பாசாங்குசதராய நமஹ | " |
| Ōm Pāsāṅgusadarāya Namaha | " |
| ஓம் ஆகுவாஹனாய நமஹ | " |
| Ōm Āhuvāhanāya Namaha | " |
| ஓம் விநாயகாய நமஹ | " |
| Ōm Vināyakāya Namaha | " |
| ஓம் ஈசபுத்ராய நமஹ | " |
| Ōm Īsaputrāya Namaha | " |
| ஓம் ஸர்வஸித்திப்ரதாய நமஹ | " |
| Ōm Sarvasiddhipradāya Namaha | " |
| ஓம் ஏகதந்தாய நமஹ | " |
| Ōm Ēkadantāya Namaha | " |
| ஓம் இபவக்த்ராய நமஹ | " |
| Ōm Ibavaktrāya Namaha | " |
| ஓம் மூஷிகவாஹனாய நமஹ | " |
| Ōm Muṣiga vāhanāya Namaha | " |

ஓம் குமாரகுரவே நமஹ தூர்வாயுக்மம் ஸமர்ப்பயாமி

Ōm Kumāra Guravē Namaha Dūrvā yugmam Samarppayāmi

ஓம் கபிலவர்ணாய நமஹ "

Ōm Kabhilavarṇāya Namaha "

ஓம் ப்ருஹ்மசாரிணே நமஹ "

Ōm Bṛhmacāriṇē Namaha "

ஓம் மோதகஹஸ்தாய நமஹ "

Ōm Mōdahahastāya Namaha "

ஓம் ஸுரஸ்ரேஷ்டாய நமஹ "

Ōm Surasrēṣṭāya Namaha "

ஓம் கஜநாசிகாய நமஹ "

Ōm Gajanāsikāya Namaha "

ஓம் கபித்த பலப்ரியாய நமஹ "

Ōm Kabhitta Balapriyāya Namaha "

ஓம் கஜமுகாய நமஹ "

Ōm Gajamukāya namaha "

ஓம் ஸுப்ரஸன்னாய நமஹ "

Ōm Suprasannāya Namaha "

ஓம் ஸுரக்ரஜாய நமஹ "

Ōm Surakrajāya Namaha "

ஓம் உமாபுத்ராய நமஹ "

Ōm Umāputrāya Namaha "

ஓம் ஸ்கந்தப்ரியாய நமஹ "

Ōm Skandapriyāya Namaha "

> *Those who serve God are very, very fortunate.*
> *It is a great good luck to be allowed to serve Him.*
> *It is not a question of just wanting to do it.*
> *Many people cry their hearts out*
> *and yet they cannot serve Him.*
>
> *- Swami Ashokananda*

5. <u>ஆதிசங்கரர் அருளிய கணேச பஞ்ச ரத்னம்</u>

முதா கராத்த மோதகம் ஸதா விமுக்தி ஸாதகம்
கலா தராவர தம்ஸகம் விலாஸி லோக ரக்ஷகம்
அநாய கைக நாயகம் விநாசிதேப தைத்யகம்
நதாசு பாசு நாசகம் நமாமி தம் விநாயகம். 1

Mudhā karātta mōdakam satā vimukti sādhaham
kalā dharāvara tamsakam vilāsi lōka rakṣaham
anāya kaika nāyakam vināsitēba daityakam
natāsu bhāsu nāsakam namāmi tam vināyakam.

நதேதராதி பீகரம் நவோதிதார்க்க பாஸ்வரம்
நமத்ஸுராரி நிர்ஜரம் நதாதிகாப துத்தரம்
ஸுரேச்வரம் நிதீச்வரம் கஜேச்வரம் கணேச்வரம்
மஹேச்வரம் ஸமாச்ரயே பராத்பரம் நிரந்தரம். 2

Natētarāti bīkaram navōditārkka bhāsvaram
namatsurāri nirjaram natātikāpa duttaram
surēcvaram nitīcvaram gajēcvaram gaṇēcvaram
mahēcvaram samācrayē parātparam nirantaram.

ஸ்மஸ்த லோகசங்கரம் நிரஸ்ததைத்ய குஞ்ஜரம்
தரே தரோதரம் வரம் வரேபவக்த்ர மக்ஷரம்
க்ருபாகரம் க்ஷமாகரம் முதாகரம் யசஸ்கரம்
மநஸ்கரம் நமஸ்க்ருதாம் நமஸ்கரோமி பாஸ்கரம். 3

Samasta lōka saṅkaram nirastadaitya kuñjaram
darē tarōdaram varam varēpavaktra makṣaram
kṛpākaram kṣamākaram mudhākaram yacaskaram
manaskaram namaskṛtām namaskarōmi bhāskaram.

அகிஞ்சநார்த்தி மார்ஜநம் சிரந்தநோக்தி பாஜநம்
புராரிபூர்வ நந்தநம் ஸுராரிகர்வ சர்வணம்
ப்ரபஞ்சநாச பீஷணம் தநஞ்ஜயாதி பூஷணம்
கபோலதாந வாரணம் பஜே புராண வாரணம். 4

Akiñcanārtti mārjanam cirantanōkti bhājanam
purāripūrva nandanam surārigarva sarvaṇam
prapañcanāsa bhiṣaṇam Dhanañjayāti bhūṣaṇam
kapōladāna vāraṇam bhajē purāṇa vāraṇam.

நிதாந்த காந்தி தந்தகாந்தம் அந்தகாந்த காத்மஜம்
அசிந்த்ய ரூப மந்தஹீந மந்தராய க்ருந்தனம்
ஹ்ருதந்தரே நிரந்தரம் வஸந்தமேவ யோகிநாம்
தமேக தந்தமேவ தம் விசிந்தயாமி ஸந்ததம். 5

Nitānta kānti dantakāntham antakānta kātmajam
acintya rūpa mantahīna mantarāya kṛntaṇam
hṛtantarē nirantaram vasantamēva yōgināṃ
tamēka danthamēva tam vicintayāmi santatam.

மஹா கணேச பஞ்சரத்நம் ஆதாரேண யோந்வஹம்
ப்ரஜல்பதி ப்ரபாதகே ஹ்ருதி ஸ்மரந் கணேச்வரம்
அரோகதாம் அதோஷதாம் ஸுஸாஹிதீம் ஸுபுத்ரதாம்
ஸமாஹிதாயுர் அஷ்டபூதிம் அப்யுபைதி ஸோசிராத். 6

Mahā gaṇēsa pañcaratnam ātārēṇa yōnvaham
prajalpati prabhātakē hṛti smaran gaṇēcvaram
arōgathām adhōṣatām susāhitīm suputratām
samāhitāyur aṣṭabhūtim abhyupaiti sōcirāt.

<u>பொழிப்புரை:</u>

1. மகா கணபதி, மகிழ்ச்சியுடன் கையில் மோதகத்தை வைத்துக் கொண்டிருக்கிறார்; தம்மை வழிபடுவோருக்கு மோட்சத்தைக் கொடுப்பவர் அவர்; சந்திரகலையை (பிறைச் சந்திரனை)த் தலையில் தரித்திருக்கிறார்; தம்முடைய வரலாற்றைப் பாடும் பக்தர்களைக் காப்பவர் அவர்; நாதனில்லாத மக்களுக்கு அவர்களுடைய ஆபத்துக் காலத்தில், தாமே நாதராக இருந்து அவர்களைக் காப்பாற்றுகிறார்; கஜாசுரனைக் கொன்றவர் அவர்; தம்மை வணங்கும் மக்களுடைய பாவங்களை உடனடியாகப் போக்கும் அந்த மகாகணபதியை வணங்குகின்றேன்.
2. தம்மை வணங்காதவர்களுக்கு அடிக்கடி அச்சத்தைக் கொடுத்துப் பின்னர் அருள்பவர், கணங்களின் தலைவரான கணபதி; அவர், உதய காலத்துச் சூரியனைப் போல் ஒளி வீசித் திகழ்பவர்; தம்மை வணங்குகின்ற தேவாதிதேவர்களின் பகைவர்களான அசுரர்களை அழிப்பவர்; தம்மை வணங்குவோரைப் பேராபத்துகளிலிருந்து கைதூக்கி விடுபவர்; தேவர்களின் அதிபதி; புதையல் சொத்துகளுக்கு அதிதேவதை (அதாவது, பக்தர்களுக்குப் புதையல்களைக் கொடுப்பவர்); யானைகளுக்கு அதிபதி; சண்டிகேசுவரர் முதலிய தலைமை கணங்களுக்கு நாதர்; இறைவனுக்கும் மேலானவர்; உலகுக்கு மூலகாரணராதலால், மேலானது (பரம்) என்று சொல்லப்பெறும் மாயையைக் காட்டிலும் மேலானவர் (அதாவது, மாயைத் தொடர்பு இல்லாதவர்); அத்தகைய மகா கணபதியை இடைவிடாமல் வணங்குகின்றேன்.
3. பதினான்கு உலகங்களிலும் உள்ள மக்களுக்கும் நலத்தை அருள்பவர், சிவபெருமானின் மூத்த புதல்வரான மகாகணபதி; கஜாசுரனைச் சங்கரித்தவர் அவர்; எல்லா உலகங்களையும் வயிற்றினுள்

வைத்துக் கொண்டு காப்பவராதலால், அவர் பெருத்த வயிற்றோடு காணப் பெறுகிறார்; பெருமை மிகுந்த யானையான ஐராவதத்தைப் போன்ற முகத்துடன் கூடியவர்; அழிவற்றவர்; தம்மை வழிபடுவோர், எத்தகைய தவறு செய்திருந்தாலும், அதைப் பொறுத்துக் கொண்டு, அவர்களிடம் கருணை காட்டி, அவர்களுடைய மனத்தை நல்வழிப்படுத்தி, அவர்களுக்கு மகிழ்ச்சியையும், புகழையும் ஈட்டித் தருபவர்; அத்தகைய கணேசப் பெருமானை வணங்குகின்றேன்.

4. தம்மை வழிபடுவோரின் வறுமையை நாசம் செய்பவர், யானை உருவினரான மகாகணபதி; அநாதியான வேத வாக்கியங்களால் துதிக்கப்பெறும் மகிமை மிக்கவர் அவர்; திரிபுரங்களை எரித்த சிவபரம் பொருளின் மூத்த புதல்வர்; தேவர்களின் பகைவர்களான அசுரர்களது கர்வத்தை அடக்குபவர்; உலகங்களை நாசம் செய்கின்ற யமனுக்கும் அச்சத்தைத் தோற்றுவிப்பவர் (அதாவது, தம் பக்தர்களிடம் யமனை அண்டவிடாமல் தடுப்பவர்); அர்ஜுனன் முதலிய வில் வீரர்களாலும், ஒரு செயலைத் தொடங்கும்போது வழிபடப் பெறுபவர்; கபோலப் பிரதேசத்தில் மதநீர்ப் பெருக்கை உடையவர்; புராதன யானை உருவினரான அவரை வழிபடுகின்றேன்.
5. யானை முகத்தைக் கொண்டிருந்தாலும், ஒரு தந்தத்தை மட்டுமே கொண்டவரான மகாகணபதியே! உம்முடையது ஒரே தந்தமானாலும், பிரகாசமும், அழகும் கொண்டது அது; யமனுக்கும் யமனான பரமேசுவரனின் புத்திரர் நீர்; மனத்தாலும் சிந்திக்க முடியாத உருவம் உம்முடையது. நீர் அழிவற்றவர்; பக்தர்களின் எல்லா இடையூறுகளையும் போக்குபவர்; யோகியரின் இதயங்களில் எப்போதும் குடி கொண்டிருப்பவர்; இத்தகைய சிறப்புகள் பொருந்திய உம்மை மட்டுமே எப்போதும் தியானிக்கிறேன்.
6. பஞ்சரத்தினம் என்னும் மகாகணபதி ஸ்தோத்திரத்தை (துதியை), ஒவ்வொரு நாளும் விடியற்காலையில் எழுந்தவுடன் மகாகணபதியைத் தியானித்துக் கொண்டு பாராயணம் செய்ய வேண்டும்; அவ்வாறு துதி செய்வோர், விரைவில் எல்லா வகையான நோய்களிலிருந்தும், தோஷங்களிலிருந்தும் (தீங்கு விளைவிக்கக்கூடிய அம்சம்; malignant influence (believed to be the effect of the planetary position at the time of birth or from evil deed) விடுபடுவர்; நல்ல கவிதா சக்தியையும், உத்தம புத்திரர்களையும், நீண்ட ஆயுளையும் பெறுவர்.

6. <u>ஸ்ரீ கணேச புஜங்கம்</u>

(ஆதி சங்கரரின் இந்தத் தோத்திரம் தேவதா வசியத்திற்கும், அத்தேவதையின் அருட்பிரசாதத்தை எளிதில் பெறவும் உதவுகிறது)

ரணத் க்ஷுத்ர கண்டா நிநாத பிராமம்
சலத்தாண்டவோத் தண்டவத் பத்மதாளம் |
லஸத் துந்திலாங்கோபரி வ்யாளஹாரம்
கணாதீச மீசாஸுநும் தமீடே || 1

Ranatksutra ghanta ninadabhiramam
chalat tandavot dhandavat padmathalam|
lasath thundhilangopari vyalaharam
Ganadisa misasunum tamide||

(Transliteration diacritics: Raṇ̣atkṣ̣utra ghaṇ̣ṭā ninādabhirāmam / chalat tāṇ̣ḍ̣avōt dhaṇ̣ḍ̣avat padmathālam| / lasath thundhilāngōpari vyāḷahāram / Gaṇ̣ādīsa mīsāsūnum tamīḍ̣ē||)

த்வனி த்வம்ஸ வீணா லயோலாஸி வக்த்ரம்
ஸ்புரச்சுண்ட தண்லோலஸத் பீஜபூரம் |
கலத் தர்ப்ப ஸௌகந்த்ய லோலாலிமாலம்
கணாதீச மீசாஸுநும் தமீடே || 2

Dvani dvamsa vīṇā layōlāsi vaktram
spuraccuṇḍa danlōlasat bījapūram|
galat dharppa saugandya lōlālimālam
Gaṇādīsa mīsāsūnum tamīḍe||

ப்ரகாசஜ் ஜபா ரக்த ரத்ன ப்ரஸூன
ப்ரவாள ப்ரபாதாருண ஜ்யோதிரேகம் |
ப்ரலம்போதரம் வக்ரதுண்டைக தந்தம்
கணாதீச மீசாஸூநும் தமீடே || 3

Prakāsaj japā rakta ratna prasūna
pravāḷa prabhātāruṇa jyōtirēkam|
pralambōdaram vakratuṇḍaika dhantam
Gaṇādīsa mīsāsūnum tamīḍe||

விசித்ர ஸ்புரத் ரத்னமாலா கிரீடம்
கிரீடோல்லஸத் சந்த்ர ரேகா விபூஷம்|
விபூஷைக பூஷம் பவத் த்வம்ஸஹேதும்
கணாதீச மீசாஸூநும் தமீடே || 4

Vicitra spurat ratnamālā kirīḍam
kirīḍōllasat candrarēkā vibūṣam|
vibūṣaika būṣam bhavat dvamsahētum
Gaṇādīsa mīsāsūnum tamīḍe||

உதஞ்சத் புஜா வல்லரீ த்ருஸ்ய மூலோச்
சலத் ப்ருலதா விப்ர ப்ராஜதக்ஷம்|
மருத் ஸுந்தரீ சாமரை: ஸேவ்யமானம்
கணாதீச மீசாஸூநும் தமீடே || 5

Udañcat bhujā vallarī drusya mūlōc
calat brūlatā vibra prājadakṣam|
marut sundarī cāmarai sēvyamānam
Gaṇādīsa mīsāsūnum tamīḍe||

ஸ்புரன்நிஷ்டூர ஆலோல பிங்காக்ஷிதாரம்
க்ருபா கோமளோதார லீலாவதாரம்|
கலாபிந்துகம் கீயதே யோகிஸ்வர்யை:
கணாதீச மீசாஸூநும் தமீடே || 6

Spuran̲ niṣtūra ālōla piṅgākṣitāram
krupā kōmaḷōdāra līlāvatāram|
kalābindugam gīyatē yōgisvaryaihi
Gaṇādisa mīsāsūnum tamīḍē||

யமேகாக்ஷரம் நிர்மலம் நிர்விகல்பம்
குணாதீதம் ஆனந்தம் ஆகார சூன்யம் |
பரம் பாரம் ஓங்காரம் ஆம்னயகர்ப்பம்
வதந்தி ப்ரகல்பம் புராணம் தமீடே || 7

Yamēkākṣaram nirmalam nirvikalpam
guṇātītam ān̲andham ākāra sūn̲yam|
param pāram ōmkāram āmn̲ayagarbam
vadanti prakalpam purāṇam tamīḍē||

சிதானந்தஸாராய சாந்தாய துப்யம்
நமோ விஸ்வகர்த்ரே ச ஹர்த்ரே ச துப்யம் |
நமோ அனந்தலீலாய கைவல்ய பாஸே
நமோ விஸ்வபீஜ ப்ரஸீதேச ஸூனோ || 8

Cidān̲andasārāya sāntāya tubhyam
namō visvakartrē ca hartrē ca tubhyam|
namō an̲antalīlāya kaivalya bhāsē
namō visvabīja prasīdēsa sūn̲ō||

இமம் ஸுஸ்தவம் ப்ராதருத்தாய பக்த்யா
படேத் யஸ்து மர்த்யோ லபேத் ஸர்வகாமான்: |
கணேச ப்ரஸாதேன ஸித்யந்த வாசோ:
கணேச விபௌ துர்பலம் கிம் ப்ரஸன்னே|| 9

Imam sustavam prātaruddāya bhaktyā
padēth yastu martyō labēth sarvakāmān̲|
Gaṇēsa prasādēn̲a sidhyanta vācō
Gaṇēsa vibau durbalam kim prasan̲n̲ē||

## பொழிப்புரை:

1. இனிமையாக ஒலிக்கும் சிறிய மணிகளின் நாதத்தைக் கேட்டு மகிழ்பவர்; தாண்டவமாடும்போது மேலும் கீழும் அசையும் திருவடித் தாமரைகளால் தாளமிடுபவர்; தம் தொப்பையான வயிற்றின்மீது பிரகாசமான பாம்பாரணத்தைத் தரித்திருப்பவர்; பரமேஸ்வரனின் புதல்வரான அந்த ஸ்ரீ கணேசரைத் துதிக்கின்றேன்.
2. வீணையிசை முடிந்த பின்னர், அந்த இசையின் இனிமையில் மூழ்கிப்போய், உள்ளக் களிப்போடும் ஒளிர்விடும் முகத்தோடும் காணப்பெறுகிறார் கணேசர்; அவர் துதிக்கையில் கொய்யாப்பழத்தை வைத்திருக்கிறார்; அவருடைய ஆனைமுகத்திலிருந்து ஒழுகும் மதநீரின் மீதுள்ள விருப்பினால், அவரைச்சுற்றி வண்டுகள் ரீங்காரமிடுகின்றன; பரமேஸ்வரனின் புதல்வரான அந்த ஆனைமுகனை அடி பணிகின்றேன்.
3. நன்கு பிரகாசிக்கும் செம்பருத்தி மலர், சிவப்பு இரத்தினம், சிவந்த மலர், பவளம், இளஞ்சூரியன் போன்று சிவப்பு நிறத்தில் மிளிர்பவர் பரமேஸ்வரரின் புதல்வரான கணேசர்; அவர் பருத்த - சரிந்த வயிற்றைக் கொண்டிருப்பவர்; வளைந்து காணப்பெறும் ஒரே தந்தத்தை உடையவர்; அந்த மகா கணபதியை மனமார வழிபடுகிறேன்.
4. பல வண்ணங்களில் பளபளக்கும் இரத்தினங்கள் பதித்த மாலை, கிரீடம் (மணிமுடி, crown) ஆகியவற்றையும், மணிமுடியில் விளங்கும் பிறைச்சந்திரனையும் உடையவர்; அணிகலன்களில் (ஆபரணங்களில்) எல்லாம் தலை சிறந்த அணிகலனாகத் திகழ்பவர்; சம்சாரபந்தம் நீங்குவதற்குக் காரணமாக இருப்பவர், பரமேஸ்வர புதல்வரான கணேசப் பெருமான்; அவரை அடி பணிகின்றேன்.
5. பரமேஸ்வரனின் புதல்வரான கணேசர், உயர்ந்து நிற்கும் கொடி போன்ற அழகிய கைகளை உடையவர்; அழகிய புருவங்களினால் மேலும் அழகூட்டப்பெறும் கண்களைக் கொண்டவர்; தேவ மகளிரால் வெண் சாமரம் வீசி வணங்கப்பெறுபவர்; அத்தகைய ஆனைமுகனை அடிபணிந்து வணங்குகின்றேன்.
6. பரமேஸ்வரனின் புதல்வரான கணேசரின் கண்கள் பிரகாசமானவை, சிவந்த நிறமுடையவை; அவருடைய பார்வை கம்பீரமானது; அங்குமிங்கும் அலைபாயக்கூடியது (பக்தர்களைத் தேடி அருள் பாலிக்க அவர் கண் பார்வை அலை பாய்கிறதாம்). அவருடைய அவதாரத் திருவிளையாடல்கள் கருணைநிறைந்தவை; கபடமற்றவை. கலா (சுத்தாசுத்த தத்துவங்கள் ஏழில் ஒன்று), பிந்து (சக்தி தத்துவம்) என்ற இடங்களை அடைந்தவராகச் சிறந்த யோகியர் அவரை வருணிப்பர்; அத்தகைய கணேச மூர்த்தியை வணங்குகிறேன்;
7. கணேசப் பெருமானே! பெரிய மகான்கள் உம்மை "ஒருவன் (ஏகன்)" என்றும், "அழிவற்றவர், மாசற்றவர், பேதமற்றவர் (சுகதபேதம், சுசாதிபேதம், விசாதிபேதம் எனும் மூன்று வகை வேறுபாடுகள்; difference of three kinds: 1) difference between an object as a whole, and its parts, 2) difference among species of the same genus, 3) difference of genus), குணங்களுக்கு அப்பாற்பட்டவர் (நிர்குணன்), ஆனந்த சொரூபர், உருவமற்றவர், எல்லாவற்றிற்கும் மேலானவர், ஓங்கார உருவினர், வேதங்களின் உட்பொருளானவர், எளிதில் அறிய முடியாதவர், அநாதியானவர் (தொடக்கமற்றவர்)" என்றெல்லாம் வருணிக்கின்றனர்; அத்தகைய பெரியவரான உம்மைத் துதிபாடி வழிபடுகின்றேன்.
8. ஞானத்தின் திருவுருவே! பரிபூரண ஆனந்த சொருபியே! உலகைப் படைத்து அழிப்பவரே! உம்மை வணங்குகின்றோம். உலக காரணரான ஈஸ்வர புத்திரரே! எல்லையற்ற திருவிளையாடல்களைப் புரிபவரே! ஜோதி வடிவமான கைவல்ய நிலை(ஏகமான தன்மை, absolute one)யில் உள்ளவரே! உமக்கு வணக்கம். நீர் எங்களுக்கு அருள் பாலிக்க வேண்டும்!
9. யாரொருவர் இந்தத் தோத்திரத்தைக் காலையில் எழுந்து பக்தியுடன் பாராயணம் செய்கிறாரோ, அவருடைய எல்லா எண்ணங்களும் ஈடேறும்; கணேசப் பெருமானின் திருவருளால் அவரது வாக்குப் பலிதமாகும் (சொன்னது பலிக்கும்); எங்கும் நிறைந்தவரான கணேசரை மகிழ்ச்சியில் ஆழ்த்தினால் எதைத்தான் பெற முடியாது? - எதையுமே பெறலாம்!

(நன்றி: நஜன், *கணபதி ஹ்ருதயம்*)

**Just a second**

***A second does not sound very long, but by the time you have read this sentence, almost five of them will have gone by. In a lifetime of 80 years, there are more than 2.5 billion seconds - but you will spend more than 800 million of them asleep!***

*- The Star*

7. அ. கணாஷ்டகம் - 1

ஏக தந்தம் மஹாகாயம் தப்தகாஞ்சன ஸன்னிபம் |
லம்போதரம் விசாலாக்ஷம் வந்தேஹம் கணநாயகம் ||

Ēka dantam mahākāyam tapta kāñcana sannibam|
lambōdaram visālākṣam vandēham Gaṇanāyakam||

மௌஞ்ஜீ கிருஷ்ணா ஜினதரம் நாக யக்ஞோபவீதினம் |
பாலேந்து விலஸன் மௌலிம் வந்தேஹம் கணநாயகம் ||

Mauñjī krisṇājinadaram nāga yagñōbhavīdinam|
bālēndu vilasan maulim vandēham Gaṇanāyakam||

அம்பிகா ஹ்ருதயானந்தம் மாத்ருபி: பரிபாலிதம் |
பக்தப்ரியம் மதோன்மத்தம் வந்தேஹம் கணநாயகம் ||

Ambikā hrudayānandam mātrubihi paripālitam|
baktapriyam matōnmattam vandēham Gaṇanāyakam||

சித்ர ரத்ன விசித்ராங்கம் சித்ரமாலா விபூஷிதம் |
சித்ர ரூபதரம் தேவம் வந்தேஹம் கணநாயகம் ||

Citra ratna vicitrāṅgam citramāla vibūṣidam|
citra rūpadaram dēvam vandēham Gaṇanāyakam||

கஜவக்த்ரம் ஸுரஸ்ரேஷ்டம் கர்ண சாமரபூஷிதம் |
பாசாங்குசதரம் தேவம் வந்தேஹம் கணநாயகம் ||

Gajavaktram surasrēṣṭam karṇa cāmara bhūṣitam|
pāsāṅkusa dharam Dēvam vandēham Gaṇanāyakam||

மூஷிகோத்தம மாருஹ்ய தேவாஸுர மஹாஹவே |
யோத்து காமம் மஹாவீர்யம் வந்தேஹம் கணநாயகம் ||

Mūṣigōttama māruhyadēvāsura mahāhavē|
yōdhtu kāmam mahā vīryam vandēham Gaṇanāyakam||

யக்ஷ கின்னர கந்தர்வ ஸித்த வித்யாதரைஸ்ஸதா |
ஸ்தூயமானம் மஹாத்மானம் வந்தேஹம் கணநாயகம் ||

Yakṣa Kinnara Gandarva Siddha Vidyātaraisadhā|
stūyamānam mahātmānam vandēham Gaṇanāyakam||

ஸர்வ விக்ன கரம் தேவம் ஸர்வ விக்ன விவர்ஜிதம் |
ஸர்வ ஸித்தி ப்ரதா தாரம் வந்தேஹம் கணநாயகம் ॥ 8

Sarva vignakaram dēvam sarva vigna vivarjitam|
sarva siddhi pradādāram vandēham Gaṇanāyakam॥

கணாஷ்டக மிதம் புண்யம் பக்தி தோ ய: படேந் நர: |
விமுக்தச் ஸர்வபாபேப்யோ ருத்ரலோகம் ஸ கச்சதி ॥ 9

Gaṇāṣṭakamidham puṇyam bhaktitō yahpadēnnaraha|
vimukhtac sarvapāpēbhyō Rudhralōkam sa gaccati॥

<u>பொழிப்புரை:</u>

1. ஒற்றைக் கொம்பை உடையவரே! பருத்த உடலைக் கொண்டவரே! உருக்கிய பொன்னைப் போன்ற நிறத்தினரே! தொப்பையப்பா! விசாலமான பார்வையை உடையவரே! பூதகணங்களின் தலைவரே! உம்மை வணங்குகின்றேன்.
2. முஞ்ஜாப்புல் (முஞ்ஜி = பூணூலில் அல்லது இடுப்பில் அரைநாணாகக் கட்டுவதற்குரிய ஒருவகை நாணற்புல், Reedy sugarcane; girdle formed of the reed, worn by Brahmin celibate-students[#]), கிருஷ்ணாஜினம் (கறுப்புமானின் தோல், skin of black antelope, used as a seat during religious meditation) ஆகியவற்றை உடையவரே! நாகப்பாம்பைப் பூணூலாகத் தரித்திருப்பவரே! தலையில் பாலசந்திரனை வைத்திருப்பவரே! பூதகணங்களின் தலைவரே! கணேசப் பெருமானே, உம்மை வணங்குகின்றேன்.
   ([#] வாமனாவதாரத்தில் திருமால் குறளனாக மாவலியிடம் சென்றபோது, முப்புரிநூல், முஞ்சி ஆகியவற்றை அணிந்து சென்றதாகக் கம்பர் பாடுகிறார் - *கம்ப. ராமா. 414*)
3. அம்பிகையின் (தாயின்) மனத்தை மகிழ்ச்சியில் ஆழ்த்துபவரே! சப்த மாதர்களாலும்[$] பேணப்பட்டவரே! பக்தர்களிடம் அன்பு கொண்டவரே! மதநீரைக் கொண்டவரே! பூதகணங்களின் தலைவரான உம்மை வணங்குகின்றேன்.
   ([$] சப்தமாதர் - சிவசக்தியின் மூர்த்தபேதங்களான ஏழு மாதர்: பிரமாணி, நாராயணி, மாகேசுவரி, கௌமாரி, வாராகி, உருத்திராணி, இந்திராணி (- *பிங்கல நிகண்டு*); *சூடாமணி நிகண்டில்* பிரமாணிக்குப் பதிலாகப் பிராமியும், நாராயணியின் இடத்தில் வைஷ்ணவியும், இந்திராணிக்கு மாறாக மாகேந்திரியும், உருத்திராணியின் இடத்தில் மாகாளியும் கூறப்பெற்றுள்ளனர்; The seven divine mothers or personified energies of the principal deities - *Tamil Lexicon*)
4. பலவகையான இரத்தினங்களாலும், மாலைகளாலும் அலங்கரிக்கப் பெற்று, பலவித உருவங்களைப் பெற்றிருக்கும், தேவ - பூத கணங்களின் தலைவரான மகா கணபதியே! உம்மை வணங்குகின்றேன்.
5. யானை முகத்தைக் கொண்டவரே! தேவர்களில் முதன்மையானவரே! விசிறி போன்ற செவிகளால் அழகூட்டப் பெற்றிருப்பவரே! பாசம், அங்குசம் ஆகியவற்றைக் கொண்டிருப்பவரே! பூதகணங்களின் தலைவரான உம்மை வணங்குகின்றேன்.
6. தேவ - அசுரப் போரின்போது, மூஷிகத்தின்மீது ஏறிப் போர் செய்து வெற்றி பெற்ற கணாதிபரே! தலைசிறந்த வீரரே! பூதகணங்களின் தலைவரான உம்மை வணங்குகின்றேன்.
7. பதினெண்கணத்தைச் சேர்ந்தோரான யட்சர் (இயக்கர்), கின்னரர் (மனித உடலும், குதிரை முகமும் உடைய யாழிசை வல்லோர்), கந்தர்வர் (a celestial group of singers), மற்றும் சித்தர் (அட்டமாசித்திகளை அடைந்தோர்), வித்தியாதரர் (விஞ்சையர்), ஆகியோரால் பூஜிக்கப்படுபவரே! புண்ணிய புருஷரே! பூதகணங்களின் தலைவரான மகா கணபதியாகிய உம்மை வணங்குகின்றேன்.
8. தம்மைத் தூற்றுவோருக்கு இடயூறுகளை ஏற்படுத்துபவரே! தேவதேவரே! அடியார்களுக்கு ஏற்படும் இன்னல்களைக் களைபவரே! எல்லாச் செல்வங்களையும் அருள்பவரே! பூதகணங்களின் தலைவரான மகா கணபதியே! உம்மை அடி பணிகின்றேன்.
9. மிகுந்த புண்ணியத்தைத் தரக்கூடியதாகிய இந்த கணாஷ்டகத்தை, விநாயகப் பெருமானைத் தியானித்தவண்ணம் பாராயணம் செய்வோர், தாங்கள் மேற்கொள்ளும் எல்லாச் செயல்களிலும் வெற்றி பெறுவர்; எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுவர்; முடிவில் கைலாசத்தையும் அடைவர் என்பதில் எள்ளத்தனை ஐயமுமில்லை.
   (நன்றி: சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர், *ஜயமங்கள ஸ்தோத்ரம்*; நஜன், *கணபதி ஹ்ருதயம்*)

7. **ஆ. கணாஷ்டகம் - 2**

(ஸ்ரீகணேச புராணத்தின் உபாசனா காண்டத்தில் உள்ளது. இதைப் பாராயணம் செய்வதால் இடையூறுகள் நீங்கி, எல்லாச் செயல்களிலும் வெற்றி பெறலாம்)

யதோ அனந்த சக்தேரனந்தாச்ச ஜீவா
யதோ நிர்குணாத ப்ரமேயோ குணாஸ்தே |
யதோ பாதி ஸர்வம் த்ரிதா பேத பின்னம்
ஸதா தம் கணேசம் நமாமோ பஜாம: ‖ 1

Yatō an̲anta caktēran̲antāsca jīvā
yatō nirguṇāta pramēyō guṇāstē|
yatō bhāti sarvam tritā bhēda bhin̲n̲am
sadā tam Gaṇēsam namāmō bajāmaha‖

யதச்சாவிராஸீத் ஜகத்ஸர்வமேதத்
ததாப்ஜாஸனோ விச்வகோ விச்வகோப்தா |
ததேந்த்ராதயோ தேவஸங்கா மனுஷ்யா:
ஸதா தம் கணேசம் நமாமோ பஜாம: ‖ 2

Yatascāvirāsīt jagatsarvamētat
tatāpjāsan̲ō visvagō visvagōpttā|
tadēndrādayō dēvasaṅghā man̲uṣyāha
sada tam Gaṇesam namamo bajamaha‖

யதோ வஹ்னிபானூ பவோ பூர்ஜலம் ச
யத: ஸாக்ராச சந்த்ரமா வ்யோம வாயு: |
யத: ஸ்தாவரா ஜங்கமா வ்ருக்ஷஸங்கா:
ஸதா தம் கணேசம் நமாமோ பஜாம: ‖ 3

Yatō vahn̲ibān̲ū bavō būrjalam ca
yatah sākrāca candramā vyōma vāyuhu|
yatah stāvarā jaṅgamā vrukṣasangāha
sadā tam Gaṇēsam namāmō bajāmaha‖

யதோ தானவா: கின்னரா யக்ஷஸங்கா
யதர்ச்சாரணா வாரணா: ஸ்வாபதாச்ச |
யத: பக்ஷிகீடா யதோ விருதீச்ச
ஸதா தம் கணேசம் நமாமோ பஜாம: ‖ 4

Yatō dān̲avāh kin̲n̲arā yakṣa saṅgā
yadarc cāraṇā vāraṇāha svāpatācca|
yatap pakṣikīḍā yatō vrudīsca
sadā tam Gaṇēsam namāmō bajāmaha‖

யதோ புத்திர ஞானநாசோ முமுக்ஷோர்
யத: ஸம்பதோ பக்த ஸந்தோஷிகா: ஸ்யு: |
யதோ விக்னநாசோ யத: கார்யஸித்தி:
ஸதா தம் கணேசம் நமாமோ பஜாம: ‖ 5

Yatō puttira ñān̲a nāsō mumukṣōr
yatas sampatō bakta santōṣikāsyuhu|
yatō vign̲anāsō yatah kāryasiddhihi
sadā tam Gaṇēsam namāmō bajāmaha‖

யத: புத்ரஸம்பத் யதோ வாஞ்சிதார்த்தோ
யதோ அபக்த விக்னா: ததா அனேகரூபா: |
யத: சோகமோஹௌ யத: காம ஏவம்
ஸதா தம் கணேசம் நமாமோ பஜாம: ‖ 6

Yatah putrasampat yatō vāñjidārttō
yatō abakta vign̲āh tatā an̲ēkarūpaha|
yatah sōkamōhau yatah kāma ēvam
sadā tam Gaṇēsam namāmō bajāmaha‖

யதோ அனந்தசக்தி: ஸ சேஷோ பபூவ
தரா தாரணே அனேகரூபே ச சக்த: |
யதோ அனேகதா ஸ்வர்கலோகா ஹி நானா
ஸதா தம் கணேசம் நமாமோ பஜாம: ‖ 7

Yatō anɑnta saktihi sa sēṣō babhūva
dara dāraṇē anēkarūpē ca saktaha|
yatō anēkatā svargalōkā hi nānā
sadā tam Gaṇēsam namāmō bajāmaha‖

யதோ வேதவாசோ விகுண்டா மனோபி:
ஸ்தா நேதி நேதீதி யத்தா க்ருணந்தி: |
பரப்ரம்ஹரூபம் சிதானந்தபூதம்
ஸ்தா தம் கணேசம் நமாமோ பஜாம: ‖ 8

Yatō vēdavācō vikuṇḍā manōbihi
sadhā nēti nētīti yattā gruṇanti|
parabrahmarūpam citānanda būtam
sadā tam Gaṇēsam namāmō bajāmaha‖

ஶ்ரீகணேச உவாச ‖
புனரூசே கணாதீச: ஸ்தோத்ரமேதத் படேந்நர: |
த்ரிஸந்த்யம் த்ரிதினம் தஸ்ய ஸர்வம் கார்யம் பவிஷ்யதி ‖ 9

Sri Gaṇēsā uvāca‖
Punarūcē Gaṇādīsah stōtramētat paḍēnnaraha|
trisandyam tridinam tasya sarvam kāryam bavisyati‖

யோ ஜபேத் அஷ்டதிவஸம் ஸ்லோகாஷ்டகமிதம் சுபம் |
அஷ்ட வாரம் சதுர்த்யாம் து ஸோ அஷ்டஸித்தீர வாப்னுயாத் ‖ 10

Yō jabēt aṣṭadivasam slōka aṣṭakamidam subham |
aṣṭa vāram caturthyām tu sō aṣṭasiddhīra vāpnuyāt ‖

ய: படேன் மாஸமாத்ரம் து தசவாரம் தினே தினே |
ஸ மோசயேத் பந்தகதம் ராஜவத்யம் ந ஸம்சய: ‖ 11

Yaph paḍēn māsamātram tu dasavāram dinē dinē|
sa mōcayēt bandagatam rājavadyam na samsayaha‖

வித்யாகாமோ லபேத் வித்யாம் புத்ரார்த்தீ புத்ரமாப்னுயாத் |
வாஞ்சிதான் லபதே ஸர்வானேக விம்சதி வாரத: ‖ 12

Vidyākāmō labēt vidyām putrārtī putramāpnuyāt |
vāñcidān labatē sarvānēka vimsati vārataha ‖

யோ ஜயேத் பரயா பக்த்யா கஜானனபரோ நர: |
ஏவமுக்த்வா ததோ தேவஸ் சாந்தர்த்தானம் கத: ப்ரபு: ‖ 13

Yō jayēt parayā baktyā Gajānanaparō naraha |
ēvamuktvā tatō dēvac sāntardhānam gataha prabhuhu ‖

பொழிப்புரை:

1. அளப்பரிய ஆற்றலுடைய எவரிடமிருந்து அளவற்ற உயிர்ப்பிராணிகள் உண்டாயினவோ, நிர்குணரான (குணங்கள் அற்றவர், குணங்களைக் கடந்தவர்) எவரிடமிருந்து அளவிற்கு அடங்காத குணங்கள் உண்டாயினவோ, எவரிடமிருந்து எல்லா உலகங்களும், முக்குணங்களால் பிரிவுள்ளதாய் இருக்கின்றனவோ, அப்படிப்பட்ட கணேசரை வணங்குகின்றோம்,சேவையும் செய்கின்றோம் என்று எல்லோரும் சொன்னார்கள்.
2. எவரிடமிருந்து இந்த எல்லா உலகங்களும் உண்டாயினவோ, எங்கும் வியாபித்தவரும் (எங்கும் பரந்து நிறைந்திருப்பவர்) உலகத்தைக் காப்பவருமான பிரம்மதேவனும், இந்திராதி தேவர்களும், மனிதர்களும் எப்படிப்பட்டவரால் உண்டானார்களோ, அப்படிப்பட்ட கணபதியை எப்போதும் வணங்குகின்றோம், சேவையும் செய்கின்றோம்.
3. எவரிடமிருந்து அக்கினி, சூரியன், ருத்ரன், பூமி, நீர் ஆகியவை உண்டாயினவோ, யாரிடமிருந்து கடல்களும், சந்திரனும், வானும், வாயுவும் உண்டாயினவோ, எவரிடமிருந்து அசையாத - அசையும் பொருட்களும், மரங்கள் அடர்ந்த காடுகளும் உண்டாயினவோ, அந்தக் கணேசரை வணங்குகின்றோம், சேவையும் செய்கின்றோம்.
4. எவரிடமிருந்து அசுரர்களும், கின்னரர்களும் (மனித உடலும், குதிரை முகமும் உடைய யாழிசை வல்ல தேவ சாதியினர்), யக்ஷர்களும் (பதினெண் கணத்துள் ஒரு சாரார்), சாரணர்களும் (பதினெண் கணத்துள் ஒரு சாரார், சித்திகள் பெற்றவர்கள்) உண்டானார்களோ, யாரிடமிருந்து, யானை, கரடி, புலி முதலிய விலங்குகள் உண்டாயினவோ, எவரிடமிருந்து பறவைகள், புழுக்கள் உண்டாயினவோ, யாரிடமிருந்து செடி - கொடிகள் உண்டாயினவோ, அந்தக் கணேசரை வணங்குகின்றோம், சேவையும் செய்கின்றோம்.
5. மோட்சத்தை விரும்புவோருக்கு யாருடைய அருளால் அஞ்ஞானம் அகன்று ஞானம் பிறக்கிறதோ, யாருடைய அருளால் அடியார்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும் செல்வ போகங்கள் கிடைக்கின்றனவோ, யாருடைய அருளால் இடையூறுகள் அகல்கின்றனவோ, யாருடைய உதவியால் தொடங்கிய செயல்கள் வெற்றி பெறுகின்றனவோ, அந்தக் கணேசரை வணங்குகின்றோம், சேவையும் செய்கின்றோம்.
6. யாருடைய அருளால் மக்கட்பேறும், கோரிய பொருள்களும் போகங்களும் கிட்டுகின்றனவோ, பக்தியற்றவர்களுக்கு இடையூறுகளை ஏற்படுத்தித் துன்பத்தை யார் கொடுக்கிறாரோ அப்படிப்பட்ட கணேசரை வணங்குகின்றோம், சேவையும் செய்கின்றோம்.
7. யாருடைய அருளால் அளவற்ற சக்தி வாய்ந்த - பூமியைத் தாங்கும் வலிமை உடைய ஆதிசேஷன் தோன்றினாரோ, யாருடைய அருளால், சுவர்க்கம் முதலிய பலவகைப்பட்ட உலகங்கள் தோன்றினவோ, அப்படிப்பட்ட கணேசரை வணங்குகின்றோம், சேவையும் செய்கின்றோம்.
8. எவருடைய அருளால், மனோவிருத்திகளால் (மனத்தின் செயல்களால்) அளவிட முடியாத வேதவாக்குகள் உண்டாகி, 'அசத்தான பொருட்கள் (இல்லாதவை, பொய்யானவை), சத்தானவை (உண்மையானவை) அல்ல' என்று கூறுவதன்வழி, சிதானந்த (உண்மை) உருவான பரப்ரம்ம (முழுமுதற் கடவுளின்) சொரூபத்தை உபதேசிக்கின்றனவோ, அந்தக் கணேசரை வணங்குகின்றோம், சேவையும் செய்கின்றோம்.

9. யாரொருவர் இந்தத் தோத்திரத்தை மூன்று நாட்களுக்கு நாள்தோறும் காலை - நடுப்பகல் - சாயுங்காலம் ஆகிய மூன்று சந்தியா காலங்களிலும் பாராயணம் செய்கின்றாரோ, அவருக்கு எல்லாச் செயல்களிலும் வெற்றி உண்டாகும் என்று கணபதி அருள் பாலித்தார்.
10. யாரொருவர் எட்டு நாட்களும், சதுர்த்தியன்று எட்டு முறையும் இந்த மங்களகரமான எட்டு சுலோகங்களையும் பாராயணம் செய்கிறாரோ, அவர் அஷ்ட ஸித்திகளையும் பெறுவார்.
11. யாரொருவர் ஒரு மாதம் நாள்தோறும் பத்து முறை பாராயணம் செய்கிறாரோ, அவர் சிறையில் அடைபட்டவரையும், அரசர்களின் தண்டனைக்கு உள்ளானவரையும் விடுவித்துவிடுவார். இதில் எந்த ஐயமுமில்லை.
12. யாரொருவர் விநாயகரைத் தியானித்தவண்ணம், இந்தத் தோத்திரத்தை 21 முறை பாராயணம்செய்கிறாரோ, அவர் கோரும் வண்ணம், வித்தை, மக்கட்பேறு உட்பட எல்லாக் கோரிக்கைகளும் நிறைவேறி இனிது வாழ்வார். இவ்வாறு கூறிவிட்டுத் தேவதேவனும், பிரபுவுமான கணபதி மறைந்தருளினர்.

(நன்றி: சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர், *ஜயமங்கள ஸ்தோத்திரம்*, நான்காம் பாகம்)

8. <u>ஸங்கஷ்டநாசன கணேச ஸ்தோத்திரம்</u>

(ஸ்ரீ நாரத புராணத்தில் காணப்பெறும் இத்தோத்திரம், இயற்கைப் பேரிடர்கள், நோய் - பிணி, பேய் - பிசாசுத் தொல்லைகள் போன்ற இடையூறுகள் அகன்று இன்புற்று வாழ உதவும்; இதில் கணபதியின் 12 (துவாதச) நாமங்கள் இடம்பெற்றுள்ளன)

ப்ரணம்ய ஸிரஸா தேவம் கௌரீபுத்ரம் விநாயகம் |
பக்தா வாஸம் ஸ்மரேந் நித்யமாயு: காமார்த்த ஸித்தயே || 1

Praṇamya sirasā dēvam Gaurīputram Vināyakam|
bhaktā vāsam smarēn nityamayuhu kāmārta siddayē||

ப்ரதமம் வக்ரதுண்டம் ச ஏகதந்தம் த்விதீயகம் |
த்ருதீயம் க்ருஷ்ணபிங்காக்ஷம் கஜவக்த்ரம் சதுர்த்தகம் || 2

Pratamam Vakratuṇḍam ca Ēkadantam Dvitīyakam|
trutīyam kriṣṇapin̄gākṣam Gajavaktram caturtakam||

லம்போதரம் பஞ்சமம் ச ஷஷ்டம் விகடமேவ ச |
ஸப்தமம் விக்னராஜம் ச தூம்ரவர்ணம் ததாஷ்டமம் || 3

Lambōdaram pan̄camam ca ṣaṣṭam Vikaṭamēva ca|
saptamam Vign̲arājam ca Dhūmravarṇam tatāṣṭamam||

நவமம் பாலசந்த்ரம் ச தசமம் து விநாயகம் |
ஏகாதசம் கணபதிம் த்வாதசம் து கஜானனம் || 4

Navamam Pālacandram ca dasamam tu Vināyakam|
ēkādasam Gaṇapatim dvādasam tu Gajān̲an̲am||

த்வாதசைதானி நாமானி த்ரிஸந்த்யம் ய: படேந் நர: |
ந ச விக்னபயம் தஸ்ய ஸர்வஸித்திகரம் ப்ரபோ: || 5

Dvādasaitāṉi nāmāṉi trisandyam yap padēn naraha|
na ca Vigṉabhayam tasya sarvasiddikaram Prabhōhō||

வித்யார்த்தி லபதே வித்யாம் தனார்த்தீ லபதே தனம் |
புத்ரார்த்தீ லபதே புத்ரான் மோக்ஷார்த்தீ லபதே கதிம் || 6

Vidyārtī labatē vidyām dhaṉārtī labatē dhaṉam|
putrārtī labatē putrāṉ mōkṣārtī labatē gatim||

ஜபேத் கணபதி ஸ்தோத்ரம் ஷட்பிர்மாஸை: பலம் லபேத் |
ஸம்வத்ஸரேண ஸித்திம் ச லபதே நாத்ர ஸம்ஸய: || 7

Jabēt Gaṇapati stōtram sadbirmāsai balam labēt|
samvatsarēṇa siddim ca labatē nātra samasyaha||

அஷ்டப்யோ ப்ராஹ்மணேப்யச்ச லிகித்வா ய: ஸமர்பயேத் |
தஸ்ய வித்யா பவேத் ஸர்வா கணேசஸ்ய ப்ரஸாதத: || 8

Aṣṭabyō Brāhmaṇēbhyasca likitvāya yah samarpayēt|
tasya vidyā bhavēt sarvā Gaṇēsasya prasādadaha||

<u>பொழிப்புரை:</u>

1. நீண்ட ஆயுள், காமம், பொருள் ஆகியவற்றை அடைவதற்காகத், தேவனும், கௌரி புத்திரனும், அடியாரிடத்து வாழ்பவனும் ஆகிய விநாயகரை நாள்தோறும் வணங்கித் தியானிக்கவும் என்று நாரதர் கூறுகிறார்.
2. முதலில் வளைந்த துதிக்கையை உடையவனையும் (வக்ரதுண்டன்), அடுத்து ஒற்றைத் தந்தத்தை உடையவனையும் (ஏகதந்தன்), மூன்றாவதாகக் கருவிழிகளுக்குப் பக்கத்தில் சிவப்புடன் கூடிய கண்களை உடையவனையும், நான்காவதாக யானை முகத்தவனையும்......
3. ஐந்தாவதாகத் தொங்குகின்ற வயிற்றை உடையவனையும் (லம்போதரன்), ஆறாவதாக மதநீர்ப் பெருக்கு உடையவனையும், ஏழாவதாக இடையூறுகளுக்கு அரசனையும் (விக்னராஜன்), எட்டாவதாகக் கருஞ்சிவப்பு நிறமுள்ளவனையும் (தூம்ரவர்ணன்).......
4. ஒன்பதாவதாக நெற்றியில் சந்திரனை உடையவனையும் (பாலசந்திரன்), பத்தாவதாக விநாயகனையும், அடுத்துப் பூத கணங்களுக்குத் தலைவனையும் (கணபதி), பனிரெண்டாவதாகக் கஜமுகனையும்.......
5. தியானித்து ஜபிக்க வேண்டும். பிரபுவான கணபதியின் 12 நாமங்களையும், மூன்று சந்தியா காலங்களிலும் யாரொருவர் சொல்கிறாரோ, அவருக்கு எந்த இடையூறும் ஏற்படாது. எல்லாச் செயல்களும் வெற்றி பெறும்.
6. படிப்பைக் கோருபவன் படிப்பில் சிறப்படைவான்; பொருளை யாசிப்பவன் பொருளையும், பிள்ளைப்பேற்றினை வேண்டுபவன் நல்ல பிள்ளைகளையும், மோக்ஷத்தைக் கோருபவன் மோக்ஷத்தையும் பெறுவது உறுதி.
7. இந்தக் கணபதி தோத்திரத்தைத் தொடர்ந்து ஜபித்தால், ஆறு மாத காலத்திற்குள் கோரிய பலன் கிட்டும். ஓராண்டு ஜபித்தால் அணிமாதி சித்திகள் (அணிமா முதலான எட்டுச் சித்திகள்) கைவரப்பெறும்.
(நன்றி: *ஜயமங்கள ஸ்தோத்திரம், 4ஆம் பாகம்*)

9. <u>கணேச மந்திரங்கள்</u>

கஜானம் மஹாகாயம் விக்நராஜம் விநாயகம்
விஸ்வேசம் விஸ்வசாக்ஷம் கணேசாய நமோ நமஹ 1

Gajānam mahākāyam Vignarājam Vināyakam
visvēsam visvacākṣam Gaṇēsāya namō namaha

சிவ சக்தி ஐக்ய ரூபாய சின்மாத்ரம் ச ஸ்வபோதகம்
வ்யாக்தா வ்யக்தம் ச வ்யாபகம் கணேசாய நமோ நமஹ 2

Siva Sakti aikya rūpāya cinmātram ca svabōdakam
vyāktā vyaktam ca vyāpakam Gaṇēsāya namō namaha

ஹிரண்யகர்ப ஸம்பூதம் ஹேமாம்பர சிதம்பரம்
ஸ்வேதாம்-பரதரம் காந்தம் கணேசாய நமோ நமஹ 3

Hiraṇya garbha sambūtam ca hēmāmbara cidambaram
svētām-baradaram kāntam Gaṇēsāya namō namaha

நாதம் நாத ரூபாய நாத பிந்து கலாத்மகம்
நாதாந்தம் ச போதாந்தம் கணேசாய நமோ நமஹ 4

Nādham nādha rūpāya nādha bindu kalātmakam
nādhāntam ca bōdhāntam Gaṇēsāya namō namaha

பூத சக்திம் ச பூதாத்மா வக்ர துண்ட மஹாத்மநஹ
புத்தி சக்திம் ச புத்தி சாக்ஷிம் கணேசாய நமோ நமஹ 5

Būdha saktim ca būdhātmā vakra tuṇḍa mahātmanaha
Buddhi saktim ca Buddhi sākṣim Gaṇēsāya namō namaha

சூக்ஷ்ம ஸ்தூல தானும் தேவம் ஸ்வம்பிரகாசம் சிவம் பரம்
நாம ரூப வர்ஜித காந்தம் கணேசாய நமோ நமஹ 6

Sūkṣma stūla tānum dēvam svamprakāsam Sivam param
nāma rūpa varjita kāntam Gaṇēsāya namō namaha

ப்ரணவ ப்ராண ரூபாய ப்ராணிநாம் ப்ராணமேவ ச
அதிஷ்டானம் மநோ புத்திம் ச கணேசாய நமோ நமஹ 7

Praṇava prāṇa rūpāya prāṇinām prāṇamēva ca
adhiṣṭānam manō buddhim ca Gaṇēsāya namō namaha

விஸ்வ தைஜஸ ப்ராக்ஞாஸ்ய அகண்ட பூத ஸ்வரூபகம்
அகார உகார மகாரய கணேசாய நமோ நமஹ 8

Visva taijasa prāgn̄āsya akaṇḍa būdha svarūpakam
akāra ukāra makāraya Gaṇēsāya namō namaha

ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்-தீ-ஷு பாஸஸே யத் ப்ரகாசஸே
துரியம் நாமே சதுர்தாம் தாம் கணேசாய நமோ நமஹ 9

Jāgrath svapna suṣup-tī-ṣu bhāsaṣē yat prakāsasē
thuriyam nāmē chathurthām thām Gaṇēsāya namō namaha

சதுர்த்தி சந்த்ர ரூபாய சூர்யகோடி ப்ரகாசினே
ஸப்த ப்ரஹ்ம தேஹாய கணேசாய நமோ நமஹ 10

Chathurththi chandra rūpāya sūryakōṭi prakāsiṇē
sabda brahma dhēhāya Gaṇēsāya namō namaha

ஜேஷ்ட புத்ரம் கௌரி புத்ரம் ஸத் புத்ரம் த்ரி-நேத்ரகம்
ஸத்யம் சிவம் சுந்தரம் காதம் கணேசாய நமோ நமஹ 11

Jēsṭa putram Gauri putram sat putram tri-nētram
satyam sivam sundaram kātam Gaṇēsāya namō namaha

சுக்லாம் பரதரம் தேவம் கணேச்வரம் மஹா பேஷஜம்
ரக்தாபரண பூஷிதம் தம் கணேசாய நமோ நமஹ 12

Suklām bharadharam dēvam gaṇēsvaram mahā bhēṣajam
raktābharaṇa bhūṣitam tam Gaṇēsāya namō namaha

சதுர் புஜம் சாந்த வதநம் மோக சோக விநாசநம்
புத்தி சித்தி சமேத ஸ்ரீ கணேசாய நமோ நமஹ 13

Cadur bhujam sānta vadanam mōha sōka vināsanam
Bhuddhi Siddhi samēda sri Gaṇēsāya namō namaha

நைஷ்டிக ப்ரஹ்ம சாரினே நித்யே த்ருப்தே விலாஸினே
போக யோக பரிபூர்ணாய கணேசாய நமோ நமஹ 14

Naiṣṭika brahma cāriṇē nityē thruptē vilāsiṇē
bhōga yōga paripūrṇāya Gaṇēsāya namō namaha

மூஷிஹ வாஹந மூலாய மோதக ஹஸ்த பூர்ணாய ச
முக்தி ப்ரதாய மோக்ஷாய கணேசாய நமோ நமஹ 15

Mūṣiga vāhana mūlāya mōdhaka hasta pūrṇāya ca
mukti pradāya mōkṣāya Gaṇēsāya namō namaha

பக்த வத்ஸலம் பக்தி தாயகம் முக்தி ஹேதுகம் ப்ரபோவிபும்
சக்தி சங்கரம் க்ரந்தி ஸம்ஹாரம் கணேசாய நமோ நமஹ 16

Bhakta vatsalam bhakti dhāyagam
mukti hētukam prabhōvibhum
sakti saṅkaram granti samhāram
Gaṇēsāya namō namaha

புத்ரம் சந்த்ரசேகரம் உமா-புத்ரம் ஸுரேஸ்வரம்
ஸோபித ப்ரசாந்த சுபகரம் கணேசாய நமோ நமஹ 17

Puthram Chandrasēkaram Umā-puthram surēsvaram
sōbita prasāntha subhakaram Gaṇēsāya namō namaha

லாகாரய ஹகாராய லம்போதராய லாப்யாய
கம்பீஜாய கம்பீராய கணேசாய நமோ நமஹ 18

Lākāraya hakārāya lambhōdharāya lābhyāya
gambhījāya gambhīrāya Gaṇēsāya namō namaha

பவமூலம் பவாதாரம் மூலாதாரைக தேஜஸம்
முக்தி த்வார கபடாய கணேசாய நமோ நமஹ 19

Bhavamūlam bhavādhāram mūlādhāraika tējasam
mukti dhvāra kapaṭāya Gaṇēsāya namō namaha

பஞ்ச-முகம் பஞ்ச-தத்வம் தத்வா-தீத மஹோதரம்
ஸ்ருஷ்டி ஸ்திதி லய ஹேதுகம் கணேசாய நமோ நமஹ 20

Pañca-mukham pañca-tatvam tatvā-dhīda mahōdharam
ṣṛṣṭi stiti laya hētukam Gaṇēsāya namō namaha

ஏகதம் அநேகதம் ரூபம் ஏகதந்தம் மஹேஸ்வரம்
சோக நாசனம் மோஹ-முத்கரம் கணேசாய நமோ நமஹ 21

Ēkatham anēkatham rūpam ēkathantham Mahēsvaram
sōka nāsaṉam mōha-mudhkaram Gaṇēsāya namō namaha

(நன்றி: *Yuva Yathra* - 2006)

10. <u>பாராயண சுலோகங்கள்</u>

மூஷிஹ வாஹந, மோதக ஹஸ்த, சாமர கர்ண, விளம்பித சூத்ர |
வாமன ரூப, மஹேஸ்வர புத்ர, விக்ன விநாயக, பாத நமஸ்தே ||

(மூஷிஹத்தை வாகனமாகக் கொண்டவர்; மோதகத்தைக் கையில் ஏந்தியிருப்பவர்; கவரி (விசிறி) போன்ற காதுகளை உடையவர்; பூணூல் அணிந்த மார்பினர்; (பூத கணங்களைப் போன்று) குள்ளமான உருவினர்; தேவதேவனாகிய சிவபெருமானின் மூத்த புதல்வர்; விக்கினங்களைத் தீர்ப்பவர்; இத்தகைய உருவினரும் பண்பினருமாகிய விநாயகப் பெருமானின் பாதங்களைப் பணிகின்றேன்; வணங்குகின்றேன்)

Mūṣika vākana, mōdaka hasta, cāmara karṇa, viḷambita sūtra|
vāmaṉa rūpa, Mahēsvara putra, vighṉah Vināyaka! pādah namastē||

வாகீசாத்யாஸ் ஸுமநஸஸ் ஸர்வார்த்தாநாம் உபக்ரமே |
யம் நத்வா க்ருதக்ருத்யாஸ் யு: தம் நமாமி கஜாநநம் ||

(தேவகுருவான வியாழன், மற்றும் பிரமன் முதலான தேவர்கள் கூட, யானைமுகனை வணங்கிய பின்னரே, எந்தச் செயலையும் தொடங்குகின்றனர்; அதன்வழி அவர்களுடைய செயல்கள் இனிதே நிறைவேறுகின்றன. அந்த ஆனைமுகனை அடியேனும் வணங்குகின்றேன்; வழிபடுகின்றேன்)

Vāgīsātyās sumanas sarvārtānām upakramē|
Yam natvā krutakrutyāsyuhu tam namāmi Gajānanam||

வக்ரதுண்ட மகாகாய சூர்யகோடி ஸமப்ரபா |
நிர்விக்னம் குருமேதேவா ஸர்வகார்யேஷு ஸர்வதா ||

(வளைந்த துதிக்கையையும், பருத்த உடலையும், கோடானுகோடி சூரியர்களின் ஒளி வெள்ள (பிரகாச)த்தையும் உடைய விநாயகப் பெருமானே! எங்கும், எப்போதும் இடையூறுகளோ, தடைகளோ ஏற்படாத வகையில், எளியேன் மேற்கொள்ளும் செயல்கள் வெற்றிகரமாக நிறைவேற அருள் புரிவீராக! )

Vakratuṇḍa mahākāya Sūryakōḍi samaprabhā|
Nirvighṉam kurumēdēvā Sarva kāryēṣu sarvadā||

கஜானனம் பூத கணாதி ஸேவிதம்
கபித்த ஜம்பூ பலஸார பக்ஷிதம் |
உமா ஸுதம் சோக விநாச காரணம்
நமாமி விக்னேச்வர பாத பங்கஜம் ||

(யானை முகத்தவர்; பூத கணங்களால் சேவிக்கப் பெறுபவர்; விளாம்பழம், நாவல் பழம் ஆகியவற்றின் சாரத்தை விரும்பி உண்பவர்; உமையம்மையின் தலைப் புதல்வர்; துன்பங்கள் - துயரங்கள் அகல மூலகாரணமாக இருப்பவர்; அத்தகைய விநாயகப் பெருமானின் பாத கமலங்களைப் பணிகின்றேன்)

Gajānanam būta gaṇāti sēvitam
kapitta jambū palasāra bhakṣitam
Umā sutam sōka vināsa kāraṇam
namāmi Vignēsvara pāda paṅkajam

கஜானனம் சந்த்ர ஸமான வர்ணம்
ஸ்வதந்த பாசாங்குஸ லட்டு கானி।
ஹஸ்தைர்த தானம் கமல ஸனஸ்த்தம்
விக்னேஸ்வரம் நௌமி ஸ்தா ப்ரஸன்னம்॥

(யானை முகத்தவரே! சந்திரனைப் போன்ற நிறத்தினரே! (சொந்தத்) தந்தம், பாசம், அங்குசம், லட்டு, மோதகம் ஆகியவற்றைக் கையில் வைத்திருப்பவரே! தாமரை ஆசனத்தில் அமர்ந்திருப்பவரே! தடைகளைத் தகர்த்தெறிபவரே! எப்போதும் அடியார்களுக்கு அருளும் விநாயகரே! உம்மை வணங்குகின்றேன்)

Gajānanam candra samāna varṇam
svadanta pāsāṅgusa laḍḍu gāni|
hastairdha dānam kamala sanastam
Vignēsvaram naumi sadhā prasannam‖

ஏகதந்தம் மஹாகாயம்
லம்போதர கஜானனம்
விக்ன நாசகர்ம தேவம்
ஹேரம்பம் ப்ரணமாம்யகம்

(ஒற்றைத் தந்தத்தை உடையவரும், பெரிய உடம்பினரும், தொந்தி வயிற்றினரும், இடையூறுகள் அனைத்தையும் அகற்றுபவரும் ஆகிய ஹேரம்பர் (அன்னையின் அன்புக்கு அருகதையானவர்) என்னும் அந்த ஆனைமுகரை அடி பணிகின்றேன்)

Ēkadantam mahākāyam
lambōdara gajānanam|
vigna nāsakarma Dēvam
Hērambam-praṇa māmyaham‖

> ***He who works in the world with the feeling***
> ***that he is serving the Lord in all names and forms,***
> ***will eventually reach God-consciousness.***
> ***The more you spend your energy in serving others,***
> ***the more divine energy will flow to you.***
>
> *- The Bhavan's Journal*

கலத்தானகண்டம் மிலத்ப்ருங்கஷண்டம்
சலச்சாருசண்டம் ஜகத்ராண சௌண்டம் |
கனத்தந்தகாண்டம் விபத்பங்கசண்டம்
சிவப்ரேமபிண்டம் பஜே வக்ரதுண்டம் ||

- சிவபுஜங்கம்
(கணபதி தோத்திரம்)

*(கணபதி யானை முகத்தை உடையவர்; அவரது கன்னத்திலிருந்து மதநீர் பெருகுவதால், வண்டுகள் அவரது முகத்தைச் சுற்றி வட்டமிடுகின்றன; அவற்றை விரட்ட அவர் தம் அழகிய துதிக்கையை ஆட்டுகிறார்; அவருடைய ஒளி மிகுந்த தந்தங்கள் உள்ளத்தை ஈர்ப்பவையாக உள்ளன. இவ்வாறு மதத்துடன் வலிமையும் மிகுந்தவரான கணேசர், பகைவர்களை அழித்து, நமக்கு ஏற்படும் துன்பங்களைப் போக்குகிறார். இவ்வாறு ஒரே நேரத்தில் வசீகரமான தோற்றமுடையவராகவும், வன்மையானவராகவும் திகழும் கணபதி, சிவபெருமானின் அன்பிற்குப் பாத்திரமாக விளங்குகிறார். அவரை அடிபணிந்து வழிபடுகிறேன்)*

Galaddānagaṇḍam miladbruṅkaṣaṇḍam
Calaccārusaṇḍam jagattrāṇa sauṇḍam|
kanaddantakāṇḍam vipadbaṅgacaṇḍam
Sivaprēmabhiṇḍam bhajē vakratuṇḍam||

ஸதா பாலரூபாபி விக்நாத்ரி ஹந்த்ரீ
மஹா தந்திவக்த்ராபி பஞ்சாஸ்யமான்யா |
விதீந்த்ராதிம்ருக்யா கணேசாபிதா மே
விதத்தாம் ஸ்ரியம் காபி கல்யாணமூர்த்தி: ||

*(விநாயகப் பெருமான் எப்போதும் குழந்தை போல் தோன்றினாலும், மலை போன்று ஏற்படும் இடையூறுகளைத் தகர்த்தெறியும் ஆற்றல் மிகுந்தவர்; யானை முகமுடையவரானாலும், சிம்மம் போன்றவரான சிவபெருமானால் போற்றப்பெறுபவர்; எத்தகைய இடையூறுகளையும் போக்கும் இயல்பினராதலால், பிரமன், இந்திரன் போன்றோரும் இவரைத் தேடி வந்து வழிபடுகின்றனர். இத்தகைய அற்புதமான மங்களமூர்த்தியாகிய கணேசப் பெருமான், நம் இடையூறுகளைப் போக்கி, எல்லா ஐஸ்வர்ய(செல்வ)ங்களையும் வழங்குவாராக!)*

Sadā bālarūpāpi vignādri hanthrī
mahā dantivakthrāpi Pañcāsyamāṉyā|
vidhīndrādimrugyā Gaṇesābhidhā mē
vidhattām sriyam kāpi kalyāṉamūrti:||

*குழந்தையாக இருந்துகொண்டே,*
*ஆதி முதலின் தோற்றமாக இருக்கும் பிள்ளையார்,*
*குழந்தை போல் தோன்றினாலும்,*
*பக்தர்களை ஒரேயடியாகக் கைதூக்கி உயர்த்தி விடுவதிலும்,*
*முதல்வராக இருக்கிறார்.*

*-காஞ்சி முனிவர்*

11. <u>மகா கணபதி மங்கள மாலிகா தோத்திரம்</u>
(ஸ்ரீ கிருஷ்ணேந்திர ஸரஸ்வதி என்ற யதி(துறவி)யால் எழுதப்பட்டது)

ஸ்ரீகண்டப்ரேம புத்ராய கௌரீவாமாங்க வாஸிநே |
த்வாத்ரிம்ஸத் ரூபயுக்தாய ஸ்ரீகணேசாய மங்களம் || 1

Srikaṇḍaprēma putrāya Gaurīvāmāṅga vāsinē|
Dvātrimsat rūpayuktāya Sri Gaṇēsāya maṅgaḷam||

ஆதிபூஜ்யாய தேவாய தந்த மோதக தாரிணே |
வல்லபா ப்ராணகாந்தாய ஸ்ரீகணேசாய மங்களம் || 2

Ādipūjyāya dēvāya dhanta mōdaka dāriṇē|
Vallabhā prāṇakāntāya Sri Gaṇēsāya maṅgaḷam||

லம்போதராய சாந்தாய சந்திரகர்வாபஹாரிணே |
கஜாநநாய ப்ரபவே ஸ்ரீகணேசாய மங்களம் || 3

Lambōdarāya sāntāya candragarvāpahāriṇē|
Gajānanāya prabhávē Sri Gaṇēsāya maṅgaḷam||

பஞ்சஹஸ்தாய வந்தியாய பாசாங்குச தராயச |
ஸ்ரீமதே கஜகர்ணாய ஸ்ரீகணேசாய மங்களம்|| 4

Pañcahastāya vandiyāya pāsāṅguca darāyaca ।
srimatē Gajakarṇāya Sri Gaṇēsāya maṅgaḷam||

த்வைமாதுராய பாலாய ஹேரம்பாய மஹாத்மனே |
விகடாய ஆகுவாஹாய ஸ்ரீகணேசாய மங்களம் || 5

Dvaimāturāya Bālāya Hērambāya mahātmanē|
Vikaṭāya Āhuvāhāya Sri Gaṇēsāya maṅgaḷam||

ப்ருஸ்னி ஸ்ருங்கா யாஜிதாய க்ஷிப்ர அபீஷ்டார்த்த தாயினே |
ஸித்தி புத்தி ப்ரமோதாய ஸ்ரீகணேசாய மங்களம் || 6

Prusṉi sruṅgā yājitāya kṣipra abhīṣṭārta dāyinē|
Siddhi Buddhi pramōdāya Sri Gaṇēsāya maṅgaḷam||

*எல்லாவற்றிலும் இறைமை உள்ளது.*
*இறைமை இல்லாப் பொருள் ஏதுமில்லை.*
*இந்த உண்மையினை உணர்வதுதான் பரமஞானம் ஆகும்.*
*-மகாகவி பாரதியார்*

விலம்பி யக்ஞ ஸூத்ராய ஸர்வ விக்ன நிவாரிணே |
தூர்வாதள ஸுபூஜ்யாய ஸ்ரீகணேசாய மங்களம் || 7

Vilambi yagña sūtrāya sarva vigna nivāriṇē|
dūrvādaḷa supūjyāya Sri Gaṇēsāya maṅgaḷam||

மஹாகாயாய பீமாய மஹாஸேநாக்ர ஜன்மனே |
த்ரிபுரை வர்தோத் தாரே ஸ்ரீகணேசாய மங்களம் || 8

Mahākāyāya Bīmāya Mahāsēnāgra janmanē|
Tripurai vardōd dhārē Sri Gaṇēsāya maṅgaḷam||

ஸிந்தூர ரம்ய வர்ணாய நாகபத்தோதராயச |
ஆமோதாய ப்ரமோதாய ஸ்ரீகணேசாய மங்களம் || 9

Sindūra ramya varṇāya nāgabatdhōdarāyaca|
āmōdāya pramōdāya Sri Gaṇēsāya maṅgaḷam||

விக்னகர்த்ரே துர்முகாய விக்னஹர்த்ரே சிவாத்மனே |
ஸுமுகாயைக தந்தாய ஸ்ரீகணேசாய மங்களம் || 10

Vignakartrē Durmukāya Vignahartrē Sivātmanē|
Sumukāyaika dandāya Sri Gaṇēsāya maṅgaḷam||

ஸமஸ்த கணநாதாய விஷ்ணவே தூமகேதவே
த்ரியக்ஷாய பாலசந்த்ராய ஸ்ரீகணேசாய மங்களம் || 11

Samasta gaṇanātāya Viṣṇavē Dhūmakētavē|
Triyakṣāya Pālacandrāya Sri Gaṇēsāya maṅgaḷam||

சதுர்தீசாய மான்யாய ஸர்வ வித்யாப்ரதாயினே |
வக்ரதுண்டாய குப்ஜாய ஸ்ரீகணேசாய மங்களம் || 12

Caturdīsāya mānyāya sarva vidyā pradāyinē|
Vakratuṇḍāya Kubjāya Sri Gaṇēsāya maṅgaḷam||

*எங்கெல்லாம் என் மனம் செல்கின்றதோ,*
*அங்கெல்லாம் உன் திருவுருவமே எனக்குத் தோன்றுகிறது.*
*எங்கெல்லாம் என் தலை இருக்கிறதோ,*
*அங்கெல்லாம் உன் திருவடிகளே இருப்பதாகக் காண்கிறேன்.*
*-திரிபுரசுந்தரி வேதபாதஸ்தவம்*

துண்டினே கபிலாக்யாய ஸ்ரேஷ்டாய ருணஹாரிணே |
உத்தண்டோத் தண்ட ரூபாய ஸ்ரீகணேசாய மங்களம் || 13

Duṇḍiṇē kapilākyāya srēṣṭāya ruṇahāriṇē|
uddaṇḍōt daṇḍa rūpāya Sri Gaṇēsāya maṅgaḷam||

கஷ்டஹர்த்ரே த்விதேஹாய பக்தேஷ்ட ஜயதாயினே |
விநாயகாய விபவே ஸ்ரீகணேசாய மங்களம் || 14

Kaṣṭahartrē dvidēhāya baktēṣṭa jayadāyinē|
Vināyakāya vibavē Sri Gaṇēsāya maṅgaḷam||

ஸச்சிதாநந்த ரூபாய நிர்குணாய குணாத்மநே |
வடவே லோககுரவே ஸ்ரீகணேசாய மங்களம் || 15

Saccidānanda rūpāya nirguṇāya guṇātmanē|
vaḍavē lōkaguravē Sri Gaṇēsāya maṅgaḷam||

ஸ்ரீசாமுண்டா ஸுபுத்ராய ப்ரஸன்ன வதனாயச |
ஸ்ரீராஜ ராஜ ஸேவ்யாய ஸ்ரீகணேசாய மங்களம் || 16

Sricāmuṇḍā suputrāya prasanna vadanāyaca|
Sri Rāja Rāja sēvyāya Sri Gaṇēsāya maṅgaḷam||

ஸ்ரீசாமண்டா க்ருபா பாத்ர ஸ்ரீகிருஷ்ணேந்த்ர விநிர்மிதாம் |
விபூதி மாத்ருகா ரம்யாம் கல்யாணைஸ்வர்ய தாயிநீம் || 17

Sricāmuṇḍā krupā pātra Sri-kriṣṇēndra vinirmitām|
vibūti mātrukā ramyām kalyāṇaisvarya dāyinīm||

ஸ்ரீமஹா கணநாதஸ்ய சுபாம் மங்களமாலிகாம் |
ய: படேத் ஸததம் வாணீம் லக்ஷ்மீம் ஸித்திமவாப்நுயாத் || 18

Sri Mahā Gaṇanātasya subhām maṅgaḷamālikām|
yah paḍēt satatam Vāṇīm Lakṣmīm siddimavāpnuyāt||

*நாடு செழித்திட நல்லறம் வளரட்டும்!*
*நல்லவர் செய்கையால் நற்பணி பெருகட்டும்!*
*வான்மழை பொழிந்து வையகம் செழிக்கட்டும்!*
*-சிவஞான பூஜா மலர்*

பொழிப்புரை:

1. ஸ்ரீ நீலகண்டரின் பிரியத்துக்குகந்த புத்திரனும், அம்மையின் இடது மடியில் இனிதே அமர்ந்திருப்பவரும், முப்பத்திரண்டு உருவங்களை உடையவருமான ஸ்ரீ மஹா கணபதிக்கு மங்களம் உண்டாகட்டும்.
2. முதலில் வழிபடப்பெறுபவரும், தேவரும், தந்தம், கொழுக்கட்டை ஆகியவற்றைக் கையில் வைத்திருப்பவரும், வல்லபா தேவியின் உயிருக்குயிரான கணவருமான ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
3. தொங்குகின்ற வயிற்றை உடையவரும், சாந்தமூர்த்தியும், சந்திரனுடைய அகங்காரத்தை அகற்றியவரும், யானை முகத்தினரும், பிரபுவுமான ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
4. ஐந்து கைகளை உடையவரும், எல்லோராலும் வணங்கப்படுபவரும், பாசம் - அங்குசம் ஆகியவற்றைத் தரித்திருப்பவரும், சீமானும், யானையின் காதுகளை உடையவருமான ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
5. துர்க்கை, சாமுண்டாதேவி ஆகியோரால் வளர்க்கப்பட்டதால் இரு தாயரை உடையவரும், இளம் வயதினரும், ஹேரம்பரும் (ஹே = மஹேஸ்வரரின் அருகில்; ரம்பதே = இருக்கிறார்), மஹாத்மாவும், விரிந்த கன்னங்களை உடையவரும், முஞ்சூறை வாகனமாக உடையவரும் ஆகிய ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
6. ஒளி பொருந்திய தந்தத்தை உடையவரும், ஒருவராலும் வெற்றி கொள்ளப்படாதவரும், கோரியவற்றை விரைந்து வழங்குபவரும், சித்தி-புத்தி என்னும் இரு துணைவியருக்கு மகிழ்ச்சியை ஊட்டுபவரும் ஆகிய ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
7. தொங்குகின்ற பூணூலை உடையவரும், எல்லா இடையூறுகளையும் போக்குபவரும், அறுகம்புல்லால் வழிபடப்பெறுபவருமான ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
8. பெரிய உடலை உடையவரும், பயங்கரமானவரும், முருகனுக்கு மூத்தவரும், பரமசிவனிடமிருந்து வரம் பெற்றவருமான ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
9. குங்குமப்பூவைப் போன்ற அழகிய நிறத்தினரும், பாம்பை வயிற்றில் கட்டிக் கொண்டிருப்பவரும், மகிழ்ச்சியே உருவானவரும், இன்ப உருவினருமான ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
10. தன்னிடத்துப் பக்தியற்றவர்களுக்கு இடையூறுகளை ஏற்படுத்துபவரும், மாறுபட்ட முகத்தை உடையவரும், அடியார்களின் இடையூறுகளைக் களைபவரும், சிவகுமாரனும், மங்களகரமான முகத்தினரும், ஒரு தந்தத்தை உடையவருமாகிய ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
11. எல்லாக் கணங்களுக்கும் தலைவரும், எங்கும் நிறைந்திருப்பவரும், பாவியருக்கு இடையூறின் உருவமாகத் தோற்றமளிப்பவரும், முக்கண்ணரும், நெற்றியில் சந்திரனைத் தரித்திருப்பவருமான ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
12. சதுர்த்தி திதிக்கு நாயகனும், வழிபடத்தக்கவரும், எல்லா வித்தைகளையும் அருள்பவரும், வளைந்த துதிக்கையை உடையவரும், குள்ளமான உருவினரும் ஆகிய ஸ்ரீகணபதிக்கு மங்களம்.
13. டுண்டி கணபதியும் (நர்த்தனம் செய்கின்றவரும்), கபிலர் என்னும் பெயரை உடையவரும், மிகச் சிறந்தவரும், கடன்களைத் தீர்ப்பவரும், அச்சமூட்டும் தோற்றத்தினை உடையவருமான ஸ்ரீ கணபதிக்கு மங்களம்.
14. துன்பங்களைக் களைபவரும், யானை-மனித உருவங்களை உடையவரும், அடியார் கோருபவற்றை வெற்றிகரமாக நிறைவேற்றித் தருபவரும், விநாயகரும், பிரபுவுமான ஸ்ரீகணபதிக்கு மங்களம்.
15. சச்சிதானந்த (சத்-சித்-ஆனந்தம்) உருவினரும், தீக்குணமற்றவரும், கல்யாண குணங்கள் நிரம்பியவரும், பிரம்மசாரியும், உலகங்களுக்கு ஆசாரியராக அமைந்திருப்பவருமாகிய கணபதிக்கு மங்களம்.
16. சாமுண்டாதேவியின் மங்கள புத்திரரும், யானை முகத்தை உடையவரும், குபேரன் முதலியோரால் வழிபடப்பெறுபவரும் ஆகிய கணபதிக்கு மங்களம்.
17. சாமுண்டா தேவியின் கருணைக்குப் பாத்திரமான கிருஷ்ணேந்திரன் என்னும் துறவியால் இயற்றப்பெற்றதும்,
18. அஷ்டமாசித்திகளையும், சப்த கன்னியரின் அருட்பிரசாதத்தையும் வழங்குவதால் இனியதும், செல்வபோகங்களை வழங்கக்கூடியதும், மங்களத்தை ஏற்படுத்துவதுமான இந்த மஹா கணபதி மங்கள மாலிகா (மாலை) தோத்திரத்தை, யாரொருவர் படிக்கிறாரோ (பாராயணம் செய்கிறாரோ), அவர் எல்லாப் பேறுகளையும் பெற்று இனிது வாழ்வார்.

(நன்றி: ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர், *ஜயமங்கள ஸ்தோத்ரம்*, பதினோராம் பாகம்)





Ayuthian bronze, front view



Four-headed Ganesa from Indo-China



Khmer bronze image



Khmer bronze image with Buddhist features



Javanese bronze image



Javanese standing figure



Ganesa from Karang Kates



*Ramasse'* type of Javanese image



Javanese bronze image



Stone figure from Borneo



Bronze image, Indo-Chinese



Bronze figure from Borneo



Nepalese bronze image



Balinese Ganesa in role of Fudo



Balinese stela



Koñcanāneśvara Vidasavara



Mahāvighneśvara on a turtle

Mahāvighneśvara, the Conqueror

(நன்றி: Ganesa - *A Monograph on the Elephant-faced God* by Alice Getty)
அனுப்பி உதவியவர் : பேராசிரியர் ச. சிங்காரவேலு

உ
சிவமயம்
ஓம் கம் கணபதயே நம:

## Pronunciation Guide

| | | |
|---|---|---|
| **VOWELS** | | |
| அ | **a** | **A**mmā (mother) |
| ஆ | **ā** | **Ā**cci (elder sister; a term of respect used in addressing women of higher position) |
| இ | **i** | **i**ḍumbaṉ (name of the Leader of Lord Muruga's hosts) |
| ஈ | **ī** | **ī**svaraṉ (Lord Siva) |
| உ | **u** | **u**ḍal (body) |
| ஊ | **ū** | **ū**rvalam (procession on festive occasions round a town or village) |
| எ | **e** | **e**ṭṭu (the number eight) |
| ஏ | **ē** | **ē**ḻu (the number seven) |
| ஐ | **ai** | **ai**ntu (the number five) |
| ஒ | **o** | **o**ṉṟu (the number one) |
| ஓ | **ō** | **ō**m (mystic name of the Almighty, preceding all the mantras) |
| ஔ | **au** | **Au**vai (name of a famous poetess) |
| ஃ | **k̲** | e**k̲**hu (steel) (the sound of **h** in Malay name Rahmah) |
| **CONSONANTS** | | |
| க் | **k** | **k**aḍavuḷ (God) |
| க் | **g** | **G**aṇēsar (Lord Ganesa) |
| ஹ் | **h** | **H**ari (Lord Vishnu) |
| ங் | **ṅ** | ma**ṅ**gaḷam (auspiciousness) |
| ச் | **c** | veḷi**cc**am (light) |

## Pronunciation Guide

| CONSONANTS | | |
|---|---|---|
| ஸ் | s | **S**arasvati (Goddess of learning and arts) |
| ஜ் | J | **J**annal (window) |
| ஞ் | ñ | Ma**ñ**jaḷ (turmeric) |
| ட் | ṭ | paṭṭam (kite, title) |
| ட் | ḍ | **Ḍ**utch (Holland or its people) |
| ண் | ṇ | aṇṇan (elder brother) |
| த் | t | **T**amil |
| த் | d | **d**armam (virtuous deed) |
| ந் | n | **n**ambi (the elite among men) |
| ப் | p | **p**arisu (gift, prize) |
| ப் | b | **b**akti (devotion to God) |
| ம் | m | **m**anaivi (wife) |
| ய் | y | mai**y**am (centre) |
| ர் | r | **r**atam (chariot) |
| ல் | l | u**l**aham (world) |
| வ் | v | **v**aṇakkam |
| ழ் | l | pa**l**am (fruit) |
| ள் | ḷ | pa**ḷḷ**am (low land) |
| ற் | r | Tirucci**rr**ambalam (an invocatory expression of Saivites, used when reciting Tevaram hymns) |
| ன் | n | a**nn**ai (mother) |
| ஷ் | ṣ | **ṣ**aṇmugar (six-faced Lord Muruga) |
| க்ஷ் | kṣ | La**kṣ**mi (Goddess of Wealth) |

# <u>தோத்திரங்கள் பல சொல்லித் துதிப்போம்</u>

*(துதிப் பாடல்கள் பலவற்றைப் பாடி வழிபடுவோம்)*

1. <u>அருள்புரிவாய் ஆனைமுகா!</u>

சமயந்தொறும் நிறைந்த தற்பரமே! அன்பர்க்கு
அமையும் தனித்-தெள் ளமுதே! - உமைதந்த
கண்மணியே! யானைமுகக் கற்பகமே! பேரின்ப
விண்மணியே! ஆள்வாய் விரைந்து

*- விநாயகமூர்த்தி பதிகம்*

*(எல்லாச் சமயங்களிலும் நிறைந்திருக்கும் பரம்பொருளே! அடியார்க்குத் தெளிந்த அமுதம் போன்றவனே! உமை மைந்த! ஆனைமுகத்து அரசே! பேரின்பம் நல்கும் பெருமானே! விரைந்து எங்களை ஆட்கொண்டு அருள்வாயாக!)*

Samayam-tor̲um nir̲ainda tar̲paramē! An̲barkku
amaiyum tan̲i-t teḷḷamudē! Umai tanda
kaṇmaṇiyē! Yān̲ai-muha-k kar̲ppahamē! Pērin̲ba
viṇmaṇiyē! Āḷvāy viraindu.

2. <u>அர்ச்சனை செய்ய அமர்கின்ற அழகன்</u>

*(அருச்சனைகளை விரும்பி ஏற்கும் விநாயகப் பெருமான்)*

"எந்தமது சிந்தை-பிரி யாத-பெரு-
மான்"என இறைஞ்சி,இமையோர்
வந்து-துதி செய்ய,வளர் தூபமொடு,
தீப-மலி வாய்மை-அதனால்,
அந்தி-அமர் சந்தி-பல அர்ச்சனைகள்
செய்ய,அமர் கின்ற-அழகன்,
சந்த-மலி குந்தள-நன் மாதினொடு
மேவு-பதி சண்பை-நகரே.

*3:75:1*

*("எங்கள் எண்ணத்திலிருந்து நீங்காத தலைவனே!" என்று தேவர்கள் வந்து தொழுது போற்றுகின்றனர். அவ்வாறு தேவர்களால் துதிக்கப்பெறும் சிவபெருமான், மாலை முதலிய சந்தியா காலங்களில், நறுமணம் கமழும் தூப-தீபங்களோடு அடியாரால் அருச்சிக்கப் பெறுகிறான். அப்பெருமான், மணமிகுந்த கூந்தலை உடைய உமையம்மையுடன் உறையும் தலம் சண்பை நகர் (சீகாழி) ஆகும்)*

"Entamadu sindai piriyāda Perumān̲"
en̲a ir̲aiñji, imaiyōr
vandu tudi seyya, vaḷar dūpamoḍu,
dīpa-mali vāymai adan̲āl,

andi amar sandi pala arccanaihal
seyya, amarhinra alahan,
sanda mali kundala nan mādinodu
mēvu pati Sanbai naharē.

ஞானப்பேர் நவில வைத்தார் (108 holy names of Lord Ganesa)

(தமிழில் அருச்சனைக்குரிய 108 போற்றித் தொடர்கள்)

அர்ச்சனை என்பது காலத்தால் பிற்பட்டதாக இருந்தாலும், இறைவனின் 108 நாமங்களைக் (அஷ்டோத்திர சத நாமாவளி) கூறி மலர் தூவி வழிபாடு செய்வது என்பது சிறப்புடையதாகக் கருதப்பெறுகிறது.

அந்த அடிப்படையில், தேவாரப் பாடல் பெற்ற தலங்களில் வீற்றிருக்கும் விநாயக மூர்த்தங்களுக்கு, இயல்பாக அமைந்த அல்லது காரணப் பெயர்களாக அமைந்த 108 நாமங்கள் இங்கு தொகுக்கப் பெற்றுள்ளன. இந்த ஞானப் பெயர்களைச் சொல்லும்போது, அந்தந்தத் தலத்தின் நினைவும் ஏற்படும். அதன்வழி அந்தத் தலங்களுக்குச் சென்றுவந்த ஒரு நிறைவு தோன்றும்)

திருச்சிற்றம்பலம் Tiruccirrambalam

ஓம் அச்சம் தீர்த்த விநாயகர் போற்றி Ōm Accam tīrtta Vināyahar Pōrri

(திருவம்பர் மாகாளம், திருச்சாத்தமங்கை. Tiruvambar māhālam, Tiruccātta mangai)

ஓம் அச்சிறுத்த விநாயகர் போற்றி Ōm Accirutta Vināyahar Pōrri

(திருவிற்கோலம். Tiruvirkkōlam)

ஓம் அமிர்த விநாயகர் போற்றி Ōm Amirda Vināyahar Pōrri

(திருக்கூடலையாற்றூர், திருக்கோடி. Tiru-k-kūdalaiyārrūr, Tiru-k-kōdi)

ஓம் அம்பல விநாயகர் போற்றி Ōm Ambala Vināyahar Pōrri

(திருக்குற்றாலம். Tiru-k-kurrālam)

ஓம் அழகிய விநாயகர் போற்றி Ōm Alahiya Vināyahar Pōrri

(திருவாவடுதுறை. Tiruvāvaduturai)

ஓம் அன்னக்காவடி விநாயகர் போற்றி Ōm Anna-k-kāvadi Vināyahar Pōrri

(திருக்கழுக்குன்றம். Tiru-k-kalu-k-kunram)

ஓம் ஆகண்டல விநாயகர் போற்றி Ōm Ākhandala Vināyahar Pōrri

(திருப்புனவாயில். Tiru-p-punavāyil)

ஓம் ஆக்ஞா கணபதி போற்றி Ōm Āgñā Ganapati Pōrri

(திருவிடைமருதூர், திருவிரும்பூளை. Tiruvidaimarutūr, Tiruvirumbūlai)

ஓம் ஆண்ட விநாயகர் போற்றி Ōm Ānda Vināyahar Pōrri

(திருவிடைமருதூர், சீகாழி, திருநறையூர்ச் சித்தீச்சரம், திருப்பனந்தாள்.
Tiruvidaimarutūr, Sīhāli, Tirunaraiyūr-c cittīccaram, Tiruppanantāl)

ஓம் ஆதி விநாயகர் போற்றி Ōm Āti Vināyahar Pōrri

(திருவையாறு, திருக்குடமூக்கு, திருக்குடவாயில், திருச்சிறுகுடி, திலதைப்பதி. Tiruvaiyāṟu, Tiru-k-kuḍamūkku, Tiru-k-kuḍavāyil, Tirucciṟukuḍi, Tilataippati) 10

ஓம் ஆவுடை விநாயகர் போற்றி — Ōm Āvuḍai Vināyahar Pōṟṟi
(திருவையாறு. Tiruvaiyāṟu)

ஓம் ஆனைதிறை கொண்ட விநாயகர் போற்றி — Ōm Āṉai tiṟai koṇḍa Vināyahar Pōṟṟi
(திருவண்ணாமலை. Tiruvaṇṇāmalai)

ஓம் ராஜராஜ விநாயகர் போற்றி — Ōm Rāja rāja Vināyahar Pōṟṟi
(திருப்பாம்புரம். Tiruppāmburam)

ஓம் லக்ஷ்மி கணபதி போற்றி — Ōm Lakṣmi Gaṇapati Pōṟṟi
(திருக்காளத்தி. Tiru-k-kāḷatti)

ஓம் உச்சிப் பிள்ளையார் போற்றி — Ōm Ucci-p Piḷḷaiyār Pōṟṟi
(திருச்சிராப்பள்ளி. Tirucciṟāppaḷḷi)

ஓம் உச்சிஷ்ட கணபதி போற்றி — Ōm Ucciṣṭa Gaṇapati Pōṟṟi
(திருச்சத்திமுற்றம், திருமாற்பேறு. Tiru-c-catti muṟṟam, Tirumāṟpēṟu)

ஓம் ஏகாந்த விநாயகர் போற்றி — Ōm Ēhānda Vināyahar Pōṟṟi
(திருக்கொடுங்குன்றம். Tiru-k-koḍuṅkuṉṟam)

ஓம் ஐங்கலக்காசு விநாயகர் போற்றி — Ōm Aiṅkala-k kāsu Vināyahar Pōṟṟi
(திருவாரூர். Tiruvārūr)

ஓம் ஐம்முகப் பிள்ளையார் போற்றி — Ōm Aimuha-p Piḷḷaiyār Pōṟṟi
(திருவானைக்கா, திருநாகைக் காரோணம். Tiruvāṉaikkā, Tirunāhai-k kārōṇam)

ஓம் ஐராவத விநாயகர் போற்றி — Ōm Airāvata Vināyahar Pōṟṟi 20
(திருவாலவாய். Tiruvālavāy)

ஓம் கங்கை விநாயகர் போற்றி — Ōm Gaṅgai Vināyahar Pōṟṟi
(திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம். Tiru-k-kuḍandai-k kīḻ-k-kōṭṭam)

ஓம் கடுக்காய் விநாயகர் போற்றி — Ōm Kaḍukkāy Vināyahar Pōṟṟi
(திருக்காறாயில். Tiru-k-kāṟāyil)

ஓம் கலங்காமல் காத்த விநாயகர் போற்றி — Ōm Kalaṅgāmal kātta Vināyahar Pōṟṟi
(திருவிரும்பூளை. Tiruvirumbūḷai)

ஓம் கள்ளவாரணப் பிள்ளையார் போற்றி — Ōm Kaḷḷa vāraṇa-p Piḷḷaiyār Pōṟṟi
(திருக்கடவூர். Tiru-k-kaḍavūr)

ஓம் கற்பக விநாயகர் போற்றி — Ōm Kaṟppaha Vināyahar Pōṟṟi
(திருக்கஞ்சனூர், திருக்கருகாவூர், திருப்பறியலூர் வீரட்டம், திருப்புள்ளிருக்கு வேளூர், திருப்பூவணம், திருப்பேரெயில், (தென்) திருமுல்லைவாயில். Tiru-k-kañjaṉūr, Tiru-k-karukāvūr,

Tiruppaṟiyalūr vīraṭṭam, Tiru-p-puḷḷirukku vēḷūr, Tiruppūvaṇam, Tiruppēreyil, Tirumullaivāyil (south)

ஓம் காசி துண்டீர விநாயகர் போற்றி Ōm Kāsi Duṇḍīra Vināyahar Pōṟṟi

(திருவெண்காடு. Tiruveṇkāḍu)

ஓம் கார்த்திகை விநாயகர் போற்றி Ōm Kārttihai Vināyahar Pōṟṟi

(சிக்கல். Sikkal)

ஓம் காவிரி கண்ட விநாயகர் போற்றி Ōm Kāviri kaṇḍa Vināyahar Pōṟṟi

(திருப்பாண்டிக் கொடுமுடி. Tiruppāṇḍi-k koḍumuḍi)

ஓம் குணாலய விநாயகர் போற்றி Ōm Guṇālaya Vināyahar Pōṟṟi

(திருவொற்றியூர். Tiruvoṟṟiyūr)

ஓம் கும்பகர்ணப் பிள்ளையார் போற்றி Ōm Kumba karṇa-p Piḷḷaiyār Pōṟṟi 30

(திருக்கடுவாய்க்கரைப்புத்தூர். Tiru-k-kaḍuvāy-k-karai-p- puttūr)

ஓம் குருந்த விநாயகர் போற்றி Ōm Kurunda Vināyahar Pōṟṟi

(திருஇலம்பையங்கோட்டூர். Tiru-ilambaiyaṅkōṭṭūr)

ஓம் குளம் வெட்டிய விநாயகர் போற்றி Ōm Kuḷam veṭṭiya Vināyahar Pōṟṟi

(திருப்புன்கூர். Tiruppuṉkūr)

ஓம் குறுக்கை விநாயகர் போற்றி Ōm Kuṟukkai Vināyahar Pōṟṟi

(திருக்குறுக்கை. Tirukkuṟukkai)

ஓம் கூப்பிடு விநாயகர் போற்றி Ōm Kūppiḍu Vināyahar Pōṟṟi

(திருமுருகன்பூண்டி. Tirumuruhaṉpūṇḍi)

ஓம் கை காட்டிய விநாயகர் போற்றி Ōm Kai kāṭṭiya Vināyahar Pōṟṟi

(திருநாட்டியத்தான்குடி. Tirunāṭṭiyattāṉkuḍi)

ஓம் சங்கற்ப கணபதி போற்றி Ōm Saṅgaṟppa Gaṇapati Pōṟṟi

(திருக்காளத்தி. Tiru-k-kāḷatti)

ஓம் சண்பக விநாயகர் போற்றி Ōm Saṇbaha Vināyahar Pōṟṟi

(திருக்குற்றாலம், திருநாகேச்சுரம். Tirukkuṟṟālam, Tirunāhēccuram)

ஓம் சண்முக விநாயகர் போற்றி Ōm Ṣaṇmuha Vināyahar Pōṟṟi

(திருக்கழுக்குன்றம். Tiru-k-kaḻu-k-kuṉṟam)

ஓம் சத்திய வாக்குப் பிள்ளையார் போற்றி Ōm Sattiya vākku-p Piḷḷaiyār Pōṟṟi

(திருஆக்கூர். Tiru ākkūr)

ஓம் சந்தான கணபதி போற்றி Ōm Sandāṉa Gaṇapati Pōṟṟi 40

(திருஇராமேச்சுரம். Tiru-irāmēccuram)

ஓம் சாமகானம் கேட்ட விநாயகர் போற்றி Ōm Sāma gāṉam kēṭṭa Vināyahar Pōṟṟi

(திருஅன்பிலாலந்துறை. Tiru-aṉbilālantuṟai)

ஓம் சித்தாத்திரி விநாயகர் போற்றி    Ōm Siddātri Vināyahar Pōṟṟi
(திருக்கழுக்குன்றம். Tiru-k-kaḻu-k-kuṉṟam)

ஓம் சித்தி புத்தி விநாயகர் போற்றி    Ōm Siddi buddi Vināyahar Pōṟṟi
(திருஅச்சிறுபாக்கம். Tiruacciṟupākkam)

ஓம் சிந்தாமணி கணபதி போற்றி    Ōm Sindāmaṇi Gaṇapati Pōṟṟi
(திருநீடூர். Tirunīḍūr)

ஓம் சிவலோக விநாயகர் போற்றி    Ōm Sivalōha Vināyahar Pōṟṟi
(திருக்கோளிலி, திருநீடூர். Tiru-k-kōḷili, Tirunīḍūr)

ஓம் சிற்றம்பல விநாயகர் போற்றி    Ōm Siṟṟambala Vināyahar Pōṟṟi
(திருப்பாம்புரம். Tiru-p-pāmburam)

ஓம் சின்மயானந்த கணபதி போற்றி    Ōm Siṉmayāṉanda Gaṇapati Pōṟṟi
(திருநீடூர். Tirunīḍūr)

ஓம் சுந்தர கணபதி போற்றி    Ōm Sundara Gaṇapati Pōṟṟi
(திருக்காளத்தி, திருக்கீழ்வேளூர், சிக்கல், திருநாவலூர், திருமழபாடி. Tiru-k-kāḷatti, Tiru-k-kīḻ-vēḷūr, Sikkal, Tirunāvalūr, Tirumaḻapāḍi)

ஓம் சொர்ண விநாயகர் போற்றி    Ōm Sorṇa Vināyahar Pōṟṟi
(திருநள்ளாறு, திருப்பட்டீச்சுரம். Tirunaḷḷāṟu, Tiru-p-paṭṭīccuram)

ஓம் சூதவன விநாயகர் போற்றி    Ōm Sūdavaṉa Vināyahar Pōṟṟi    50
(திருவுசாத்தானம். Tiruvusāttāṉam)

ஓம் செங்கழுநீர் விநாயகர் போற்றி    Ōm Seṅgaḻu nīr Vināyahar Pōṟṟi
(திருவானைக்கா, திருப்பறியலூர் வீரட்டம். Tiruvāṉaikka, Tiruppaṟiyalūr Vīraṭṭam)

ஓம் செல்வ விநாயகர் போற்றி    Ōm Selva Vināyahar Pōṟṟi
(திருவெறும்பியூர், திருவையாறு, திருமாணிகுழி. Tiruveṟumbiyūr, Tiruvaiyāṟu, Tirumāṇikuḻi)

ஓம் செவி சாய்த்த விநாயகர் போற்றி    Ōm Sevi sāytta Vināyahar Pōṟṟi
(திருஅன்பிலாலந்துறை. Tiru-aṉbilālantuṟai)

ஓம் செவ்வந்தி விநாயகர் போற்றி    Ōm Sevvandi Vināyahar Pōṟṟi
(திருச்சிராப்பள்ளி. Tiruccirāppaḷḷi)

ஓம் சொன்னவாறறி விநாயகர் போற்றி    Ōm Soṉṉavāṟaṟi Vināyahar Pōṟṟi
(திருப்பாதிரிப்புலியூர். Tiruppātiri-p puliyūr)

ஓம் தண்டூன்றிய விநாயகர் போற்றி    Ōm Taṇḍūṉṟiya Vināyahar Pōṟṟi
(திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம். Tiru-k-kuḍandai-k-kīḻ-k kōṭṭam)

ஓம் தாலமூல கணபதி போற்றி    Ōm Tālamūla Gaṇapati Pōṟṟi
(திருக்கச்சூர். Tirukkaccūr)

ஓம் தாவர விநாயகர் போற்றி    Ōm Tāvara Vināyahar Pōṟṟi
(திருச்சுழியல். Tiruccuḻiyal)

ஓம் தியாக விநாயகர் போற்றி — Ōm Tiyāha Vināyahar Pōṟṟi

(திருக்கோளிலி. Tirukkōḷili)

ஓம் துணைவந்த விநாயகர் போற்றி — Ōm Tuṇai vanda Vināyahar Pōṟṟi 60

(திருவாவடுதுறை, திருத்துருத்தி. Tiruvāvaḍutuṟai, Tirutturutti)

ஓம் துவிபுஜ விநாயகர் போற்றி — Ōm Tuvi buja Vināyahar Pōṟṟi

(திருக்கோகர்ணம். Tiru-k-kōkarṇam)

ஓம் நட்டுவன் பிள்ளையார் போற்றி — Ōm Naṭṭuvaṉ Piḷḷaiyār Pōṟṟi

(திருவாஞ்சியம். Tiruvāñjiyam)

ஓம் நரமுகப் பிள்ளையார் போற்றி — Ōm Naramuha-p Piḷḷaiyār Pōṟṟi

(திருச்சத்திமுற்றம், தில்லை. Tiruccatti muṟṟam, Tillai)

ஓம் நாகாபரணப் பிள்ளையார் போற்றி — Ōm Nāhābaraṇa-p Piḷḷaiyār Pōṟṟi

(திருநாகைக் காரோணம். Tirunāhai-k kārōṇam)

ஓம் நிருதி விநாயகர் போற்றி — Ōm Nirudi Vināyahar Pōṟṟi

(திருமுருகன்பூண்டி. Tirumuruhaṉ pūṇḍi)

ஓம் நிருத்த கணபதி போற்றி — Ōm Nirutta Gaṇapati Pōṟṟi

(திருக்குடமுக்கு, திருமண்ணிப்படிக்கரை, திருப்பழுவூர், திருக்காளத்தி, தில்லை, மயிலாப்பூர். Tiru-k-kuḍamūkku, Tirumaṇṇi-p paḍi-k-karai, Tiruppaḻuvūr, Tiru-k-kāḷatti, Tillai, Mayilāppūr)

ஓம் பஞ்சசந்தி விநாயகர் போற்றி — Ōm Pañja sandi Vināyahar Pōṟṟi

(திருக்காளத்தி. Tiru-k-kāḷatti)

ஓம் படிக்காசு விநாயகர் போற்றி — Ōm Paḍi-k-kāsu Vināyahar Pōṟṟi

(திருஅம்பர்ப் பெருந்திருக்கோயில், திருவீழிமிழலை. Tiruambar, Tiruvīḻi miḻalai)

ஓம் பதரி விநாயகர் போற்றி — Ōm Padari Vināyahar Pōṟṟi

(திருக்கீழ்வேளூர். Tiru-k-kīḻ vēḷūr)

ஓம் பாதாள விநாயகர் போற்றி — Ōm Pādāḷa Vināyahar Pōṟṟi 70

(திருக்காளத்தி. Tiru-k-kāḷatti)

ஓம் பால கணபதி போற்றி — Ōm Bāla Gaṇapati Pōṟṟi

(திருக்காளத்தி, திருமாற்பேறு. Tiru-k-kāḷatti, Tirumāṟpēṟu)

ஓம் பிரகாசப் பிள்ளையார் போற்றி — Ōm Prahāsa-p Piḷḷaiyār Pōṟṟi

(திருச்செம்பொன்பள்ளி. Tiruccemboṉpaḷḷi)

ஓம் பிரசன்ன விநாயகர் போற்றி — Ōm Prasaṉṉa Vināyahar Pōṟṟi

(திருவானைக்கா, வட திருமுல்லைவாயில். Tiruvāṉaikkā, Tirumullaivāyil (N)

ஓம் பிரணவ கணபதி போற்றி — Ōm Praṇava Gaṇapati Pōṟṟi

(திருக்கடவூர் மயானம். Tiru-k-kaḍavūr mayāṉam)

ஓம் பிரளயங்காத்த பிள்ளையார் போற்றி Ōm Praḷayam kātta Piḷḷaiyār Pōṟṟi
(திருப்புறம்பயம். Tiruppuṟambayam)

ஓம் பிள்ளைத்துண்டு விநாயகர் போற்றி Ōm Piḷḷai-t-tuṇḍu Vināyahar Pōṟṟi
(திருநெல்வேலி. Tirunelvēli)

ஓம் பெரியானைக் கணபதி போற்றி Ōm Periyāṉai-k Gaṇapati Pōṟṟi
(திருக்கோவலூர். Tiru-k-kōvalūr)

ஓம் பொய்யா விநாயகர் போற்றி Ōm Poyyā Vināyahar Pōṟṟi
(திருக்கொள்ளம்பூதூர், திருநல்லூர்ப் பெருமணம், திருமாகறல். Tiru-k-koḷḷam pūdūr, Tirunallūr-p perumaṇam, Tirumāhaṟal)

ஓம் பொல்லாப் பிள்ளையார் போற்றி Ōm Pollā-p Piḷḷaiyār Pōṟṟi
(திருநாரையூர், திருநாவலூர், திருப்புத்தூர், திருவெண்ணெய் நல்லூர். Tirunāraiyūr, Tirunāvalūr, Tirupputtūr, Tiruveṇṇai nallūr)

ஓம் மங்கள விநாயகர் போற்றி Ōm Maṅgaḷa Vināyahar Pōṟṟi 80
(திருச்சிறுகுடி, திருச்செங்காட்டங்குடி, திருமங்கலக்குடி. Tirucciṟukuḍi, Tirucceṅgāṭṭaṅkuḍi, Tirumangalakkuḍi)

ஓம் மணிமந்திர விநாயகர் போற்றி Ōm Maṉi mandira Vināyahar Pōṟṟi
(திருப்பூவணம். Tiruppūvaṉam)

ஓம் மதவாரணப் பிள்ளையார் போற்றி Ōm Madavāraṇa-p Piḷḷaiyār Pōṟṟi
(திருப்பட்டீச்சுரம். Tiru-p-paṭṭīccuram)

ஓம் மழுப் பொறுத்த விநாயகர் போற்றி Ōm Maḻu-p poṟutta Vināyahar Pōṟṟi
(திருநாகேச்சுரம். Tirunāhēccuram)

ஓம் மாங்கனிப் பிள்ளையார் போற்றி Ōm Māṅgaṉi-p Piḷḷaiyār Pōṟṟi
(திருக்கடிக்குளம். Tirukkaḍikkuḷam)

ஓம் மாணிக்க விநாயகர் போற்றி Ōm Māṇikka Vināyahar Pōṟṟi
(திருச்சிராப்பள்ளி. Tiruccirāppaḷḷi)

ஓம் மால் துயர் தீர்த்த விநாயகர் போற்றி Ōm Māl tuyar tīrtta Vināyahar Pōṟṟi
(திருஆமாத்தூர். Tiru-āmāttūr)

ஓம் மாற்றுரைத்த விநாயகர் போற்றி Ōm Māṟṟuraitta Vināyahar Pōṟṟi
(திருவாரூர், திருப்பனையூர், திருமுதுகுன்றம். Tiruvārūr, Tiruppaṉaiyūr, Tirumudukuṉṟam)

ஓம் முகூர்த்த விநாயகர் போற்றி Ōm Muhūrtta Vināyahar Pōṟṟi
(திருவேடகம். Tiruvēḍaham)

ஓம் முக்குறுணி விநாயகர் போற்றி Ōm Mukkuṟuṇi Vināyahar Pōṟṟi

(திருஆலவாய், தில்லை, திருமயிலாடுதுறை, திருமறைக்காடு. Tiru-ālavāy, Tillai, Tirumayilāḏutuṟai, Tirumaṟaikkāḏu)

ஓம் முத்து விநாயகர் போற்றி — Ōm Muttu Vināyahar Pōṟṟi — 90

(திருமருகல். Tirumaruhal)

ஓம் மூலாதாரக் கணபதி போற்றி — Ōm Mūlādāra Gaṇapati Pōṟṟi

(திருவாரூர். Tiruvārūr)

ஓம் வண்டுவன விநாயகர் போற்றி — Ōm Vaṇḍuvaṉa Vināyahar Pōṟṟi

(திருக்கழுக்குன்றம். Tiru-k-kaḻu-k kuṉṟam)

ஓம் வயிறுதாரிப் பிள்ளையார் போற்றி — Ōm Vayiṟudāri-p Piḷḷaiyār Pōṟṟi

(திருஓணகாந்தன்தளி. Tiru-ōṇakāndaṉtaḷi)

ஓம் வலம்புரி விநாயகர் போற்றி — Ōm Valamburi Vināyahar Pōṟṟi

(திருஅறையணி நல்லூர், திருமண்ணிப்படிக்கரை, திருவாளொளிபுத்தூர், திருக்கொள்ளம்பூதூர். Tiruaṟaiyaṇi nallūr, Tirumaṇṇi-p paḍi-k-karai, Tiruvāḷoḷi puttūr, Tiru-k-koḷḷam pūdūr)

ஓம் வல்லபை விநாயகர் போற்றி — Ōm Vallabai Vināyahar Pōṟṟi

(திருவன்பார்த்தான் பனங்காட்டூர், திருமாற்பேறு. Tiruvaṉpārttāṉ paṉaṅkāṭṭūr, Tirumāṟpēṟu)

ஓம் வழிகாட்டி விநாயகர் போற்றி — Ōm Vaḻihaṭṭi Vināyahar Pōṟṟi

(திருப்புக்கொளியூர் அவிநாசி. Tiruppukkoḷiyūr Avināsi)

ஓம் வழித்துணை விநாயகர் போற்றி — Ōm Vaḻi-t-tuṇai Vināyahar Pōṟṟi

(திருநல்லூர்ப் பெருமணம். Tirunallūr-p perumaṇam)

ஓம் வாதாபி விநாயகர் போற்றி — Ōm Vādābi Vināyahar Pōṟṟi

(திருப்புகலூர், திருச்செங்காட்டங்குடி, திருவாரூர். Tiruppuhalūr, Tiruccengaṭṭaṅkuḍi, Tiruvārūr)

ஓம் விகடசக்கர விநாயகர் போற்றி — Ōm Vihaḍa sakkara Vināyahar Pōṟṟi

(திருக்கச்சி ஏகம்பம். Tiru-k-kacci Ēhambam)

ஓம் விடந்தீர்த்த பிள்ளையார் போற்றி — Ōm Viḍam tīrtta Piḷḷaiyār Pōṟṟi — 100

(திருமருகல். Tirumaruhal)

ஓம் விபூதி கணபதி போற்றி — Ōm Vibūdi Gaṇapati Pōṟṟi

(திருஆலவாய். Tiru-alavāy)

ஓம் வினை தீர்த்த விநாயகர் போற்றி — Ōm Viṉai tīrtta Vināyahar Pōṟṟi

(திருப்பெண்ணாகடம். Tiru-p-peṇṇāhaḍam)

ஓம் விஜய கணபதி போற்றி — Ōm Vijaya Gaṇapati Pōṟṟi

(திருவான்மியூர். Tiruvāṉmiyūr)

ஓம் வீதி விடங்க விநாயகர் போற்றி Ōm Vīdi viḍaṅga Vināyahar Pōṟṟi

(திருவாரூர். Tiruvārūr)

ஓம் வீரஹத்தி சேத விநாயகர் போற்றி Ōm Vīrahatti sēda Vināyahar Pōṟṟi

(திருமறைக்காடு.Tirumaṟaikkāḍu)

ஓம் வெள்ளை வாரணப் பிள்ளையார் போற்றி

Ōm Veḷḷai vāraṇa-p Piḷḷaiyār Pōṟṟi

(திருஇடும்பாவனம், திருப்பழையாறை வடதளி, திருவலஞ்சுழி. Tiruiḍumbāvaṉam, Tiru-p-paḻaiyāṟai vaḍataḷi, Tiruval ñjuḻi)

ஓம் வேண்டும் விநாயகர் போற்றி Ōm Vēṇḍum Vināyahar Pōṟṟi

(திருச்செங்காட்டங்குடி. Tirucceṅgāṭṭaṅkuḍi)

ஓம் வேத விநாயகர் போற்றி Ōm Vēda Vināyahar Pōṟṟi 108

(திருவேதிகுடி. Tiruvēdikuḍi)

திருச்சிற்றம்பலம் Tirucciṟṟambalam

***Before you were born,***
***God planned this moment in your life.***
***Your birth was no mistake or mishap,***
***and your life is no fluke of nature.***
***Your parents may not have planned you,***
***but God did.***
***He was not at all surprised by your birth;***
***In fact He expected it.***
***He deliberately chose your race,***
***the colour of your skin, your hair,***
***and every other feature.***
***He also determined the natural talents***
***you would possess***
***and the uniqueness of your personality.***
***Because God made you for a reason,***
***He also decided when you would be born***
***and how long you would live.***
***He planned the days of your life in advance***
***choosing the exact time of your birth and death.***



(ஸ்ரீலயன் சித்தி விநாயகர்
- சிங்கப்பூர்)

(நன்றி: ஸ்ரீலயன் சித்தி விநாயகர் கோயில் மலர்)

ஸ்ரீ ஆத்யந்தப் பிரபு

(ஆனைமுக - அனுமான்)

(நன்றி: RARE & DIVINE)

# பாமாலை

3. **தோத்திரங்களில் தொப்பையப்பன்:**
*(திருமுறைப் பாடல்களில் தெய்வக் குழந்தை)*



(நால்வர் பெருமக்கள், தாங்கள் அருளிய முதல் எட்டுத் திருமுறைகளில், அம்பிகை - விநாயகர் - முருகன் - காலபைரவர் போன்றவர்களைக் குறிப்பிட்டிருந்தாலும், பரசிவத்துடன் தொடர்பு படுத்தி மட்டுமே அவர்களைப் பாடியுள்ளனரே தவிர, அந்த மூர்த்தங்களை நேரடியாகப் பாடிப் பரவவில்லை. இருப்பினும், திருமுறை பாடும் நேரத்தில் விநாயகருக்குரிய பாடல்களாக மேற்காண்பது போன்ற சில பாடல்களைப் பாடுவது மரபாகிவிட்டது. அந்த அடிப்படையில் இங்கும் அவற்றில் சில பாடல்கள் இணைத்துக் கொள்ளப் பெற்றுள்ளன.)

**பிடியதன் உரு-உமை கொள,மிகு கரியது**
**வடிகொடு, தனது-அடி வழிபடும் அவர்-இடர்**
**கடி-கண பதி-வர அருளினன், மிகு-கொடை**
**வடிவினர் பயில்-வலி வலம்-உறை இறையே**

*-1:123:5* (1)

*(வள்ளல்தன்மை மிகுந்த பெருமக்கள் வாழ்வது திருவலிவலம் என்னும் திருத்தலம் (வள்ளல்தன்மை மிக்க திருவலிவலத்து இறைவன் என்றும் பொருள் காண்பது உண்டு); அங்கு வீற்றிருக்கும் இறைவன், உமையம்மை பெண்யானை வடிவு கொண்டபோது, தான் ஆண்யானையின் வடிவத்தை ஏற்றான்; அந்த நேரத்தில், தன் திருவடிகளை வழிபடும் அடியாரின் இடர்களைக் களையும் பொருட்டு அவன் கணபதியைத் தோற்றுவித்து அருளினன்)*

Piḍiyadaṉ uru Umai koḷa, mihu kariyadu
vaḍikoḍu, taṉadu aḍi vaḻipaḍum avar iḍar
kaḍi Gaṇapati vara aruḷiṉaṉ, mihu koḍai
vaḍiviṉar payil Valivalam uṟai Iṟaiyē.

**செற்றிட்டே வெற்றிச்சேர் திகழ்ந்த-தும்பி, மொய்ம்புறும்**
**சேரே-வாரா, நீள்-கோதைத் தெரியிழை பிடியதுவாய்,**
**ஒற்றைச்-சேர் முற்றல்-கொம்பு உடைத்-தடக்கை, முக்கண்,மிக்கு**
**ஓவாதே-பாய் மாதானத்து உறு-புகர் முக-இறையைப்**
**பெற்றிட்டே, மற்று-இப்பார் பெருத்து-மிக்க துக்கமும்,**
**பேரா-நோய்-தாம் ஏயாமைப் பிரிவு-செய்த வனது-இடம்,**
**கற்றிட்டே எட்டெட்டுக் கலைத்துறைக் கரைச்-செலக்**
**காணாதாரே சேரா-மெய்க் கழுமல வள-நகரே.**

*-1:126:6* (2)

*The books that help you most are those which make you to think most.*
*- T. Parker*

*(அசுரர்களைக் கொன்று வெற்றி பெற்று விளங்கும் வலிமை பொருந்திய ஆண்யானை உருக் கொண்டிருந்தார் சிவபரம்பொருள்; அவரைக் கூடும் பொருட்டு, நீண்ட மலர்மாலை அணிந்த உமையம்மை பெண்யானை வடிவு கொண்டனர்; அவர்களின் இணைவால் வலிமை வாய்ந்த ஒரு கொம்பையும், நீண்ட கையையும் (தும்பிக்கை), மூன்று கண்களையும், இடைவிடாது பொழியும் மதநீரையும், புள்ளிகள் பொருந்திய முகத்தையும் உடைய விநாயகர் தோன்றினார்; அந்த ஆனைமுகர் அவதாரத்தின்வழி, உலக மக்களுக்குப் பெருந் துன்பங்களும், நோய்களும் ஏற்படாதவாறு சிவபெருமான் காத்தருளினார்; அப்பரம்பொருள் வீற்றிருப்பது கழுமல வளநகராகும் (சீகாழி); அந்நகரில், அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுணர்ந்து ஒழுகுவோர் உறைகின்றனர்; அவ்வாறு கற்றுக் கரை காணாதார் உறைய இயலாதது அந்நகர்)*

Seṟṟiṭṭē veṟṟi-c-cēr tihaḻnda tumbi, moymbuṟum
sērē vārā, nīḷ kōdai-t teri-iḻai piḍiyaduvāy,
oṟṟai-c cēr muṟṟal kombuḍai-t taḍakkai, mukkaṇ, mikku
ovādē pāy mādānattu uṟu puhar-muha iṟaiyai-p
peṟṟiṭṭē, maṟṟu, ip-pāṟ peruttu mikka tukkamum,
pērā nōy tām ēyāmai-p pirivu seydavaṉadu iḍam,
kaṟṟiṭṭē eṭṭeṭṭu-k kalai tuṟai-k karai-c cela-k
kāṇādārē sērā, mey-k Kaḻumala vaḷa naharē.

கரியின் மாமுகம் உடைய கணபதி தாதை,பல் பூதம்
திரிய, இல்-பலிக்கு ஏகும் செழுஞ்சுடர் சேர்தரு மூதூர்,
சரியின் முன்-கை-நன் மாதர் சதிபட மா-நடம் ஆடி,
உரிய நாமங்கள் ஏத்தும் ஒலி-புனற் காழி-நன் நகரே.

*-2:96:3* (3)

*(அழியாததும், அறிவுடைய ஆன்மாக்களிடம் வளர்வதுமான ஒளி போன்றவர் சிவபெருமான்; அவர் யானை முகத்தோனாகிய கணபதியின் தந்தை; பூதங்கள் சூழ்ந்து வர, இல்லங்கள் தோறும் சென்று பிச்சை ஏற்றுத் திரிபவர்; அவர் எழுந்தருளியுள்ள திருத்தலம், வளையல்களை அணிந்த முன்கைகளை உடைய அழகிய பெண்கள், சிவநாமத்தை ஓதிக்கொண்டு, காலில் தாளத்தட்டு நிற்கச் சிறப்பாக நடனமிடும், நீர்நிலைகள் நிறைந்த (சீ)காழி நகராகும்)*

Kariyiṉ māmuham uḍaiya Gaṉapati tātai, pal būdam
tiriya, ilpalikku ēhum seḻuñsuḍar sēr-taru mūdūr,
sariyiṉ muṉ kai naṉ mādar, sadi paḍa mā-naḍam ādi,
uriya nāmaṅgaḷ ēttum, oli puṉaṟ Kāḻi naṉ naharē.

பலபல காமத்த ராகிப், பதைத்து-எழு வார் மனத்துள்ளே,
கலமலக் கிட்டுத் திரியும் கணபதி என்னும் களிறும்,
வலம்-ஏந்து இரண்டு சுடரும், வான்-கயி லாய மலையும்,
நலமார் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்-நாம்,
அஞ்சுவது யாதொன்றும் இல்லை, அஞ்ச வருவதும் இல்லை.

*-4:2:5* (4)

*(உலக மக்கள் பல வகையான விபரீத ஆசைகளை மனத்திலே வளர்த்துக் கொண்டு, அவற்றைச் செயற்படுத்த விரைகின்றனர்; அதிகை வீரட்டத்து இறைவனை வழிபடுவோரின் உள்ளங்களில் கணபதி என்னும் ஆண் யானை இருந்து, அந்தத் தவறான ஆசைகளைப் பிறழச் செய்கிறது. புற இருளை மட்டுமன்றி அகவிருளையும் போக்கும் ஆற்றல் மிக்கவை சூரிய-சந்திரர் ஆகிய இரு கதிர்கள். இவ்வாறு விநாயகரையும், இரு கதிர்களையும், மேம்பட்ட கயிலை மலையையும், நன்மைகள் நிறைந்த கெடில ஆற்றின் தீர்த்தத்தையும் கொண்டிருப்பவர் அதிகை வீரட்டானர். அவருடைய அடியார் யாம்; ஆதலால் எமக்கு அஞ்சுதற்கு உரிய பொருள் யாதும் இப்போதும் இல்லை; இனித் தோன்றப் போவதும் இல்லை)*

Pala pala kāmattarāhi-p, padaittu eḻuvār maṉattuḷḷē,
kala malakkiṭṭu-t tiriyum Gaṇapati eṉṉum kaḷiṟum,
valam ēndu iraṇḍu suḍarum, vāṉ Kayilāya malaiyum,
nalamār Keḍila-p puṉalum uḍaiyār oruvar tamar nām,
añjuvadu yādoṉṟum illai, añja varuvadum illai.

நார ணன்னொடு, நான்முகன், இந்திரன்,
வார ணன்,கும ரன்-வணங் கும்-கழற்
பூர ணன்,திருப் பூவனூர் மேவிய
கார ணன்,எனை ஆளுடைக் காளையே.

*-5:65:10* (5)

*(திருமால், பிரமன், இந்திரன், விநாயகர், முருகன் ஆகியோர் வணங்கும் திருப்பாதங்களை உடையவன் திருப்பூவனூரில் உறையும் தேவதேவனான சிவபெருமான்; அவனே எல்லாவற்றுக்கும் முதற்காரணமானவன்; என்னை ஆளுடைய காளை போன்றவனும் அவ்விறைவனே)*

Nāraṇaṉṉoḍu Nāṉmuhaṉ, Indiraṉ,
Vāraṇaṉ, Kumaraṉ vaṇaṅgum kaḻaṟ-
pūraṇaṉ, Tiru-p-pūvaṉūr mēviya
kāraṇaṉ, eṉai āḷuḍai-k kāḷaiyē.

முந்தை-காண், மூவரினும் முதலா னான்-காண்,
மூவிலை-வேல் மூர்த்தி-காண், முருக வேட்குத்
தந்தை-காண், தண்-கடமா முகத்தி னாற்குத்
தாதை-காண், தாழ்ந்து-அடியே வணங்கு வார்க்குச்
சிந்தை-காண், சிந்தாத சித்தத் தார்க்குச்
சிவனவன்-காண், செங்கண்-மால் விடை-ஒன்று ஏறும்
எந்தை-காண், எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்,அவன்-என் எண்ணத் தானே.

*-6:65:9* (6)

*(அழகு நிறைந்த சோலைகள் சூழ்ந்த கச்சி ஏகம்பத்தில் உறையும் இறைவன், யாவரினும் முற்பட்டவன்; அயன் - அரி - அரன் என்னும் மூவருள்ளும் முதலானவன் (தலைவன்) (அல்லது அம்மும்மூர்த்திகளிலும் வேறுபட்டு நின்று, அவர்களது தோற்றத்துக்குக் காரணனாய் இருப்பவன்); முத்தலைச் சூலம் ஏந்தியவன்; முருகப் பெருமான், மற்றும் குளிர்ந்த மதநீரை உடைய யானை முகத்தவரான விநாயகர் ஆகியோரின் தந்தை; தன்னைப் பணிந்து, தன் திருவடிகளையே வணங்குவோரின் சிந்தையில் சிறை வைக்கப்படுபவன்; புறப்*

*பொருள்களிடத்துச் சித்தத்தைச் செலுத்தாத - சிதறாத சிந்தையை உடையோருக்கு இன்ப வடிவாகக் காட்சி தருபவன்; செங்கண்ணனாகிய திருமாலைக் காளை வாகனமாகக் கொண்டிருப்பவன்; அவ்விறைவன் - கச்சி ஏகம்பன், என் எண்ணத்தில் நீங்காது நிறைந்திருக்கின்றான்)*

Mundai kāṇ, mūvariṉum mudalāṉāṉ kāṇ,
mūvilai vēl mūrtti kāṇ, Muruha vēṭku-t
tandai kāṇ, taṇ kaḍa-mā muhattiṉāṟkku-t
tādai kāṇ, tāḻndu aḍiyē vaṇaṅguvārkku-c
cindai kāṇ, sindāta sittattārkku
Sivaṉavaṉ kāṇ, seṅgaṇ Māl viḍai oṉṟu ēṟum
endai kāṇ, eḻilārum poḻilār Kacci
Ēhambaṉ kāṇ, avaṉ eṉ eṇṇattāṉē.

பொருந்தாத செய்கை பொலியக் கண்டேன்,
போற்றி-இசைத்து விண்ணோர் புகழக் கண்டேன்,
பரிந்தார்க்கு அருளும் பரிசும் கண்டேன்,
பாராகிப் புனலாகி நிற்கை கண்டேன்,
விருந்தாய்ப் பரந்த தொகுதி கண்டேன்,
மெல்லியலும் விநாயகனும் தோன்றக் கண்டேன்,
மருந்தாய்ப் பிணி-தீர்க்கு மாறு கண்டேன்,
வாய்மூர் அடிகளை-நான் கண்ட வாறே.

*-6:77:8* (7)

*(நஞ்சு உண்ணுதல், எலும்பும் தலைமாலையும் பூணுதல், தலைஓட்டில் பிச்சை ஏற்றல், பாம்பணிதல் போன்ற உலகத்தாருக்கு ஒவ்வாத செயல்களைத் தம்பால் கொண்டவர்; போற்றி போற்றி என்று கூறி (அல்லது போற்றுதலாகிய சொற்களைச் சொல்லி) விண்ணோர் புகழும் வண்ணம் விளங்குபவர்; தம்மிடத்து அன்பு செய்வோருக்கு அருள் புரிபவர்; நிலனொடு நீராய் (ஏனைய பூதங்களுமாகி) நிற்பவர்; வேறிடங்களில் காணப்படாது நிறைந்து நிற்கும் பூத கணங்களிடையே திகழ்பவர்; மெல்லியலாகிய உமையம்மையையும், விநாயகனையும் முறையே மனைவியாகவும் மகனாகவும் உறவுமுறை கொண்டவர்; நோய் களையும் மருந்தாய்த் திகழ்பவர்; இத்தன்மைகள் நிறைந்த சிவபரம்பொருள் வாய்மூர்த் தலத்தில் வீற்றிருக்கக் கண்டேன்)*

Porundāta seyhai poliya-k kaṇḍēṉ,
pōṟṟi isaittu viṇṇōr puhaḻa-k kaṇḍēṉ,
parindārkku aruḷum parisum kaṇḍēṉ,
pārāhi-p puṉalāhi niṟkkai kaṇḍēṉ,
virundāy-p paranda tohudi kaṇḍēṉ,
melliyalum Vināyahaṉum tōṉṟa-k kaṇḍēṉ,
marundāy-p piṇi tīrkkumāṟu kaṇḍēṉ,
Vāymūr aḍihaḷai nāṉ kaṇḍavāṟē.

**கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலும்,**
**கயாசுரனை அவனால்-கொல் வித்தார் போலும்,**
**செய்-வேள்வித் தக்கனை-முன் சிதைத்தார் போலும்,**
**திசைமுகன்-தன் சிரம்-ஒன்று சிதைத்தார் போலும்,**
**மெய்-வேள்வி மூர்த்தி-தலை அறுத்தார் போலும்,**
**வியன்-வீழி மிழலை-இடம் கொண்டார் போலும்,**
**ஐ-வேள்வி, ஆறங்கம் ஆனார் போலும்,**
**அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.**

*-6:53:4* (8)

*(பெருமை மிகுந்த திருவீழிமிழலைத் தலத்தில் உறையும் (சிவ)பெருமான் அடியேனை ஆட்கொண்ட அடிகள் ஆவர்; அவர், (தும்பிக்)கையை உடையதாகிய வேழமுகத்து விநாயகக் கடவுளைப் படைத்து, அவர்வழி கய(முக)ாசுரனை அழித்தவர்; முன்னொரு நாள் தம்மை மதியாது வேள்வி செய்த தக்கனை அழித்து, அவன் இயற்றிய வேள்வியைச் சிதைத்தவர்; திசைமுகனான பிரமனின் ஐந்து தலைகளில் ஒன்றை அறுத்தவர்; யாகதேவன் தலையை அறுத்தவர்; பிரம யாகம், தேவ யாகம், மானுட யாகம், பூத யாகம், பிதிர் யாகம் என்னும் வைதிக வேள்விகள் (அல்லது கன்ம வேள்வி, தவ வேள்வி, செப வேள்வி, தியான வேள்வி, ஞான வேள்வி எனும் சைவ வேள்விகள்) ஐந்தாகவும், வேதங்களின் ஆறு அங்கங்களாகவும் உள்ளவர்)*
<u>விளக்கம்</u> : பிரம யாகம் - வேதம் ஓதுதல்; தேவ யாகம் - வழிபாடு செய்தல்; மானுட யாகம் - விருந்தோம்பல்; பூத யாகம் - உயிர்களிடத்து இரக்கம் கொண்டு உணவிடுதல்; பிதிர் யாகம் - தென்புலத்தார் கடன் தீர்த்தல்.

கன்ம வேள்வி - வைதிக முறையில் சொல்லப்பெற்ற ஐவகை வேள்விகளும் சைவ முறையில் கன்ம வேள்வி என ஒன்றாய் அடங்கும்; தவ வேள்வி - சமய தீட்சை, விசேட தீட்சை என்னும் இரு வகைத் தீட்சைகளின்வழி, சரியை - கிரியை - யோகம் என்னும் மூன்று நெறிகளிலும் நிற்றல்; செப வேள்வி - அத்தீக்கைகளில் பெற்ற முறையில் திருவைந்தெழுத்தைச் செபித்தல்; தியான வேள்வி - அச்செபத்தின்வழி சிவபெருமானின் உருவம் - அருவுருவம் - அருவம் என்னும் மூவகைத் திருமேனிகளைத் தியானித்தல்; ஞான வேள்வி - ஞான நூல்களை ஓதுதல், ஓதுவித்தல், கேட்பித்தல், நல்லாசிரியர்வழி அந்நூல்களின் நுண்பொருளை உணர்தல், பின்னர் அவற்றைச் சிந்தித்தல்.

ஆறங்கம் - வேதத்திற்குரிய ஆறு அங்கங்கள்; அவையாவன: சிட்சை(வேதத்தை ஓதும் ஒலி வகையை விளக்குவது), வியாகரணம் (இலக்கணம்), நிருத்தம் (மொழி நூல்), சோதிடம் (காலநிலை கூறுவது), கற்பம் (சடங்குமறைகளைக் கூறுவது), சந்தோவிசிதி (இசையமைப்பை விளக்குவது)

Kai Vēla muhattavaṉai-p paḍaittār pōlum,
Gayāsuraṉai avaṉāl kolvittār pōlum,
sey vēḷvi-t Takkaṉai, muṉ sitaittār pōlum,
Tisaimuhaṉ-taṉ siram oṉṟu sitaittār pōlum,
mey-vēḷvi mūrtti talai aṟuttār pōlum,
viyaṉ Vīḻimiḻalai iḍam koṇḍār pōlum,
ai-vēḷvi, āṟaṅgam āṉār pōlum,
aḍiyēṉai āḷuḍaiya aḍihaḷ tāmē.

திங்கள் தங்கு சடையின் மேல்-ஓர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கை யாளேல் வாய்-தி றவாள்,
கணப தியேல் வயிறு தாரி,
அங்கை வேலோன் குமரன் பிள்ளை,
தேவி யார்-கோல் தட்டி ஆளார்,
உங்க ளுக்கு-ஆட் செய்ய மாட்டோம்
ஓண காந்தன் தளி-உ ளீரே.

-7:5:2 (9)

*(காஞ்சிபுரத்தில் உள்ள திருவோணகாந்தன்தளி என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமானே! பிறை தங்குமாறு சேர்த்துக் கட்டப்பெற்றது உமது சடாமுடி; அதில் ஒப்பற்ற அலைகள் புரள்கின்ற கங்கையைக் கரந்து வைத்துள்ளீர்; அந்தக் கங்கை என்னும் தேவி, உம்மைவிட்டு அகலாதிருக்கும் உமாதேவியாருக்கு அஞ்சி, ஒருபோதும் வாய் திறக்கவே மாட்டார்; உம் மூத்த பிள்ளையாகிய கணபதி, வயிறு ஒன்றையே முதன்மையாகக் கொண்டவன் (பிறிதொன்றையும் அவன் அறிய மாட்டான்); கையில் வேலேந்திய உம் இளைய மகனாகிய முருகனோ விளையாட்டுப் பிள்ளை (வேறு எதனையும் அவன் பேண மாட்டான்); உம் தேவியாகிய உமையம்மையோ உம் ஆணையைக் கடந்து அடியாரை ஆட்கொள்ள மாட்டார் (உம்மைத் தவிர அடியாரை அவர் ஆள்வாரல்லர்); நீரோ அடியவர் கூறும் குறைகளைக் கேட்டு அருள் புரிய மாட்டீர்; ஆதலின், உம் குடிக்கு நாங்கள் அடிமையாக மாட்டோம்; (உம் குடும்பத்தைப் புகழ்வதற்கு என்ன இருக்கிறது என்று இறைவனைக் கேட்பது போல இப்பாடல் அமைந்துள்ளது)*

இப்பாடல் அடங்கிய திருப்பதிகம் (பதிக எண் 5), இறைவனிடத்து அடியாருக்குள்ள உரிமையைப் புலப்படுத்துவதாக அமைந்தது; இதனைப் **புகழாப்புகழ்ச்சி** (நிந்தாஸ்துதி, பழிப்பது போலப் புகழும் அணி, a figure of speech, containing praise couched in terms of apparent censure) என்பர். ஆரூரரால், இறைவனைப் பழிப்பது போலப் புகழ்ந்து பாடப்பெற்றது இப்பாடல்)

Tiṅgaḷ taṅgu saḍaiyiṉ mēlōr
tiraihaḷ vandu puraḷa vīsum
Gaṅgaiyāḷēl vāy tiṟavāḷ,
Gaṇapatiyēl vayiṟutāri,
aṅgai vēlōṉ Kumaraṉ piḷḷai,
Deviyār kōl taṭṭi āḷār,
uṅgaḷukku āṭ seyya māṭṭōm,
Ōṇakāndaṉtaḷi uḷīrē.

தனதன்-நற் றோழா! சங்கரா! சூல-
பாணியே! தாணுவே! சிவனே!
கனக-நற் றூணே! கற்பகக் கொழுந்தே!
கண்கள்-மூன்று உடையதோர் கரும்பே!
அனகனே! குமர, விநாயக சனக!
அம்பலத்து அமரர்-சே கரனே!
நுன-கழல் இணை-என் நெஞ்சினுள் இனிதாத்,
தொண்டனேன் நுகருமா நுகரே.

*-9:1:7(திருவிசைப்பா)* (10)

*(குபேரனின் தோழனே! எல்லா உயிர்களுக்கும் இன்பம் தருபவனே! சூலத்தைக் கையில் ஏந்தியவனே! எப்போதும் நிலைபெற்று இருப்பவனே! மங்கள வடிவினனே! பொன் மயமான பெரிய தூண் போல்பவனே! கற்பக மரத்தின் கொழுந்து போன்றவனே! முக்கண்ணனே! கரும்பு போல இனிமையானவனே! பாவம் (வினைத் தொடக்கு) இல்லாதவனே! முருகனுக்கும் விநாயகனுக்கும் தந்தையே ! பொன்னம்பலத்தில் ஆடுபவனே! தேவர் கூட்டத்திற்கு மகுடம் போன்றவனே! உன் திருவடிகளை எளியேன் உள்ளத்தில் இனிமையாக அடியேன் அனுபவிக்குமாறு அருள் புரிவாயாக!)*

(உமது அங்கங்களில் யோகீஸ்வரர்களுக்கு மிக இனியதும், முத்தி எய்தியவர்களின் உறைவிடமாவதும், பக்தர்களுக்கு வேண்டியவற்றைப் பொழியும் கற்பகத்தளிர் போன்றதுமாகிய உமது பாதமூலம் (அடைக்கலமாகக் கருதப்பெறும் இறைவனின் திருவடி), எப்பொழுதும் என் சித்தத்தில் இருந்து, எல்லாத் துன்பங்களையும் போக்கிப், பரமானந்த மோட்சச் செல்வத்தை வழங்கட்டும் - *ஸ்ரீமந் நாராயணீயம்*)

Tanatan narrōlā! Saṅgarā! Sūlapāṇiyē!
tāṇuvē! Sivanē!
kanaka narrūṇē! karppaha-k kolundē!
kaṇgaḷ mūnru udaiyadōr karumbē!
anahanē! Kumara-Vināyaha sanaha!
ambalattu amarar sēharanē!
nuna kalal iṇai, en neñjinuḷ inidā-t,
toṇḍanēn nuharumā nuharē!

குணமணிக் குருளைக், கொவ்வை-வாய் மடந்தை
படும்-இடர் குறிக்-கொளா தழகோ?
மணமணி மறையோர், வானவர், வையம்
உய்ய,மற்று அடியனேன் வாழத்,
திணமணி மாடத் திருவிடைக் கழியில்,
திருக்குரா நீழற்-கீழ் நின்ற
கணமணி பொரு-நீர்க் கங்கை-தன் சிறுவன்,
கணபதி பின்-இளங் கிளையே.

*-9:7:5(திருவிசைப்பா)* (11)

*(உறுதியான அழகிய மாடங்களைக் கொண்டது, திருவிடைக்கழி என்னும் தலம். அங்கு, பெருமை பொருந்திய அந்தணர்களும், தேவர்களும், ஏனைய நிலை உயிர்களும் உய்வு பெறவும், யான் தீங்கின்றி வாழவும், திருக்குரா மர (Webera corymbosa) நிழலில் நின்று அருள் புரிபவன் முருகப் பெருமான்; அவன், இரத்தினங்களை அடித்துக்கொண்டு வரும் நீர்ப்பெருக்கை உடைய கங்கா தேவியின் மகன்; கணபதியின் தம்பி. அந்த முருகன், நற்குணங்களும் அழகும் பொருந்திய என் மகள், அவன் அருள் கிட்டாததால் அடையும் துயரத்தைத் தன் மனத்தில் ஏற்று, அவளுக்கு அருள் புரியாதிருப்பது அழகோ?)*

(இத்தலம் முருகப் பெருமானுக்கு உரியது. கருவறையில் முருகனும், அத்திருமேனிக்குச் சற்று வடமேற்கே இலிங்கத் திருமேனியும் உள்ளன. இத்திருப்பதிகம் சேந்தனார் அருளியது)

Guṇa maṇi-k kuruḷai-k, kovvai vāy maḍandai
padum iḍar kuṟikkoḷā daḻahō?
maṇamaṇi maṟaiyōr, vāṉavar, vaiyam
uyya, maṟṟu aḍiyaṉēṉ vāḻa-t,
tiṇamaṇi māḍa-t Tiruviḍai-k-kaḻiyil,
tiru-k-kurā nīḻaṟ-kīḻ ninra,
kaṇamaṇi poru-nīr Gaṅgai-taṉ siṟuvaṉ,
Gaṇapati piṉ iḷam kiḷaiyē.

(பன்னிரு திருமுறைகளில் பதினொராந் திருமுறையில் மட்டுமே விநாயகர் மீதான மூன்று பிரபந்தங்கள் காணப்பெறுகின்றன. கபிலதேவ நாயனார் அருளிய **மூத்த நாயனார் திருஇரட்டை மணிமாலை**, அதிரா அடிகள் அருளிய **மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை**, நம்பியாண்டார் நம்பிகள் அருளிய **திருநாரையூர் விநாயகர் திருஇரட்டை மணிமாலை** என்பவையே அவை. முதலில் கபிலதேவ நாயனார் (கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டினை அடுத்து வாழ்ந்தவர் என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.) அருளிய **மூத்த நாயனார் திருஇரட்டை மணிமாலையிலிருந்து** சில பாடல்கள்.

**திருவாக்கும், செய்-கருமம் கைகூட்டும், செஞ்சொல்**
**பெருவாக்கும், பீடும்-பெருக்கும், - உருவாக்கும்,**
**ஆதலால், வானோரும் ஆனை முகத்தானைக்**
**காதலால் கூப்புவர்-தம் கை.**

(12)

*(யானைமுகத்து விநாயகரை வழிபட்டால் செல்வம் சேரும்; தொடங்கும் எந்தச் செயலும் இடையூறின்றி இனிதே நிறைவேறும்; வாக்கு வன்மை பெருகும்; பெருமை-புகழ் சேரும்; தோற்றப் பொலிவு ஏற்படும்; ஆதலால் தேவர்களும் தேடி வந்து விநாயகப் பெருமானை விருப்போடு வழிபடுவர்.)*

Tiruvākkum, sey karumam kai-kūṭṭum, señjol
peruvākkum, pīḍum perukkum, uruvākkum,
ādalāl vāṉōrum Āṉai muhattāṉai-k
kādalāl kūppuvar tam kai.

**விநாயகனே வெவ்வினையை வேர்-அறுக்க வல்லான்,**
**விநாயகனே வேட்கை-தணி விப்பான், விநாயகனே**
**விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்,**
**கண்ணிற் பணிமின் கனிந்து.**

(13)

*(விநாயகரைக் கண்டு உளம் உருகி வழிபட்டால், அவர் நம் கொடிய வினைகளை வேரோடு களைவார்; நம் ஆசைகளை நிறைவேற்றுவார் (அல்லது, தவறான ஆசைகளைக் களைவார் என்றும் சொல்லலாம்); விநாயகப் பெருமானே வானுலகிற்கும், மண்ணுலகிற்கும் தலைவருமாவார்; ஆகையால் அவரை மகிழ்வோடு வழிபட்டு உய்வு பெறுங்கள்)*

Vināyahaṉē vev-viṉaiyai vēraṟukka vallāṉ,
Vināyahaṉē vēṭkai taṇivippāṉ, Vināyahaṉē
viṇṇiṟkkum maṇṇiṟkkum nādaṉumām taṉmaiyiṉāl,
kaṇṇir paṇimiṉ kaṉindu.

யானை முகத்தான், பொரு-விடையான் சேய்,அழகார்
மான மணிவண்ணன் மாமருகன், - மேல்-நிகழும்
வெள்ளக் குமிழி மதத்து விநாயகன்,என்
உள்ளக் கருத்தின் உளன்.

(14)

*(வெள்ளம் போன்று மதநீர் வழிந்து ஓடுகின்ற விநாயகப் பெருமான் யானை முகத்தைக் கொண்டவன்; போர் செய்யும் ஆற்றல் மிகுந்த இடப வாகனத்தை உடைய சிவபெருமானின் மகன்; பெருமை மிகுந்த நீலமணி போலும் வண்ணத்தினனான திருமாலின் பெருமைக்குரிய மருமகன் (உடன் பிறந்தாள் மகன்); அந்த விநாயகப் பெருமான் என் உள்ளத்தில் நீங்காது உறைகின்றான் (எந்நேரமும் என்னால் வழிபடப்பெறுபவன் அவ்விநாயகப் பெருமானே ஆவன் என்பது உள்ளுரை)*

Yāṉai muhattāṉ, poru viḍaiyāṉ sēy, aḻahār
māṉa maṇi-vaṇṇaṉ mā-maruhaṉ, mēl nihaḻum
veḷḷa-k kumiḻi madattu Vināyahaṉ, eṉ
uḷḷa-k karuttiṉ uḷaṉ.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவராக நம்பப்பெறும் அதிரா அடிகள் அருளிய மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை என்னும் பிரபந்தத்திலிருந்து சில பாடல்கள்:

மொழியின் மறை-முதலே! முந்நயனத்து ஏறே!
கழிய வரு-பொருளே! கண்ணே! - செழிய
கலாலயனே! எங்கள் கணபதியே! நின்னை
அலால்,ஐயனே! சூழாது-என் அன்பு.

(15)

*(மறைமொழியின் (வேதத்தின்) முதலாக (பிரணவமாக) அமைந்திருப்பவனே! தந்தையைப் போன்று மூன்று கண்களை உடைய ஆண் சிங்கமே! பந்த பாசங்கள் யாவும் நீங்கிய பின்னர் கிடைக்கும் அரிய பொருளே (முழுமுதற் கடவுளே!) கண் போன்று இருந்து எங்களைக் காப்பவனே (எல்லாவற்றையும் எங்களுக்கு அறிவிப்பவனே!) பொருள் நிறைந்த கலைகளுக்கு எல்லாம் இருப்பிடமாய் உள்ளவனே! எங்கள் விநாயகப் பெருமானே! உன்னை அன்றி வேறொருவரிடம் அன்பு செலுத்தி அறியேன்)*

Moḻiyiṉ maṟai mudalē! Muṉ-nayaṉattu ēṟē!
Kaḻiya varu poruḷē! Kaṇṇē! Seḻiya
kalālayaṉē! eñgaḷ Gaṇapatiyē! niṉṉai
alāl, Aiyaṉē! sūḻādu eṉ aṉbu.

**சுடர்ப்பிழம்பு தழைத்த அழல்-தனி நெடுவேற்**
**சேய்,மூ உலகமும் வலம்வர வே,அக்**
**கொன்றையம் படலை துன்று-சடைக்கு அணிந்த**
**ஓங்கிருந் தாதையை வளாஅய், மாங்கனி**
**அள்ளல் தீஞ்சுவை அருந்திய**
**வள்ளற்கு, இங்கு,என் மனம்-கனிந் திடுமே.**

(16)

*(தழல் போலும் ஒளி மிகுந்த சிறப்புடைய நீண்ட வேலைத் தாங்கிய முருகப் பெருமான், தந்தையின் கையில் இருந்த கனியைப் பெற மூவுலகையும் வலம் வந்தார்; ஆனால் பெற்றோரைச் சுற்றி வந்தாலே மூவுலகையும் வலம் வந்ததாகிவிடும் என்பதால்*, கொன்றை மாலை தரித்த சிவபரம்பொருளைச் சுற்றி வந்து அவரது கையிலிருந்த மாங்கனியைப் பெற்றார், அடியார்க்கு அருளும் வள்ளல்தன்மை மிகுந்த ஆனைமுகக் கடவுள்; மாங்கனியின் மதுரத்தைச் சுவைத்த அப்பெருமானுக்கு, ஊனும் உள்ளமும் உருக அடியேன் அன்பு செய்வேன்)*



(* உலகத்தில் பெற்றோரை வலம் வந்து வழிபட்டாலே, பூப்பிரதட்சிணப் (passing round the world from left to right) பலன் கிடைத்துவிடும். வீட்டிலிருக்கும் பெற்றோரை விட்டுவிட்டுத் தீர்த்த யாத்திரை (pilgrimage to sacred bathing-ghats) செய்பவன், தாய்-தந்தையரைக் கொன்ற பாவத்தைத்தான் அடைவான். புதல்வனாக இருப்பவன், தன் பெற்றோரைப் பூசிப்பதே தீர்த்த யாத்திரையின் பலனைத் தந்துவிடும். இவ்வாறு மறைநூல்(வேத-உபநிடத-ஆகமநூல்)களில் கூறப்பெற்றுள்ளது என்று விநாயகப் பெருமான், தம் பெற்றோரிடம் கூறியதாகச் சிவமஹா புராணம் கூறுகிறது. - துர்க்காதாஸ் எஸ்.கே.ஸ்வாமி, *சிவமஹா புராணம்*)

Suḍar-p piḻambu taḻaitta aḻal taṉi neḍu-vēṟ
cēy, mū-ulahamum valam varavē,
ak-koṉṟaiyam paḍalai tuṉṟu saḍaikku aṇinda,
ōṅgirun-tātaiyai vaḷāy, māṅgaṉi
aḷḷal tīñjuvai arundiya
vaḷḷaṟkku, iṅgu, eṉ maṉam kaṉindiḍumē.

**ஏறு தழீஇய-எம் புத்தேள் மருக!எங் கும்-தவள**
**நீறு தழீஇய-எண் தோளவன் செல்வ!வண்டு உண்ண-நெக்க**
**ஆறு தழீஇய கரதலத்து ஐய!நின் தன்னை அல்லால்,**
**வேறு தழீஇத்-தொழு மோ,வணங் காத வியன்-சிரமே?**

(17)

*(நப்பின்னையை மணக்கும் பொருட்டு, அவிழ்த்து விடப்பட்ட காளையை அடக்கி, அவளை மணந்த கண்ணபிரானின் மருகனே! (கண்ணபிரான் திருமால் அவதாரம்; உமையம்மை திருமால்*

*தங்கை; அதன்வழி விநாயகர் கண்ணனின் (திருமாலின்) மருகன் ஆகிறார்.) உடல் முழுவதும் வெண்ணீறு சன்னித்த எண்தோட் செல்வனான சிவபெருமானின் அன்புக்குரிய செல்வனே! வண்டுகள் மொய்க்கும் வகையில் பெருக்கெடுக்கும் மதநீர், காதுகளின்வழி ஒழுகி நனைக்கும் கைகளை உடைய ஐயனே! வேறு யாரையும் வணங்கி அறியாத எம் சிரம், உன்னை அன்றி வேறொரு தெய்வத்தின் முன் தலை தாழ்த்தி வணங்குமோ?)*

**Ēṟu taḻīya em puttēḷ maruha! eṇgum tavaḷa**
**nīṟu taḻīya eṇ tōḷavaṉ selva! vaṇḍu uṇṇa nekka**
**āṟu taḻīya karatalattu aiya! niṉ-taṉṉai allāl**
**vēṟu taḻī-t toḻumō, vaṇaṅgāda viyaṉ siramē?**

நம்பியாண்டார் நம்பிகளுக்குத் திருமுறைகள் இருக்கும் இடத்தைக் காட்டியருளியதாக நம்பப் பெறுபவர், திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார். அவர்மீது, கி.பி. 10 - 11ஆம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தவராகக் கருதப்பெறும் நம்பிகள் அருளிச் செய்தது திருநாரையூர் விநாயகர் திருஇரட்டை மணிமாலை. அந்நூலிலிருந்து சில பாடல்கள்:

**என்னை நினைந்து-அடிமை கொண்டு,என் இடர்-கெடுத்துத்,**
**தன்னை நினையத் தருகின்றான், - புன்னை**
**விரசு-மகிழ் சோலை வியன்-நாரை யூர்-முக்கண்**
**அரசு-மகிழ் அத்தி-முகத் தான்.**

(18)

*(யானைமுகத்தவனான விநாயகப் பெருமான், புன்னைமரங்கள்* (mastwood, *Calophyllum inophyllum*) *நிறைந்த வியக்கத்தக்க சோலைகள் சூழ்ந்த திருநாரையூர்த் தலத்தில் உறையும் முக்கண் இறையான சிவபெருமானின் மகிழ்ச்சிக்குரிய மைந்தனாவான்; அந்த அத்தி முகத்தவன், என்மீது இரக்கம் கொண்டு என்னைத் தன் அடிமையாக ஏற்று, எனக்கு ஏற்படும் துன்பங்களைக் களைந்து, அதன்வழி, எந்நேரமும் அவனை நினைக்கும்படி செய்கின்றான்)*

Eṉṉai niṉaindu aḍimai koṇḍu, eṉ iḍar keḍuttu-t,
taṉṉai niṉaiya-t taruhiṉṟāṉ, - puṉṉai
virasu mahiḻ sōlai, viyaṉ Nāraiyūr mukkaṇ
Arasu mahiḻ Atti muhattāṉ.

**"நாரணன் முன்-பணிந்து ஏத்த-நின்று, எல்லை நடாவிய-அத்**
**தேர்-அண வும்-திரு நாரையூர் மன்னு சிவன்-மகனே!**
**காரண னே!எம் கணபதி யே!நற் கரி-வதனா!**
**ஆரண நுண்-பொரு ளே!" என் பவர்க்கு-இல்லை அல்லல்களே.**

(19)

*(முற்காலத்தில் திருமாலால் பணிந்து வணங்கப்பெற்ற சிறப்பு மிகுந்தவர் சிவபெருமான்; நாற்புறத்து எல்லை வரை நடத்தப்பெறுகின்ற தேர் பொருந்திய அத்திருநாரையூர்த் தேவரின் பெருமைக்குரிய மகன் விநாயகப் பெருமான். அவர் எப்பொருட்கும் முதற்காரணமாகத் திகழ்பவர்; நல்ல யானை முகத்தினர்; வேதங்களின் நுண்ணிய பொருளாக விளங்குபவர்; அந்தப் பெருமானை - எம் கணபதியை, இவ்வாறெல்லாம் சொல்லித் துதிப்போருக்கு எந்த இடையூறும் ஏற்படாது)*

"Nāraṇan̲ mun̲ paṇindu ētta nin̲r̲u, ellai naḍāviya
at-tēr aṇavum Tirunāraiyūr man̲n̲u Sivan̲ mahan̲ē!
karaṇan̲ē! em Gaṇapatiyē! nar̲-kari vadan̲ā!
āraṇa nuṇ poruḷē!" en̲bavarkku, illai allalhaḷē.

அமரா! அமரர் தொழும்-சரண் நாரைப் பதி-அமர்ந்த
குமரா! குமரற்கு முன்னவ னே!கொடித் தேர்-அவுணர்
தமர்-ஆசு அறுத்தவன் தன்-உழைத் தோன்றின னே!என-நின்று
அமரா மனத்தவர், ஆழ்-நர கத்தில் அழுந்துவரே.

(20)

*("தேவனே! தேவர்கள் தொழுது வழிபடும் திருவடித் தாமரைகளை உடையவனே! திருநாரையூர்த் தலத்தில் வீற்றிருக்கும் பிள்ளையாரே! முருகனுக்கு மூத்தவனே! வெற்றிக்கொடிகளைக் கொண்ட தேர்களை உடைய முப்புரத்து அசுரர்களின் சுற்றத்தாரது குற்றங்களைப் போக்கிய சிவபெருமானிடத்துத் தோன்றியவனே!" என்று மனத்தால் நினைத்துத் துதித்து வழிபடாதவர்கள், கொடிய நரகத்தில் வீழ்ந்து துயருறுவர்)*

"Amarā! amarar tol̲um saraṇ Nārai-p pati amarnda
kumarā! Kumarar̲kku mun̲n̲avan̲ē! koḍi-t tēr avuṇar
tamar āsu ar̲uttavan̲ tan̲ ul̲ai-t tōn̲r̲in̲an̲ē!" en̲a nin̲r̲u
amarā man̲attavar, āl̲ narahattil al̲unduvarē.

அஞ்சு வான்-கரத்து, ஆறிழி மதத்து-ஓர்
ஆனை நிற்கவும், அரை-இருள் திரியும்
மஞ்சு நீள்வது போலும்-மா மேனி,
மலர்ப்-ப தங்களில் வண்-சிலம்பு ஒலிப்ப,
நஞ்சு பில்கு-எயிற்று அரவு,வெற்று அரையின்,
நாம மூன்று-இலைப் படையுடைப் பிள்ளை
எஞ்சல் இன்றி-முன் திரியவும், குன்றம்
எறிந்த வேலவன் காக்கவும் இசையும்.

*- பெரிய புராணம்* (21)

*(காஞ்சி மாநகரை, ஐந்து பெரிய (அல்லது நீண்ட) கரங்களையும், ஆறுபோல் பாயும் மதநீரையும் உடைய ஒப்பற்ற யானை முகமுடைய விநாயகக் கடவுள் நின்று காக்கிறார்; நள்ளிரவில் வானில் காணப்பெறும் கார் மேகம் போன்ற கரிய பெரிய திருமேனியையும், பாதங்களில் ஒலிக்கும் சிலம்பையும், இடுப்பில் கச்சாக அணிந்த நச்சுப் பாம்பினையும், மூன்று இலைகளைக் கொண்ட சூலப்படையையும் உடையவரான பைரவக் கடவுள், இடைவிடாது முன்னும் பின்னுமாக நகரைக் காக்கின்றார்; கிரவுஞ்ச மலையைப் பிளந்த வேற்படையை உடைய முருகக் கடவுளும் காஞ்சி நகரைக் காக்கின்றார்.) இவ்வாறு காஞ்சியைக் காக்கும் கணபதி, நம்மையும் காப்பாராக!*

Añju vāṉ karattu āṟiḻi madattu, ōr
 āṉai niṟkkavum, arai iruḷ tiriyum
mañju nīḷvadu pōlum mā-mēṉi,
 malar-p padaṅgaḷil vaṇ silambu olippa,
nañju pilhu eyiṟṟu aravu, veṟṟu araiyiṉ,
 nāma mūṉṟu ilai-p paḍaiyuḍai-p piḷḷai
eñjal iṉṟi, muṉ tiriyavum, kuṉṟam
 eṟinda Vēlavaṉ kākkavum isaiyum.

4. <u>சாத்திரங்கள் வணங்கும் சங்கரி புத்திரன்</u>

*(மெய்கண்ட நூல்களில் மோதகப் பிரியன்)*

ஒரு-கோட்டன், இரு-செவியன், மும்மதத்தன்,
 நால்வாய்,ஐங் கரத்தன், ஆறு
தரு-கோட்டு-அம் பிறை,இதழித் தாழ்-சடையான்
 தரும்-ஒரு-வா ரணத்தின் தாள்கள்,
உருகு-ஒட்டு-அன் பொடும்-வணங்கி, ஓவாதே
 இரவு-பகல் உணர்வோர் சிந்தைத்
திருகு-ஒட்டும், அயன்-திருமால் செல்வமும்,ஒன்றோ
 என்னச் செய்யும் தேவே.

*- சிவஞான சித்தியார், மூத்த பிள்ளையார் வணக்கம்* (1)

*(ஒற்றைக் கொம்பு, இரு செவிகள், மூன்று மதங்கள், தொங்குகின்ற துதிக்கை, மற்றும், ஐந்து திருக்கைகளை உடையவர் விநாயகப் பெருமான்; இவர், கங்கை, வளைந்த பிறை, கொன்றை மாலை ஆகியவற்றை அணிந்த, தாழ்ந்த சடையை உடையவரான சிவபெருமானின் மூத்தபிள்ளை; ஒப்பற்ற யானை முகத்தினர். அவருடைய திருவடிகளை மனம் நெகிழ்ந்து உருகி, இரவு-பகல் இடைவிடாது வணங்குவோரின் எண்ணம் தூய்மையாகும்; பிரமன், திருமால் ஆகியோரின் பெருவாழ்வும், பெருஞ் செல்வமும் ஒரு பொருட்டாமோ என்று எண்ணச் செய்யும்; சிவமாம் தன்மையாகிய பெருவாழ்வை நல்கும்)*

(**ஒரு கோட்டன்** என்பது ஒன்றே பதி என்பதை உணர்த்துகிறது; **இரு செவியன்** என்பது, அவர், முற்றும் உணர்ந்தவர், அளவிலாற்றல் உடையவர் என்பதைத் தெரிவிக்கிறது; அறிவு-இச்சை-செயல் ஆகிவற்றை உடையவர் ஆனைமுகர் என்பதை **மும்மதத்தன்** என்பது குறிப்பிடுகிறது; **ஐங்கரத்தன்** என்பது, அவர் ஐந்தொழிற்கும் தலைவர் என்பதை உணர்த்துகிறது என்று சிறப்புரை காண்பர்.
ஒரு என்பது “ஒப்பற்ற, பெருமை வாய்ந்த” என்று பொருள்படும். விநாயகரின் ஒற்றைக் கொம்பு, அவர் ஒப்பற்ற தலைவர் என்பதை உணர்த்துகிறது)

Oru kōṭṭaṉ, iru seviyaṉ, mum-matattaṉ,
 nālvāy, aiṅkarattaṉ, āṟu
taru kōṭṭu am-piṟai, idaḻi-t tāḻ saḍaiyāṉ
 tarum oru vāraṇattiṉ tāḷhaḷ,

uruhu ōṭṭu aṉboḍum vaṇangi, ōvādē
iravu pahal uṇarvōr sindai-t
tiruhu ōṭṭum, Ayaṉ, Tirumāl selvamum oṉṟō
eṉṉa-c ceyyum tēvē.

**ஒளியான திருமேனி, உமிழ்-தானம் மிக-மேவு**
**களி,ஆர வரும்-யானை கழல்-நாளும் மறவாமல்,**
**அளி-ஆளும் மலர்-தூவும் அடியார்கள், உளமான**
**வெளியாகும், வலிதாய வினை-கூட நினையாவே.**

- *சிவப்பிரகாசம்* (2)

*(பிரகாசமான திருமேனி, முகத்தினின்று பொழிகின்ற மதசலம் ஆகியவை பொருந்தியவராக விநாயகப் பெருமானைத் தியானிப்போரின் முன், ஆனை முகத்தவராகிய அவர், மிகுந்த ஆனந்தத்தோடு எழுந்தருளுவர். அப்பெருமானின் திருவடிகளை எப்போதும் மறவாமல், வண்டுகள் மொய்க்கும் மலர்களைத் தூவி வழிபடும் அடியாரின் உள்ளத்திலிருந்து அஞ்ஞான இருள் அகலும், ஞானப்பிரகாசம் தோன்றும்; அவர்களைக் கொடிய வினைகள் அண்டமாட்டா)*
(ஞானானந்த சொருபியாகிய விநாயகப் பெருமான், தம் கிரியாசக்தியினால், தம்மை வழிபடுவோரின் வினையை நீக்கி, ஞானசக்தியினால் ஆணவமலத்தை அகற்றி, ஞானப்பிரகாசத்தை உண்டாக்கி அருளுவர்)

Oḷiyāṉa tirumēṉi, umiḻ dāṉam miha mēvu
kaḷi āra varum yāṉai kaḻal, nāḷum maṟavāmal,
aḷi āḷum malar tūvum aḍiyārhaḷ, uḷamāṉa
veḷiyāhum, validāya viṉai kūḍa niṉaiyāvē.

5. <u>அருணகிரி அடிபணியும் ஆனைமுகன்</u>
*(திருப்புகழில் தேவ குஞ்சரம்)*

| | |
|---|---|
| **உம்பர்தருத், தேநு-மணிக்** | **கசிவாகி,** |
| **ஒண்-கடலில் தேனமுதத்து** | **உணர்வூறி,** |
| **இன்ப-ரசத்தே பருகிப்** | **பலகாலும்** |
| **என்றன்-உயிர்க்கு ஆதரவுற்று** | **அருள்வாயே!** |
| **தம்பி-தனக் காக-வனத்து** | **அணைவோனே!** |
| **தந்தை-வலத் தால்-அருள்கைக்** | **கனியோனே!** |
| **அன்பர்-தமக் கான-நிலைப்** | **பொருளோனே!** |
| **ஐந்து-கரத்து ஆனைமுகப்** | **பெருமாளே!** |

(1)

*(விண்ணவர் உலகில் உள்ள மரங்கள், காமதேனு என்னும் தெய்வப் பசு, சிந்தாமணி ஆகியவற்றைப் போன்று, வேண்டுவார் வேண்டுவனவற்றைக் கொடுப்பதற்கு என் உள்ளம் நெகிழ்ந்து, ஒளி வீசும் கடலில் தோன்றிய இனிய அமுதம் போன்ற உணர்வு என் உள்ளத்தில்*

*ஊறி, அதனால் ஏற்படும் இன்பச் சாற்றினை நான் உண்ணும்படி, பல முறையும் என் உயிரின் மீது ஆதரவு காட்டி அருள்வாயாக!*
*தம்பியாகிய முருகனின் பொருட்டுக் காட்டைச் சென்றடைந்தவனே! தந்தையை வலம் செய்ததால், கையில் அருளப்பெற்ற பழத்தை உடையவனே! அன்பர்களுக்கு வேண்டிய நிலைத்த பொருளாய் உள்ளவனே! ஐந்து கரங்களையும், யானை முகத்தையும் கொண்ட விநாயகப் பெருமானே! என்னிடத்து ஆதரவு காட்டி அருள்வாயாக!)*

(**விளக்கம்:** *உம்பர்தரு* - தேவலோக மரங்களான சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்னும் ஐவகை மரங்கள். இம்மரங்களும், காமதேனு, சிந்தாமணி ஆகியவையும், தம்மை அடைந்தோர்க்கு அவர்கள் வேண்டுவனவற்றைத் தரவல்லவை.
ஒரு பழம் காரணமாக விநாயகர் சிவபெருமானை வலம் வந்தார்; முருகப் பெருமானோ அகில உலகங்களையும் வலம் வந்தார். இதன் தத்துவம் யாது? சிவம் என்னும் ஒன்றுக்குள் எல்லாவற்றையும் கண்டார் விநாயகர்; எல்லாவற்றுள்ளும் சிவத்தைக் கண்டார் முருகன்.
*பெருமாள்* - திருப்புகழ்ப் பாடல்களில் முருகனைத்தான் 'பெருமாளே' என்று அருணகிரியார் விளித்திருக்கிறார். ஆனால் 'கைத்தல நிறைகனி' என்று தொடங்கும் விநாயகர் பாடலில் மட்டும் முருகனை 'அச்சிறு முருகனை' என்று குறிப்பிட்டுவிட்டு, அந்தச் 'சிறு' முருகனுக்கு மணமுடித்து வைத்த விநாயகரைப் 'பெரும் ஆள்' என்று பாடியுள்ளார். அந்தப் 'பெரிய ஆள்'தான் 'பெருமாள்' ஆகிறார்.)

Umbar taru-t, tēnu,maṇi-k kasivāhi,
  Oṇ kaḍalil teṉ amutattu uṇarvūṟi,
Iṉba rasattē paruhi-p pala kālum
  Eṉṟaṉ uyirkku ātaravuṟṟu aruḷvāyē,
Tambi taṉakkāha vaṉattu aṇaivōṉē,
  Tandai valattāl aruḷ kai-k kaṉiyōṉē,
Aṉbar tamakkāṉa nilai-p poruḷōṉē,
  Aindu karattu āṉai muha-p Perumāḷē!

**கைத்தலம் நிறை-கனி, அப்பமொடு அவல்,பொரி**
**கப்பிய கரிமுகன் அடி-பேணிக்,**
**"கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ!**
**கற்பகம்!" என,வினை கடிதேகும்;**
**மத்தமும், மதியமும் வைத்திடும் அரன்மகன்,**
**மற்பொரு திரள்-புய மதயானை,**
**மத்தள வயிறனை, உத்தமி புதல்வனை,**
**மட்டவிழ் மலர்-கொடு பணிவேனே;**
**"முத்தமிழ் அடைவினை, முற்படு கிரி-தனில்**
**முற்பட எழுதிய முதல்வோனே!**
**முப்புரம் எரி-செய்த அச்சிவன் உறை-ரதம்**
**அச்சது பொடி-செய்த அதிதீரா!**
**அத்துயர் அது-கொடு, சுப்பிர மணி-படும்**
**அப்புனம் அதனிடை இபமாகி,**
**அக்குற மகளுடன், அச்சிறு முருகனை**
**அக்கணம் மணம்-அருள் பெருமாளே!"**

*(கையில் உள்ள பழம்-அப்பம்-அவல்-பொரி ஆகியவற்றை உண்டு மகிழ்பவர் யானைமுகப் பெருமான்; "உம்மை நன்குணர்வோரின் சிந்தையில் உறையும் பெருமானே! கற்பகமே!" என்று கூறி அவரை வழிபட்டால் கொடிய வினைகள் அகன்றுவிடும். அவர், ஊமத்தம்பூ, பிறைச் சந்திரன் ஆகியவற்றைச் சடையில் தரித்த சிவபெருமானின் மகனாவார்; மற்போருக்கு ஏற்புடைய திரண்ட புயத்துடன் கூடிய மதயானை போன்றவர்; மத்தளம் போன்ற வயிற்றை உடையவர்; உமையம்மையின் மகன். அந்தக் கணபதியை, "முத்தமிழை மிகப் பழைமையான மேரு மலையில் முற்காலத்தில் எழுதிய முதல்வோனே! முப்புரங்களை அழிக்கச் சென்ற சிவபெருமான் எழுந்தருளியிருந்த தேரின் அச்சைப் பொடி செய்யும் ஆற்றல் படைத்தவனே! குறமகளாகிய வள்ளியம்மை மீது கொண்ட காதலால் துயருற்றிருந்த தம்பி முருகன் நடந்த வனத்திடை யானையாகத் தோன்றி, அக்குறப்பெண்ணை முருகப் பெருமானுக்கு மணம் முடித்து வைத்த பெருமாளே!" என்று புகழ்ந்து பாடி, மணமிக்க மலர்களைக் கொண்டு வழிபடுவேன்)*

Kai-t-talam nirai kani, appamodu aval, pori
kappiya karimuhan adi peni-k,
"Karridum adiyavar puttiyil uraipava!

Kai-t-talam niṟai kaṉi, appamoḍu aval, pori
kappiya karimuhaṉ aḍi pēṇi-k,
"Kaṟṟiḍum aḍiyavar puttiyil uṟaipava!
kaṟppaham!" eṉa, viṉai kaḍitēhum;
Mattamum, matiyamum vaittiḍum Araṉ mahaṉ,
maṟpporu tiraḷ puya mada-yāṉai,
mattaḷa vayiṟaṉai, uttami pudalvaṉai,
maṭṭaviḻ malar koḍu paṇivēṉē;
"Muttamiḻ aḍaiviṉai, muṟppaḍu kiri taṉil
muṟppaḍa eḻudiya mudalvōṉē!
Muppuram eri seyda ac-Civaṉ uṟai ratam
accadu poḍi seyda adi dīrā!
At-tuyar adu koḍu, Suppiramaṇi paḍum
appuṉam adaṉiḍai ipamāhi,
ak-kuṟa mahaḷuḍaṉ, ac-ciṟu Muruhaṉai
ak-kaṇam maṇam aruḷ Perumāḷē!"

*பக்தர்கள் இறைவனைப் பல வகையாக வழிபடுகிறார்கள்.*
*அவனது வெவ்வேறு சொரூபங்களில் ஈடுபடுகிறார்கள்.*
*அவர்களது பாவனைக்கேற்ப*
*அந்தந்த சொரூபங்களில் இறைவன் அவர்களுக்குக் காட்சியளிக்கிறான்.*
*அவன் தன்னை நினைப்போரை ஒருபோதும் மறப்பதில்லை.*
*-கீதாசாரம்*

குஞ்சர மாமுக விக்கி ன-ப்ரபு!
அங்குச பாச-க ர-ப்ர சித்த!ஓர்
கொம்ப!ம கோதர! முக்கண் விக்ரம கணராஜ!
கும்பிடு வார்-வினை பற்ற றுப்பவ!
எங்கள்-வி நாயக! நக்கர் பெற்றருள்
குன்றைய ரூபக! கற்ப கப்பிளை! அருள்-தாராய்!

*- திருப்புகழ்ப் பாடலினின்றும் எடுத்துத் துதியாக அமைக்கப்பெற்றது* (3)

*(எங்கள் விநாயகப் பெருமான், அழகிய முகத்தை உடைய 'விக்கினவிநாயகர்' என்னும் பெயரிய பெரியவர்; அங்குசம்-பாசம் ஆகிய இரண்டினையும் கரங்களில் ஏந்தியவர்; பிரசித்தி பெற்றவர்; ஒற்றைக் கொம்பர் (ஒரு தந்தத்தை உடையவர்); பெருவயிற்றை உடையவர்; மூன்று கண்களும் பேராற்றலும் படைத்தவர்; கணங்களுக்குத் தலைவர்; தம்மை வணங்கும் அடியாரின் வினைகளையும் பற்று(ஆசை)களையும் (அல்லது, வினைகள் பற்றுவதை) அடியோடு அழிப்பவர்; திசைகளையே ஆடையாகக் கொண்ட சிவனின் பிள்ளை; மலை போன்ற திருவுருவினர்; கற்பகத் தருவைப் போன்று அடியார் கோரும் அனைத்தையும் நல்குபவர்; அவர் எங்களுக்கு அருள் புரிவராக!)*

Kuñjara mā-muha Vigṉa-p-prabhu!
Aṅgusa pāsa kara prasitta! Ōr
komba! Mahōdara! Mukkaṇ vikrama Gaṇarāja!
Kumbiḍuvār viṉai par̲r̲u ar̲uppava!
Eṅgaḷ Viṉāyaha! Nakkar per̲r̲aruḷ
kuṉr̲aiya rūpaha! Kar̲ppaha-p piḷai! Aruḷ tārāy!

6. <u>குருபரர் கும்பிடும் குஞ்சரம்</u>
*(குமரகுருபரர் பாடல்களில் யானை முகத்தவர்)*

பாசத் தளை-அறுத்துப், பாவக் கடல்-கலக்கி,
நேசத் தளைப்பட்டு நிற்குமே, - மாசற்ற
காரார் வரை-ஈன்ற கன்னிப் பிடி-அளித்த
ஓர்-ஆனை வந்து-என் உளத்து.

*- காசிக்கலம்பகம்* (1)

*(குற்றமற்ற கரிய இமயமலை (இமவான்) ஈன்ற பெண்யானை போன்றவர் உமையம்மை; அவர் பெற்றவர் யானை முகமுடையவரான விநாயகப் பெருமான். அவர் என்னிடம் வந்து பாசம் என்னும் விலங்கினை அறுத்துப், பாவம் என்னும் கடலைக் கலக்கி, அன்பு என்னும் தளையால் கட்டப்பெற்று, என் உள்ளத்தில் வீற்றிருக்கிறார்) (அவரை வணங்கி மகிழ்கிறேன்)*

Pāsa-t taḷai ar̲uttu-p, pāva-k kaḍal kalakki,
nēsa-t taḷaippaṭṭu nir̲kkumē, māsar̲r̲a
kārār varai īṉr̲a kaṉṉi-p piḍi aḷitta
ōr-āṉai vandu eṉ uḷattu.

கார்-கொண்ட கவுள்-மதக் கடை-வெள்ள மும்,கட்
கடைக்-கடைக் கனலும்,எல்லை
கடவாது, தடவுக் குழைச்செவி முகந்து-எறி
கடைக்கால் திரட்ட,எங்கோன்
போர்-கொண்ட எண்-தோள் பொலங்குவடு பொதியும்-வெண்
பொடி,துடி அடித்,துவைத்துப்,
புழுதி-ஆட்டு அயரா-ஒர் அயிராவ ணத்து,உலவு
போர்க்-களிற் றைத்-துதிப்பாம்.

*- மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், காப்புச் செய்யுள்* (2)

*(போர் புரியும் ஆண் யானை போன்றவர் கணேசப் பெருமான்; அவருடைய கரிய நிறம் கொண்ட கன்னத்திலிருந்து மதநீர், ஊழி வெள்ளம் போன்று பெருக்கெடுக்கிறது; கண்களிலிருந்து ஊழித்தீ போன்று ஒளிவெள்ளம் வெளிப்படுகிறது; அவை தத்தம் வரம்பைத் தாண்டாதவாறு, அகன்ற குழைந்த செவிகள் அசைவதால் ஏற்படும் ஊழிக்காற்றுத் தடுக்கிறது. சிவபெருமான், வீரம் விளைக்கும் தம் எட்டுத் தோள்களிலும் வெண்ணீறு அணிந்து விளங்குகிறார்; அத்திருநீற்றினைத் தம் திருவடிகளால் மிதித்துப் புழுதியாக்கி விளையாடுகிறார், சிவபெருமானின் ஈராயிரம் கொம்புகளைக் கொண்ட அயிராவணம் என்னும் யானை போன்றவரான ஒப்பிலாத யானைமுகக் கடவுள்; அவருடைய திருவடிகளை வணங்குவோம்)*

குறுந்தட்டில் இப்பாடல் மிகக் குழப்பமான முறையில் பாடப்பெற்றுள்ளது. பாடலைப் பின்வருமாறு பதம் பிரித்துப் பாடி வழிபடுக. பிழை பொறுத்தருள்க.

கார் கொண்ட கவுள் மதக் கடை வெள்ளமும், கட்–
கடைக் கடைக்கனலும், எல்லை
கடவாது, தடவுக் குழைச்செவி முகந்து எறி
கடைக்கால் திரட்ட, எங்கோன்
போர் கொண்ட எண்தோள் பொலங்குவடு பொதியும் வெண்–
பொடி, துடிஅடித் துவைத்துப்,
புழுதி ஆட்டு அயரா, ஒர் அயிராவணத்து உலவு
போர்க் களிற்றைத் துதிப்பாம்.

pōr-k kaḷiṟṟai-t tudippām.

(குறுந்தட்டில் இப்பாடல் பிழையாகப் பாடப்பெற்றுள்ளது. கவனக்குறைவால் அது திருத்தப்பெற முடியவில்லை. பொறுத்தருள்க. - *தொகுப்பாளன்*)

7. <u>வள்ளலார் வழிபடும் வாரணம்</u>
*(அருட்பாவில் ஆனைமுகன்)*

திங்களங் கொழுந்து வேய்ந்த
செஞ்சடைக் கொழுந்தே போற்றி!
மங்கை-வல் லபைக்கு வாய்த்த
மகிழ்ந!நின் மலர்த்தாள் போற்றி!
ஐங்கர, நால்வாய், முக்கண்
அருட்சிவ களிறே போற்றி!
கங்கையை மகிழும் செல்வக்
கணேச!நின் கழல்கள் போற்றி!

*- தனித்திருமாலை* (1)

*(பிறைச்சந்திரனைச் சிவந்த சடாமுடியில் தரித்திருக்கும் இளமை துள்ளும் கணேசப் பெருமானே! உம்மை வணங்குகின்றோம்; வல்லபை மணவாளனே! உன் மலர்ப்பாதங்களில் மலர்*

*தூவி வணங்குகின்றோம்; ஐந்து கரங்களையும், தொங்குகின்ற துதிக்கையையும், மூன்று கண்களையும் உடைய ஆண் யானையே! சிவன் மகனே! உன்னைச் சிரந் தாழ்த்தி வணங்குகின்றோம்; கங்கா தேவிக்கு மகிழ்ச்சியை ஊட்டும் கணேசப் பெருமானே! உன் பாதங்களைப் பணிகின்றோம், வணங்குகின்றோம்)*

Tiṅgaḷaṉ koḻundu vēynda
  señjaḍai-k koḻundē pōṟṟi!
Maṅgai Vallabaikku vāytta
  mahiḻna! niṉ malar-t-tāḷ pōṟṟi!
Aiṅgara, nālvāy, mukkaṇ
  aruṭ-Siva kaḷiṟē pōṟṟi!
Gaṅgaiyai mahiḻum selva-k
  Gaṇēsa! niṉ kaḻalhaḷ pōṟṟi!

என்னை வேண்டி எனக்கு-அருள் செய்தியேல்,
  இன்னல் நீங்கும்,நல் இன்பமும் ஓங்கும்,நின்-
தன்னை வேண்டிச் சரண்-புகுந் தேன்,என்னைத்
  தாங்கிக் கொள்ளும் சரண்-பிறிது இல்லை-காண்,
அன்னை வேண்டி அழும்,மகப் போல்கின்றேன்,
  அறிகி லேன்-நின் திருவுளம் ஐயனே,
மின்னை வேண்டிய செஞ்-சடை யாளனே!
  விளங்கும் சித்தி விநாயக வள்ளலே!

*- கணேசத் திருவருள்மாலை* (2)

*(மின்னல் போன்று ஒளிரும் சிவந்த சடையை உடையவனே! பெருமைக்குரிய சித்தி விநாயகப் பெருமானே! என்னை நினைத்து, என் மீது இரக்கம் கொண்டு எனக்கு அருள் செய்தாயானால், என் இடர்கள் யாவும் தீரும்; இன்பம் பெருகும். உன்னைத் தவிர என்னை அரவணைத்துத் துயர் துடைக்கும் பற்றுக்கோடு வேறு எதுவும் எனக்கு இல்லை; அன்னையை நினைத்து அழுகின்ற பச்சிளங்குழந்தை போன்று உன்னை நினைத்துக் கண்ணீர் வடித்து உன் அருளை நாடுகின்றேன்; அருள் புரிவாயோ, மாட்டாயோ, உன் திருவுள்ளம் என்னவென்று அடியேன் அறிந்திலேன்)*

Eṉṉai vēṇḍi eṉakku aruḷ seydiyēl,
  iṉṉal nīṅgum, nal iṉbamum ōṅgum,
niṉtaṉṉai vēṇḍi-c caraṇ puhundēṉ, eṉṉai-t
  tāṅgi-k koḷḷum saraṇ piṟidu illai kāṇ,
aṉṉai vēṇḍi aḻum maha-p-pōlhiṉṟēṉ,
  aṟihilēṉ niṉ tiruvuḷam Aiyaṉē!
miṉṉai vēṇḍiya señcaḍaiyāḷaṉē!
  viḷaṅgum Siddhi Vināyaha vaḷḷalē!

அஞ்சு-முகத் தான்-மகன்,மால் அஞ்சு-முகத் தான்-அருள்வான்,
அஞ்சு-முகத் தான்,அஞ்சு அணி-கரத்தான், - அஞ்சு-முக
வஞ்சரை,யான் காணா வகை,வதைத்தான், ஓர்-அரையோடு
அஞ்சரையான் கண்கள் அவை.

*- சித்திவினாயகர் பதிகம்* (3)

*(விநாயகப் பெருமான், ஈசானம்-தத்புருஷம்-சத்தியோஜாதம்-வாமம்-அகோரம் என்னும் ஐந்து திருமுகங்களை உடைய சிவபெருமானின் புதல்வர்; திருமால் சக்கரப்படையை (சக்கராயுதம்) இழந்து, அதனைப் பெறமாட்டாது அஞ்சியபோது, அதைப் பெறுவித்து அருளியவர்; புலன்வழி செல்லும் ஆசை ஐந்தும் அடியாரிடத்து அகலும் வகையில், ஐந்து அழகிய திருக்கரங்களை உடையவர்; அஞ்சத்தக்க வஞ்சகர்களை அடியேன் காணாத வகையில் (அவர்களால் துன்பம் நேராத வகையில்) அவர்களைப் போக்கியருள்பவர்; ஓர் அரை(1/2)யோடு, ஐந்து அரை (5 X 1/2 = 2½) = (½ + 2½ = 3) அதாவது மூன்று கண்களை உடையவர்)*

Añju muhattān mahan, Māl añju muhattān aruḷvān,
Añju muhattān, añju aṇi karattān, Añju muha
vañjarai yān kāṇā vahai, vataittān, Ōr araiyōḍu
añjaraiyān kaṇkaḷ avai.
(araiyōḍu (½); añjaraiyān (5x½ = 2½); (½+2½=3)

8. <u>ஔவை அருளிய அகவல்</u> *(விநாயகர் அகவல்)*

சீதக் களபச் செந்தா மரைப்-பூம்
பாதச் சிலம்பு பல-இசை பாடப்,
பொன்-அரை ஞாணும், பூந்துகில் ஆடையும்,
வன்ன மருங்கில் வளர்ந்து-அழகு எறிப்பப்,

பேழை வயிறும், பெரும்-பாரக் கோடும்,
வேழ முகமும், விளங்கு-சிந் தூரமும்,
அஞ்சு கரமும், அங்குச பாசமும்,
நெஞ்சில் குடி-கொண்ட நீல மேனியும்,
நான்ற வாயும், நாலிரு புயமும்,
மூன்று கண்ணும், மும்மதச் சுவடும்,
இரண்டு செவியும், இலங்கு-பொன் முடியும்,
திரண்ட முப்புரி-நூல் திகழ்-ஒளி மார்பும்,
சொற்பதம் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதம் ஈன்ற கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிஹ வாஹன!

இப்பொழுது என்னை ஆட்கொள வேண்டித்,
தாயாய் எனக்குத் தானெழுந்து அருளி,
மாயாப் பிறவி மயக்கம் அறுத்தே,
திருந்திய முதல்-ஐந் தெழுத்தும் தெளிவாய்ப்

பொருந்தவே வந்து-என் உளந்தனில் புகுந்து,
குரு-வடி வாகிக் குவலயம் தன்னில்
திருவடி வைத்துத், திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்து-எனக்கு அருளிக்,

கோடா யுதத்தால் கொடு-வினை களைந்தே,
உவட்டா உபதேசம் புகட்டி-என் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி,
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிது-எனக்கு அருளிக்,

கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து,
இருவினை தன்னை அறுத்து-இருள் கடிந்து,
தலம்-ஒரு நான்கும் தந்து-எனக்கு அருளி,
மலம்-ஒரு மூன்றின் மயக்கம் அறுத்தே,
ஒன்பது வாயில் ஒரு-மந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதும் காட்டி,
ஆறு-ஆ தாரத்து அங்கு-இசை நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே,

இடை-பிங் கலையின் எழுத்து-அறி வித்துக்,
கடையிற் சுழுமுனைக் கபாலமும் காட்டி,
மூன்று-மண் டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்,
குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து,
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்து-அறி வித்தே,

அமுத நிலையும், ஆதித்தன் இயக்கமும்,
குமுத சகாயன் குணத்தையும் கூறி,
இடைச்-சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்-சக் கரத்தின் உறுப்பையும் காட்டிச்,
சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்
எண்-முக மாக இனிது-எனக்கு அருளிப்,
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்,

கருத்தனில் கபால வாயில் காட்டி,
இருத்தி முத்தி இனிது-எனக்கு அருளி,
என்னை அறிவித்து எனக்கு-அருள் செய்து,
முன்னை வினையின் முதலைக் களைந்தே,

வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து,
இருள்-வெளி இரண்டிற்கு ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்தி,என் செவியில்
எல்லை இல்லா ஆனந் தம்-அளித்து,

அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்,
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்,
சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி,
அணுவிற்கு அணுவாய், அப்பாலுக்கு அப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி,

வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்,
கூடு-மெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி,
அஞ்சு அக்கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலை-அறி வித்துத்,
தத்துவ நிலையைத் தந்து-எனை ஆண்ட
வித்தக விநாயக! விரை-கழல் சரணே!

*(சந்தனக் கலவை பூசப்பெற்ற செந்தாமரை மலர் போன்ற (உன்) திருவடிகளில் உள்ள சிலம்புகள் பலவிதமான ஓசைகளை உண்டாக்குகின்றன; பொன்னால் செய்யப்பெற்ற இடைக்கொடியும் (அரைஞாணும்), பூவேலை செய்யப்பெற்ற மேலாடையும், இடையின் அழகை மேலும் அதிகரித்து ஒளி வீசச் செய்கின்றன;*

*பெட்டகம் போன்ற வயிறு, பெரிய எல்லையாக உடைய (அல்லது, பேரழகு நிறைந்த அல்லது, பெரிய உறுதியான) தந்தம், யானை முகம், அம்முகத்தில் பிரகாசிக்கின்ற சிவந்த திலகம், மேல் இரண்டு கைகளில் வலப்புறத்தில் யானையைச் செலுத்தும் தோட்டியும், இடப்புறத்தில் கட்டுக் கயிறும் கொண்ட நான்கு திருக்கைகளோடு துதிக்கையும் சேர்ந்த ஐந்து திருக்கரங்கள், அடியேனது மனத்தில் எப்போதும் நிலையாகத் தங்கித் தோன்றும் நீல ஒளியுடன் கூடிய திருமேனி, கீழ்நோக்கித் தொங்குகின்ற திருவாய் (தும்பிக்கை), நான்கு பெரிய தோள்கள், சூரியன்-சந்திரன்-அக்கினி ஆகிய மூன்று திருக்கண்கள், கன்னம்-கை-கோசம் என்னும் மூன்று இடங்களிலிருந்து வடியும் மதநீரின் சுவடு, இரு பெரிய செவிகள், சிரசில் விளங்குகின்ற பொன் முடி, மூன்று புரிகளைக் கொண்ட வடமாகிய பூணூல் திகழும் ஒளி மிகுந்த திருமார்பு ஆகியவற்றைக் கொண்டு, சொல்லினையும் கடந்த, உருவம் கடந்த, ஞான சொருபனாகிய சிவகுமாரனாகி, வேண்டுவார் வேண்டுவதை வழங்கும் கற்பகத்தருப் போன்றவரே! மா-பலா-வாழை என்னும் மூன்று பழங்களை விரும்பி ஏற்கும் மூஷிஹ வாகனரே!*

*பக்குவமற்ற அடியேனை ஆட்கொள்ள விரும்பி, என்னிடத்துப் பேரன்பு காட்டும் தாய் போலக் கருணை கொண்டு, தாமாகவே என் முன் எழுந்தருளி, மயக்கமான பந்தங்களில் மயங்கின எனது பந்தங்களை அறுத்துத், திருத்தமாக அஞ்செழுத்து உண்மையை விளங்குமாறு செய்தவரே! இந்நிலவுலகில் ஞானாசிரியர் வடிவத்தில் வந்து, என் உள்ளத்தில் ஒளி வடிவாகப் புகுந்து, உம் திருவடித் தாமரையைப் புதித்து, இதுவே உண்மைப் பொருள் என்று உணர்த்தியவரே!*

*இனிப் பிறவித் துன்பத்தில் உழன்று வருந்தா வகையில்,உம் தந்தமாகிய ஆயுதத்தால் கொடிய சஞ்சித வினையைக் களைந்து,மிக இனிய ஏகாட்சர மந்திரத்தை எளியேனின் செவியில் ஓதியவரே! தெவிட்டல் இல்லாத தெளிவான ஞானத்தை அடியேனது அனுபவத்தில் காணும்படி செய்தவரே! உணர்ச்சி-சுவை-ஒளி-ஓசை-மணம் ஆகிய ஐந்தறிவுகளையும் உலகப் பற்றில்*

செல்லாது தடைப்படுத்தும் தந்திரத்தை, இன்பத்தை அடைவதற்குக் காரணமான தம் பேரருளினாலே அடியேனுக்கு இனிமையாகத் தெரிவித்து, உடலில் உள்ள தத்துவங்கள் ஒடுங்குவதற்குரிய வழிவகைகளை அறிவுறுத்தியவரே!

நல்வினை-தீவினை என்னும் இரு வினைகளின் தொடர்பை நீக்கி, ஆணவ இருளை வலி கெடச் செய்து, சதாசிவமூர்த்தி விளங்கும் சிரசில் சத்யோசாதம் (பின் மூளை), வாமதேவம் (இடப்பக்க மூளை), தத்புருஷம் (முன்பக்க மூளை), அகோரம் (வலப்பக்க மூளை) ஆகியவற்றை விளங்கச் செய்தவரே! ஆணவம்-மாயை-கன்மம் என்னும் மும்மலங்களால் ஏற்படும் மயக்க அறிவினைப் போக்கிக், கண் (2) - மூக்கு - காது (2) - வாய் - குதம் - குய்யம் - கொப்பூழ் என்னும் ஒன்பது வாயில்கள் வழியாகச் செல்லும் மனத்தை ஐம்புலன் அறிவினின்றும் ஒப்பற்ற பிரணவத்தால் தடுப்பதையும் காட்டி, மூலாதாரம் - சுவாதிட்டானம் - மணிபூரகம் - விசுத்தி - ஆஞ்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களையும் சகஸ்ரதளத்தில் பொருந்தும்படி செய்து, அதையே உடலெடுத்த பிறவியின் பயன் என்று மௌன நிலையில் என்னை இருத்தியவரே!

இடைநாடி (இடப்பக்க மூக்கில் நிற்பது), பிங்கலை நாடி (வலப்பக்க மூக்கில் நிற்பது) ஆகியவற்றிற்குள்ள மகாரமான பிர்மப் புழையைக் காண்பித்து, அக்கினி மண்டலம் - சூரிய மண்டலம் - சந்திர மண்டலம் என்னும் மூன்று மண்டலங்களிலும் பொருந்த நிறுத்தப்பெற்ற தூணைப் போன்ற வீணாதண்டின் அடியில் தூங்கிக் கொண்டிருந்த பாம்பு விழித்தெழுவது போலக் குண்டலினி சக்தியுடன் பொருந்திய பிரணவசக்தியை எனது உள்நாக்குப் பகுதிக்குக் கொண்டு வருவதை உணர்த்தியும், வாய் விட்டு எழுகின்ற மந்திரத்தை வெளிப்படையாக உரைத்தும், மூலாதாரத் தானத்தில் பற்றி எரிகின்ற விந்து என்னும் மூலாக்கினியைத் திருவடிகளால் மேலேறச் செய்யும் கருத்தை அடியேற்கு உணர்த்தியவரே!

இறவாத நிலையினையும், சூரியனின் இயக்கத்தையும், சந்திரக் கலையின் தன்மையினையும், அவன் இயக்கமான பதினாறு நிலைகளையும், உடலாகிய இயந்திரத்தில் உள்ள *அன்னமயகோசம்* (material or physical body, the sheath of food), *ஆனந்தமயகோசம்* (the innermost or casual body), *பிராணமயகோசம்* (the vital body, the sheath of praana), *மனோமயகோசம்* (the outer body or the sheath of mind), *விஞ்ஞானமயகோசம்* (the vesture of the inner mental body) என்னும் பஞ்சகோசங்களையும் (the five vestures of the soul), அவை பொருந்தும் தத்துவங்களையும், உடலில் உள்ள ஆறு ஆதாரங்களையும், அவற்றின் சூக்குமமாக விளங்கும் அந்தக்கரணங்களையும் பற்றிய அறிவு அடியேனுக்கு அனுபவப்படும்படி இனியநிலை ஏற்பட அருள் புரிந்தவரே! மனம் - புத்தி - சித்தம் - சுவை - ஒளி - ஊறு -ஓசை - நாற்றம் என்பவை பொருந்திய புரியட்டகம் (subtle body) என்ற ஆகாயமய தேகத்தை எனக்குப் புலனாகும் வண்ணம் செய்து, உடலிலுள்ள ஏழு நிலைகளையும், துவாதசாந்தம் என்பதையும் சேர்த்து எட்டு நிலைகளையும் அறியச் செய்தவரே!

சித்தத்தில் பொருந்திய பிர்மப் புழையைத் திறக்கும் வழியைக் காட்டி, அங்கு என்னை நிலைபெறச் செய்தவரே! ஆத்மாவே பிறப்பிடம் என்றுரைத்து, அடியேன் செவியில் திருவருட்பேற்றைத் தரும் சிவானந்த மாவெள்ளமாகிய நாத ஒலியில் அடியேனை மூழ்கும்படி செய்தவரே! வரம்பில்லாத சிவானந்த சுகத்தை வழங்கியவரே! பிறவித் துன்பத்தை வேரோடு அறுத்துத் திருவருள் நெறியினைக் காட்டியவரே!

சிரசின் மேல் சாதாக்கிய (சக்தியுடன் சேர்ந்த பரசிவம், Para-Civam in company with Sakti) நிலையில் அமூர்த்தி (உருவில்லாத) சாதாக்கியத்தை வெளிப்படுத்தி, எனது அருவ மன மண்டலத்தில், விந்து-நாத ரூபமான சிவலிங்கத்தைக் காட்டி, மகா சூட்சுமமான ஒளிக்கிரணத்திற்கு நுண்ணியதாகவும், அண்டங்களைக் கடந்த பரவெளியாயும், கணுக்களையுடைய கரும்பு முற்றினபோது வெடித்துச் சாற்றினை வெளிப்படுத்துவது போல என்னிடம் மறைந்திருந்த விந்து-நாதங்களை வெளிப்படச் செய்தவரே!

துறுவியர் அணியும் காவியுடை, திருநீறு ஆகியவற்றின் உண்மைத் தத்துவமான செவ்வொளியும்,

*வெண்ணிற ஒளியும் கலந்து விளங்குமாறு செய்து, ஆகாய மண்டலத்தில் அறிவுடன் உலாவும் பிரளயாகலர்* (souls of the intermediate class, possessing only two malas, *இரு மலங்களை உடைய ஆன்மாக்கள்)* - *விஞ்ஞானகலர்* (souls of the highest class, possessing only the anava-malam, *ஆணவமலம் ஒன்றினை மட்டுமே உடைய ஆன்மாக்கள்)களின் கூட்டத்தில் ஒருவனாக என்னைச் சேர்த்தவரே! ஐந்தெழுத்தின் நடுநாயகமான 'சி'காரத்தால் குறிப்பிடப்பெறும் அரிய பொருளை எனக்கு உணர்த்தி, அதன் பயனான நிலையை எனக்கு அளித்தவரே! என்னை ஆண்டுகொண்ட சகல சாமர்த்தியம் (பேராற்றல்) உடைய பெருமானே! மேலாகிய விநாயகக் கடவுளே! விந்து-நாதமாகிய உமது மணம் கமழ்கின்ற திருவடிகளைச் சரண் அடைகின்றேன்.*
(*உரை:* மா. இரத்தின சபாபதி பிள்ளை)

(எளிதில் புரியாத யோக தத்துவங்களை வைத்துப் புனையப்பெற்றது இந்த அகவல், 'கரடுமுரடாக இருக்கிறது; பொருள் புரியவில்லை' என்று நினைக்காமல், **வெள்ளிக்கிழமை** தோறும் இதைப் பாராயணம் செய்து பிள்ளையாருக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். 'ஔவை வாக்குக்கு நன்மை செய்யும் ஆற்றல் உண்டு' என்னும் நம்பிக்கையோடு இந்த அகவலைப் பாராயணம் செய்தால், நாடும் நாமும் நலம் பெறுவோம் - காஞ்சிப் பெரியவர்)

Sīta-k kaḷapa-c centāmarai-p pūm
pāta-c cilambu pala-isai pāḍa-p,
poṉ araiñāṉum, pūntuhil āḍaiyum,
vaṉṉa maruṅgil vaḷarndu aḻahu eṟippa-p,
pēḻai vayiṟum, perum bāra-k kōḍum,
vēḻa muhamum, viḷaṅgu sindūramum,
añju karamum, aṅgusa pāsamum,
ñenjil kuḍi-koṇḍa nīla mēṉiyum,
nāṉṟa vāyum, nāliru puyamum,
mūṉṟu kaṇṇum, mummada-c cuvaḍum,
iraṇḍu seviyum, ilaṅgu poṉ-muḍiyum,
tiraṇḍa mu-p-puri nūl tihaḻ oḷi mārbum,
soṟpadam kaḍanda turiya meyññāṉa
aṟpudam īṉṟa Kaṟppaha-k kaḷiṟē!
Muppaḻam nuharum mūṣiha vāhaṉa!
ippoḻudu eṉṉai āṭ-koḷa vēṇḍi-t
tāyāy eṉakku-t tāṉeḻundu aruḷi,
māyā-p piṟavi mayakkam aṟuttē
tirundiya mudal aindeḻuttum teḷivāy-p
porundavē vandu eṉ uḷantaṉil puhundu,
Guru vaḍivāhi-k kuvalayam taṉṉil
tiruvaḍi vaittu-t, tiṟamidu poruḷeṉa

vāḍā vahaitāṉ mahiḻndu eṉakku aruḷi-k,
kōḍāyudattāl koḍu-viṉai kaḷaindē
uvaṭṭā upadēsam puhaṭṭi eṉ seviyil
teviṭṭāta ñāṉa-t teḷivaiyum kāṭṭi,
aimpulaṉ taṉṉai aḍakkum ubāyam
iṉburu karuṇaiyiṉ iṉidu eṉakku aruḷi-k,
karuvihaḷ oḍuṅgum karuttiṉai aṟivittu,
iru-viṉai taṉṉai aṟuttu, iruḷ kaḍindu,
talam oru nāṅgum tandu eṉakku aruḷi,
malam oru mūṉṟiṉ mayakkam aṟuttē
oṉpadu vāyil oru mandirattāl
aimpula-k kadavai aḍaippadum kāṭṭi,
āṟu ādārattu aṅgu isai nilaiyum
pēṟā niṟutti-p pēccurai aṟuttē,
iḍai piṅkalaiyiṉ eḻuttu aṟivittu-k,
kaḍaiyiṟ cuḻu-muṉai-k kapālamum kāṭṭi,
mūṉṟu maṇḍalattiṉ muṭṭiya tūṇiṉ
nāṉṟeḻu pāmbiṉ nāvil uṇartti-k,
kuṇḍali adaṉil kūḍiya asabai
viṇḍeḻu mandiram veḷippaḍa uraittu,
mūlādārattiṉ mūṇḍeḻu kaṉalai-k,
kālāl eḻuppum karuttu aṟivittē
amuda nilaiyum āditṭaṉ iyakkamum,
kumuda sahāyaṉ guṇattaiyum kūṟi,
iḍai-c cakkarattiṉ īreṭṭu nilaiyum
uḍaṟ-c cakkarattiṉ uṟuppaiyum kāṭṭi,
ṣaṇmuha tūlamum sadur-muha sūkkamum
eṇ-muhamāha iṉidu eṉakku aruḷi-p,
puriyaṭṭa kāyam pulappaḍa eṉakku-t
teriyeṭṭu nilaiyum terisaṉa-p-paḍutti-k,
karuttiṉil kapāla vāyil kāṭṭi,
irutti mutti iṉidu eṉakku aruḷi,
eṉṉai aṟivittu eṉakku aruḷ seydu,

mun̲n̲ai vin̲aiyin̲ mudalai-k kaḷaindē,
vākkum man̲amum illā man̲ōlayam
tēkkiyē endan̲ sindai teḷivittu,
iruḷ-veḷi iraṇḍir̲kku on̲r̲iḍam en̲n̲a
aruḷ tarum ān̲andattu al̲utti, en̲ seviyil
ellai illā ān̲andam aḷittu,
allal kaḷaindē aruḷ-val̲i kāṭṭi,
sattattin̲ uḷḷē Sadāsivam kāṭṭi,
sittattin̲ uḷḷē Sivaliṅgam kāṭṭi
aṇuvir̲kku aṇuvāy, appālukku appālāy-k
kaṇu mur̲r̲i nin̲r̲a karumbuḷḷē kāṭṭi,
vēḍamum nīr̲um viḷaṅga nir̲utti-k,
kūḍu mey-t toṇḍar kul̲āttuḍan̲ kūṭṭi,
añju akkarattin̲ arum-poruḷ tan̲n̲ai
neñja-k karuttin̲ nilai ar̲ivittu-t,
tattuva nilaiyai-t tandu en̲ai āṇḍa
vittaha Vināyaha! virai kal̲al saraṇē!

9. <u>பிள்ளைப் பெருவயிற்றோன்</u>

*(பிள்ளைத்தமிழ்ப் பாடல்களில் தொந்திக் கணபதி)*

உருகும் அடியார் அள்ளூற உள்ளே ஊறும் தேன்-வருக!
உண்ணத் தெவிட்டாச் சிவானந்த ஒளியே வருக! புலன்வழி-போய்த்
திருகும் உளத்தார் நினைவினுக்கும் சேயாய் வருக! எமை-ஆண்ட
செல்வா வருக! உமை-ஈன்ற சிறுவா வருக! இணை-விழியால்
பருகும் அமுதே வருக!உயிர்ப் பைங்கூழ் தழைக்கக், கருணை-மழை
பரப்பு முகிலே வருக!நறும் பாகே வருக! வரை-கிழித்த
முருக வேட்கு முன்-உதித்த முதல்வா வருக வருகவே!
மூரிக் கலைசைச் செங்கழுநீர் முனியே வருக வருகவே!

*- திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்* (1)

<u>அரும்பதவுரை:</u> அள்ளூற = *வாயூற*; திருகும் உளத்தார் = *மாறுபட்ட மனம் உடையோர்*; சேயாய் = *தொலைவில் இருப்பவனே* (சேய்மை = *தொலைவு, தூரம்*); இணை = *இரண்டு*; உயிர்ப் பைங்கூழ் = *உயிராகிய பயிர்கள்*; நறும்பாகே = *இனிய பால் போன்றவனே*, வரை கிழித்த முருகவேள் = *கிரவுஞ்ச மலையைப் பிளந்த முருகன்* (வரை = *மலை*); மூரி = *பெருமை*, கலைசைச் செங்கழுநீர் முனி = *திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர்*.

Uruhum aḍiyār aḷḷūṟa uḷḷē ūṟum tēṉ varuha!<br>
Uṇṇa-t teviṭṭā-c civāṉanda oḷiyē varuha! Pulaṉ vaḻi pōy-t<br>
tiruhum uḷattār niṉaiviṉukkum sēyāy varuha! Emai āṇḍa<br>
selvā varuha! Umai īṉṟa siṟuvā varuha! Iṇai viḻiyāl<br>
paruhum amutē varuha! Uyir-p paiṅkūḻ taḻaikka-k karuṇai maḻai<br>
parappu muhilē varuha! Naṟum pahē varuha! Varai kiḻitta<br>
Muruha vēṭku muṉ utitta mutalvā varuha varuhavē!<br>
Mūri-k kalaisai-c ceṅkaḻunīr muṉiyē varuha varuhavē!

துதிதோள் சுமுகன், ஏகதந்தன்,<br>
துலங்கு கபிலன், கசகர்ணன்,<br>
சொல்லும் இலம்போ தரன்,விகடன்,<br>
தொகும்-விக் கினரா சன்,புகழால்<br>
அதி-வி னாய கன்,தூம-<br>
கேது வுடனே, கெணாதியக்கன்,<br>
அருள்-சேர் பால சந்திரன்,தா-<br>
ரணி-சூழ் வக்கிர துண்டன்,உயர்<br>
மதி-செய் சூர்ப்ப கர்ணன்,ஏ-<br>
ரம்பன், கந்தன், மந்திரத்தால்<br>
வணங்கும் பூர்வ சகாயன்-என,<br>
வளர்-ஈ ரெட்டுப் பெரும்-பெயரும்<br>
பொதியும் சிறந்த அரும்பாத்தைப்<br>
புரி-வாழ் களிறே வருகவே!<br>
பொருள்-சேர் வேத விநாயகமாம்<br>
புனிதா வருக வருகவே!

*- அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ்* (2)

(துதிதோள் = *துதித்தற்குரிய தோள்களை உடைய*, துலங்கு = *விளங்குகின்ற*, பொதியும் = *நிறைந்த*)

(இந்தப் பாட்டில் விநாயகருக்குரிய சிறப்பான 16 பெயர்கள் அடங்கியுள்ளன. (இப்பெயர்கள் அடங்கிய அருச்சனைத் தொடர்கள் வடமொழி வழிபாட்டுப் பகுதியில் (பக்கம் 70) காணப்பெறுகின்றன). பாட்டு வடிவாகவே அமைந்த இந்தப் பதினாறு பெயர்களையும் பாடி விநாயகரை வழிபடுவது சிறப்புடையது.

இப்பாட்டில் கூறப்பெற்றுள்ள பதினாறு பெயர்களாவன: சுமுகன், ஏகதந்தன், கபிலன், கசகர்ணன், இலம்போதரன், விகடன், விக்கினராசன், அதிவிநாயகன் (விநாயகன்), தூமகேது, கெணாதியக்கன் (கணாதியக்ஷன்), பாலசந்திரன், வக்கிரதுண்டன், சூர்ப்பகர்ணன், ஏரம்பன், கந்தன் (ஸ்கந்தபூர்வன்), பூர்வசகாயன் (கஜானனன்).

***Forgiveness, means reconciliation, a coming together again.***<br>
***Without this, no man can love his enemies.***<br>
***The degree to which we are able to forgive***<br>
***determines the degree to which***<br>
***we are able to love our enemies.***

*- Martin Luther King*

Tudi-tōḷ Sumuhaṉ, Ēha-dantaṉ,
tulaṅgu Kapilaṉ, Gajakarṇaṉ,
sollum Lambōdaraṉ, Vikaṭaṉ,
tohum Vighṉarāsaṉ, puhaḻāl
ati-Viṉāyakaṉ, Dhūma-
kētuvudaṉē, Gaṇādhiyakkaṉ,
aruḷ-sēr Phālacandraṉ, tāraṇi
sūḻ Vakratuṇḍaṉ, uyar
mati-sey Sūrppakarṇaṉ,
Ērambaṉ, Kandaṉ, mandirattāl
vaṇaṅgum Pūrva sahāyaṉ eṉa,
vaḷar īreṭṭu-p perum peyarum
potiyum, siranda Arumpāttai-p
puri vāḻ kaḷirē varuhavē!
poruḷ sēr Vēda Viṉāyahamām
puṉidā varuha, varuhavē.

ஒளி-ஊறும் ஆவணித்-திங்கள் சதுர்த்தியினில்,
உலகுளோர் புரியும்-விரதத்து
உறு-கனிகள், கடலை,பய னோடு,இயல் பொரி,அமுது-உண்டு,
உரத்துப் பெருத்த-உதரம்,
களியூறு முக்கட் பிரானை-வந் திக்கும்-அக்
காலையில், கால்-மேல்-உறக்
கண்டு,நீ நகை-புரிந்து, உண்ட சாபமும்,உன்
கருத்தறியும், இளையவீரன்
துளியூறும் அமுதம் துளிப்ப,இரு கால்-கொண்டு
துவைய-விட் டதும்,உனக்கே
தோற்றும்-அத னால்,இவனை ஏற்று,இரவு கோடியேல்,
சுகம்-அலால் பயமில்லை-என்று,
அளியூறு வரும்-அரும் பாத்தைபுரி மழ-களிறோடு,
அம்புலீ! ஆட-வாவே!
ஆதி-கண பதியாகும் வேத-கண பதியினுடன்,
அம்புலீ! ஆட-வாவே!

*- மேலது* (3)

*(ஒளி மிகுந்த ஆவணிச் சதுர்த்தியின்போது, சதுர்த்தி விரதம் மேற்கொள்ளும் உலக மக்கள் விநாயகப் பெருமானுக்குப் பழம்-பயறு-பால்-பொரி-அன்ன வர்க்கம் ஆகியவற்றை ஆராதிக்கின்றனர்; அவற்றை அதிகமாக உண்டதால் அவருடைய வயிறு தொப்பையாகி விடுகிறது; அவ்வயிற்றோடு அவர் முக்கண்ணனாகிய சிவனை வழிபட்ட நேரத்தில், அவர் கால்*

*மேலிருக்கக் கண்டு சந்திரன் எள்ளி நகையாடுகிறான்; அதனால் சீற்றங்கொண்ட விநாயகர், சந்திரனை ஒளி இழக்கவும், சண்டாளனாகவும் சபித்து விடுகிறார். பின்னர், அவன்மீது இரக்கம் கொண்டு, ஆண்டில் ஒருநாள் (ஆவணி மாதக் கிருஷ்ணபட்ச சதுர்த்தியன்று) மட்டும் அச்சாபம் பலிக்கட்டும் என்று சாப விமோசனம் அருளுகிறார். அதனால் அந்த நாளில் சந்திரனைக் காண்போர் சண்டாளராவர் என்பது ஐதிகமாயிற்று. (இது, பிள்ளைத்தமிழ்க் கொத்து நூலினைப் பதிப்பித்த தி. சந்திரசேகரன் கூறும் கதை)*
*நாரதர் கொண்டு வந்த பழத்தின் காரணமாக விநாயகரின் கோபத்துக்கு இலக்கான பிரமதேவன் நடுநடுங்கினான்; அதைக் கண்டு சந்திரன் சிரிக்கவே, விநாயகர் சந்திரன் மீது சீற்றம் கொண்டு அவனைச் சபித்தார். பின்னர் ஆவணி மாதப் பூர்வபட்சத்தில் வரும் சதுர்த்தியன்று மட்டும் யாரும் சந்திரனைக் காணக்கூடாது என்று சாப விமோசனம் அருளினர். (இது விநாயக புராணம் கூறும் வேறு வகையான புராண வரலாறு)*
*நிலவே! இவ்வாறு விநாயகரின் சீற்றத்துக்கு உள்ளானதை நீ நன்கு அறிவாய். சிவ குமாரர்களில் ஒருவரான வீரபத்திரர் சீற்றத்துடன் காலால் உன்னைத் தேய்த்ததால், உன்னிலிருந்து அமுதம் சிதறியது. அதுவும் உனக்குத் தெரிந்ததே. இவ்வாறு அடுத்தடுத்துப் பலரின் சீற்றத்துக்கு ஆளான நீ, அரும்பாத்தை ஆதிகணபதி*யைத் தஞ்சமடைந்தாயானால், உனக்கு நலம் பயக்கும்; நீ இனிமேல் அஞ்ச வேண்டிவராது. எனவே, அக்குழந்தையுடன் (பால கணபதியுடன்) அம்புலி ஆட வருவாயாக!)*
( * அரும்பாத்தை என்னும் தலம் தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ளது; அங்கு தல விநாயகராக வீற்றிருப்பவர், ஆதிகணபதி என்னும் வேத கணபதி)
(பாட்டுடைத் தலைவனான குழந்தையுடன் விளையாட வருமாறு அம்புலியை(சந்திரனை) அழைப்பது, பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில், அம்புலிப் பருவம் எனப்பெறும். இது, குழந்தையின் 15, 16, 18ஆவது மாதத்திற்கு உரியது என்று பலவாறாகக் கூறுவர்.)

Oḷi ūṟum Āvaṇi-t tingaḷ caturttiyiṉil,
ulahuḷōr puriyum viradattu
uṟu kaṉihaḷ, kaḍalai, payaṉōḍu, iyal pori, amudu uṇḍu,
urattu-p perutta udāram,
kaḷiyūṟu Mukkaṭ-piraṉai vandikkum
ak-kālaiyil, kāl mēl uṟa-k
kaṇḍu, nī nahai purindu, uṇḍa sābamum, uṉ
karuttaṟiyum, iḷaiya vīraṉ
tuḷiyūṟum amudam tuḷippa, iru kāl koṇḍu
tuvaiya viṭṭadum, uṉakkē
tōṟṟum adaṉāl, ivaṉai ēṟṟu, iravu kōḍiyēl,
suham aḷāl bayamillai eṉṟu,
aḷiyūṟu varum Arumpāttai puri maḻa-kaḷiṟōḍu
ambulī! āḍa vāvē!
Ādi Gaṇapatiyāhum Vēda Gaṇapatiyiṉuḍaṉ
ambulī! āḍa vāvē!

10. <u>புராணங்கள் போற்றும் புகர்முகம்</u>
(புகர்முகம் = யானை)

சகல லோகமும் படைத்து,அளித்து, அழிக்கும்-தற் பரமாய்,
அகில லோகத்தும் புகலிடம் தனக்கு-இலா அமைவாய்ப்,
புகலு லோகங்கள் அனைத்திற்கும் புகலிடம் தானாய்ப்,
பகவன் ஆகிய கணேச!நின் பதமலர் தொழுதாம்.

- *விநாயக புராணம்* (1)

*(எல்லா உலகங்களையும் படைத்துக், காத்து, அழிக்கும் பரம்பொருள் விநாயகப் பெருமான்; எந்த உலகிலும் தமக்கெனப் புகலிடம் எதுவும் இல்லாதவர் அவர்; ஆனால் ஈரேழு பதினான்கு உலகங்களில் உள்ள அனைவருக்கும் புகலிடமாய் அவர் திகழ்கிறார்; ஐஸ்வரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களை உடைய பகவானாய்த் திகழும் அந்தக் கணேசப் பெருமானின் பாதமலர்களைப் பணிகின்றோம்)*

Sahala lōhamum paḍaittu, aḷittu, aḻikkum taṟparamāy,
ahila lōhattum puhaliḍam taṉakku-ilā amaivāy-p,
puhalu lōhaṅgaḷ aṉaittiṟkkum puhaliḍam tāṉāy-p,
Bahavaṉ āhiya Gaṇēsa! niṉ pada-malar toḻudām.

<u>விநாயக கவசம்</u>
(காசிப முனிவர் அருளியது - *விநாயக புராணம்*)

வளர்-சிகையைப் பராபரமாய் வயங்கு-விநா யகர்-காக்க;
வாய்ந்த சென்னி
அளவுபடா அதிக-சவுந் தர-தேக மதோற்கடர்தாம்
அமர்ந்து காக்க;
விளரற-நெற் றியை-என்றும் விளங்கிய-கா சிபர்-காக்க;
புருவம் தம்மைத்
தளர்வில்-மகோ தரர்-காக்க; தடவிழிகள் பாலசந்-
திரனார் காக்க;

கவின்-வளரும் அதரம்-கச முகர்-காக்க; தாலம்-கணக்-
கிரீடர் காக்க;
நவில்-சிபுகம் கிரிசை-சுதர் காக்க;நனி வாக்கை-விநா-
யகர்தாம் காக்க;
அவிர்நகை-துன் முகர்-காக்க; அள்ளெழில்-செஞ் செவி-பாச
பாணி காக்க;
தவிர்தல்-உறாது இளங்கொடி-போல் வளர்மணி-நா சியைச்,சிந்தி-
தார்த்தர் காக்க;

காமரு-பூ முகந்தன்னைக் குணேசர்-நனி காக்க;களம்
கணேசர் காக்க;
வாமமுறும் இரு-தோளும் வயங்கு-கந்த பூர்வசர்-தாம்
மகிழ்ந்து காக்க;
ஏமமுறு மணிமுலை-விக் கின-விநா சன்-காக்க;
இதயம் தன்னைத்
தோமகலும் கணநாதர் காக்க;அகட் டினைத்,துலங்கு-ஏ-
ரம்பர் காக்க;

பக்கம்-இரண் டையும்-தரா தரர்-காக்க; பிருட்டத்தைப்
பாவம் நீக்கும்
விக்கினஹ ரன்-காக்க; விளங்கு-இலிங்கம் வியாள-பூ-
டணர்-தாம் காக்க;
தக்க-குய்யம் தன்னை-வக் கிரதுண்டர் காக்க;சக-
னத்தை அல்லல்
உக்க-கண பன்-காக்க; ஊருவை-மங் கள-மூர்த்தி
உவந்து காக்க;

தாழ்-முழந்தாள் மகா-புத்தி காக்க;இரு பதம்-ஏக
தந்தர் காக்க;
வாழ்-கரம்-கிப் பிரப்-பிரசா தனர்-காக்க; முன்-கையை
வணங்கு வார்-நோய்
ஆழ்தரச்-செய் ஆசாபூ ரகர்-காக்க; விரல்-பதும
அத்தர் காக்க;
கேழ்-கிளரும் நகங்கள்-விநா யகர்-காக்க; கிழக்கினில்-புத்
தீசர் காக்க;

அக்கினியில் சித்தீசர் காக்க;உமா புத்திரர்-தென்
ஆசை காக்க;
மிக்க-நிரு தியில்-கணே சுரர்-காக்க; விக்கின-வர்த்
தனர்-மேற்கு என்னும்
திக்கதனில் காக்க;வா யுவில்-கசகன் னன்-காக்க;
திகழ்-உ தீசி
தக்க-நிதி பன்-காக்க; வடகிழக்கில் ஈச-நந்-
தனரே காக்க;

ஏகதந்தர் பகல்-முழுதும் காக்க;இர வினும்-சந்தி
இரண்டன் மாட்டும்
ஓகையின்-விக் கினகிருது காக்க;இராக் கதர்,பூதம்,
உறு-வே தாளம்,
மோகினி,பேய், இவையாதி உயிர்த்-திறத்தால் வரும்-துயரும்,
முடிவி லாத
வேகமுறு பிணி-பலவும் விலக்குபு-பா சாங்குசர்-தாம்
விரைந்து காக்க;

மதி,ஞானம், தவம்,தானம், மானம்,ஒளி, புகழ்,குலம்,வண்
சரீரம், முற்றும்
பதிவான தனம்,தானி யம்,கிரகம், மனைவி,மைந்தர்,
பயில்-நட்பு ஆதிக்
கதி-யாவும் கலந்து-சர்வா யுதர்-காக்க; காமர்,பவுத்
திரர்-முன் னான
விதியாரும் சுற்றமெலாம் மயூரேசர் எஞ்ஞான்றும்
விரும்பிக் காக்க;

வென்றி-சீ விதம்-கபிலர் காக்க;கரி யாதி-எலாம்
விகடர் காக்க;
என்று-இவ்வாறு இதுதனை-முக் காலமும்-ஓ திடில்,நும்பால்
இடையூறு ஒன்றும்
ஒன்றுறா; முனிவரர்காள்! அறிமின்கள், யார்-ஒருவர்
ஓதி னாலும்,
மன்ற-ஆங்கு அவர்-தேகம் பிணியற-வச்சிர தேகம்
ஆகி மன்னும்.

<u>குறிப்புரை:</u>

கவிஞர்கள் பாட்டுடைத் தலைவரின் (Hero of a poem) அழகை வருணிக்கும்போது, அவர்களது உச்சி(முடி, கேசம்) முதல் பாதம் வரை ஒவ்வோர் அங்கமாக வருணிப்பது மரபு. அதைக் **கேசாதிபாதம்*** என்பர்.

*(* அரங்கத்தம்மானின் ஆணையின் பேரில் லோகசாரங்க முனிவரால் அரங்கனின் சந்நிதிக்குத் தோளில் தூக்கிச் செல்லப் பெற்றவர் திருப்பாணாழ்வார். அரங்கனின் அழகில் மயங்கிய பாணர், அடி முதல் கண்கள் வரை (பாதகமலம், இடுப்பில் உள்ள பீதாம்பரம், உந்தி (நாபி), வயிற்றில் உள்ள உதரபந்தம், மார்பு, கண்டம் (கழுத்து), வாய், கண்கள், நீலமேனி என) அவனை வருணித்துப் பாடிய 10 பாசுரங்கள், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் அமலனாதிபிரானாக இடம் பெற்றுள்ளன. ஆனால் ஆதிசங்கரர் (சௌந்தரிய லஹரீயில்) அன்னையின் அழகைக் கேசாதிபாதமாக (தலையில் உள்ள கிரீடத்திலிருந்து பாதநுனி வரை) மாற்றிப் பாடியுள்ளார்)*

காசிபர் அருளிய இந்த விநாயக கவசமும் முதலில் சொன்ன கேசாதிபாத முறையில், ஒவ்வோர் அங்கத்தையும் *விநாயகர் காக்கக் கடவர்* என்று கூறிப் பாடப் பெற்றிருக்கிறது.

இக்கவசம் எல்லாவற்றுக்கும் மூலகாரணமாயும், எல்லாவற்றையும் அருள்பவராயும், முற்றறிவு உடையவராயும், எங்கும் உள்ளிருந்து நியமிப்பவராயும், எல்லாமாயும் இருப்பவரான **விநாயகக் கடவுளின் மகா மந்திரம்** என்று விநாயக புராணத்தில் (மயூரேச விநாயகர் திருவவதாரப் படலம்) கூறப்பெறுகிறது. இதைக் காசிப முனிவர் முத்கல முனிவருக்கும், அவர் மாண்டவ்ய முனிவருக்கும் உபதேசித்ததாகச் சொல்லப்பெறுகிறது.

சிகை (கேசம், தலைமயிர்), சென்னி (தலை), நெற்றி, புருவம், கண், உதடு, தாலம் (நாக்கு), சிபுகம் (மோவாய்), வாக்கு, நகை (பல்), செவி (காது), நாசி (மூக்கு), முகம், களம் (கழுத்து), தோள், முலை, இதயம், அகடு (வயிறு), விலாப்புறம், இடுப்புப் பூட்டு (Hip-joint), இலிங்கம் (ஆண்குறி), குய்யம் (ஜன்மேந்திரியம், கருவாய்கள், genetal organs), பிருட்டம் (ஆசனவாய் உள்ள பின்பகுதி, buttocks), சகனம், ஊரு (தொடை), கால், முழங்கால், பாதம், கை, முன்கை, விரல், நகம் ஆகிய மனித உறுப்புகளை, விநாயகர் (அவரைப் பல பெயர்களில் குறிப்பிட்டு+) காப்பாராக என்று பாடியுள்ளார்.

தொடர்ந்து, கிழக்கு, அக்கினி (தென்கிழக்கு), தெற்கு, நிருதி (தென்கிழக்கு), மேற்கு, வாயு (வடமேற்கு), உதீசி (வடக்கு), வடகிழக்கு என்னும் எட்டுத் திசைகளையும் ஏரம்பர் காக்க என்றும், பகல், இரவு, சந்தி இரண்டு ஆகியவற்றை ஆனைமுகன் காக்க என்றும், இராக்கதர் (ராக்ஷஸர்), பூதம், வேதாளம், மோகினி, பேய், மற்றும் உயிரினங்களால் ஏற்படக்கூடிய இடர்களையும், கடுமையான நோய்களையும் கணபதி களைவாராக என்றும் பாடுகிறார்.

இந்தக் கவசத்தைக் காலை, பகல், மாலை என்னும் மூன்று வேளைகளிலும் பாராயணம் செய்வோரைத் துன்பங்கள் தொடரா; உடல் நோயற்று, வஜ்ஜிரம் போன்று வலிமை பெறும் என்று கவசப் பாராயணப் பலன் கூறுவதோடு கவசம் நிறைவுறுகிறது.

விநாயக பக்தர்கள் இந்தக் கவசத்தை நாள்தோறும் ஓதி வாழ்வில் வளமும் நலமும் பெற்று இனிது வாழ இறைவன் அருள் புரிவாராக.

(+ கவசத்தில் கூறப்பெற்றுள்ள கணேசர் பெயர்கள்:

விநாயகர், மதோற்கடர் (மதச்செருக்கை உடையவர்), காசிபர் , மகோதரர் (பெரு வயிற்றினர்), பாலசந்திரன் (சந்திரனை நெற்றியில் அணிந்தவர்), கசமுகர் (ஆனைமுகர்), கணக்கிரீடர் (நெருக்கமான முடிகளை உடையவர்), கிரிசைசுதர் (மலைமகள் புதல்வர்), துன்முகர் (மாறுபட்ட முகத்தை உடையவர்), பாசபாணி (பாசக்கயிற்றைக் கையில் கொண்டவர்), சிந்திதார்த்தர் (விரும்பியவற்றைக் கொடுக்க வல்லவர்), குணேசர் (நல்ல குணங்களை மிகுதியாக உடையவர்), கணேசர் (கணங்களுக்குத் தலைவர்), கந்தபூர்வசர் (முருகனுக்கு முன் பிறந்தவர்), விக்கின விநாசன் (இடையூறுகளைப் போக்குபவர்), கணநாதர் (கணங்களுக்குத் தலைவர்), ஏரம்பர், தராதரர் (சங்கினைக் கரத்தில் ஏந்தியிருப்பவர்), விக்கினஹரன் (இடையூறுகளைப் போக்குபவர்), வியாளபூடணர் (அரவங்களை அணிகலனாகக் கொண்டவர்), வக்கிரதுண்டர் (வளைந்த தும்பிக்கையை உடையவர்), அல்லல் உக்க கணபன் (துயரம் துடைக்கும் சிவகணத் தலைவர்), மங்களமூர்த்தி (மங்களங்களைச் செய்பவர்), மகாபுத்தி (ஞானமிகுந்தவர்), ஏகதந்தர் (ஒற்றைத் தந்தத்தை உடையவர்), கிப்பிரப்பிரசாதனர் , ஆசாபூரகர் , பதுமஅத்தர் (தாமரைவாசர்), புத்தீசர் (ஞானோதயர்), சித்தீசர் (சித்திகளை வழங்குபவர்), உமாபுத்திரர், கணேசுரர் (கணங்களுக்கு ஈசர்), விக்கின வர்த்தனர் (மறக்கருணையாக உயிர்களுக்கு இடர்களை ஏற்படுத்திப் பின்னர் களைபவர்), கசகன்னன் (காதை அசைக்கும் வித்தையை (கசகர்ணம்) உடையவர்), தக்க நிதிபன் (நிதிகளுக்கு உரியவர்), ஈசநந்தன் (இறைவன் திருமகன்), ஓகையின் விக்கினகிருது , பாசாங்குசர் (பாச - அங்குசங்களை உடையவர்), சர்வாயுதர் (எல்லா ஆயுதங்களையும் உடையவர்), மயூரேசர் (மயிலூர்தியை உடையவர்), கபிலர் (கருமை கலந்த பொன் நிறத்தினர்), விகடர் (விகடங்கள் செய்பவர்).

Vaḷar sihaiyai-p parāparamāy vayaṅgu
Vināyahar kākka! Vāynda seṉṉi
aḷavu paḍā atiha savundara dēha
Madōrkkaḍar-tām amarndu kākka!
Viḷarara neṟṟiyai eṉṟum viḷaṅgiya
Kāsipar kākka! Puruvam-tammai-ṭ
taḷarvil Mahōdarar kākka! Taḍa viḻihaḷ
Phālasandiraṉār kākka!

ஐயனே! நீ தூய்மையானவன்; அருள் மயமானவன்; பொறுமைசாலி;
மெய்ம்மையாளன் என்று துணிந்து, உன்னைத் தஞ்சம் அடைந்தேன்.
நான் அற்பன், அறிவில்லாதவன்,
ஒரு பொய்யை மறைக்க ஆயிரம் பொய்களைச் சொல்லும் புரட்டன்
என்று கருதி, என்னை நீ கைவிட்டால்,
நான் வேறு யாரைத் தஞ்சம் அடைவேன்?

*- தாயுமானவ சுவாமிகள்*

Kaviṉ vaḷarum adaram Gajamuhar kākka!
Tālam Kaṇakkiriḍar kākka!
Navil sipuham kirisai sudar kakka! Naṉi
vākkai Vināyahar-tām kākka!
Avirnahai Tuṉmuhar kākka! Aḻḻeḻil
seṅsevi pāsapāṇi kākka!
Tavirdaluṟādu iḷaṅkoḍi pōl vaḷarmaṇi
nāsiyai-c cindidārttar kākka!

Kāmaru pūmuhan-taṉṉai-k Guṇēsar naṉi
kākka! Kaḷam Gaṇēsar kākka!
Vāmamuṟum iru tōḷum vayaṅgu
Kanda-pūrvasar-tām mahiḻndu kākka!
Ēmamuṟu maṇimulai Vigṉa Vināsaṉ
kākka! Idayam-taṉṉai-t
tōmahalum Gaṇanādar kākka! Ahaṭṭiṉai-t
tulaṅgu Ērambar kākka!

Pakkam iraṇḍaiyum tarātarar kākka!
Piruṭṭattai-p pāvam nīkkum
Vighṉaharaṉ kākka! Viḷaṅgu iliṅgam
Viyāḷa-pūḍaṇar tām kākka!
Takka kuyyam taṉṉai Vakratuṇḍar kākka!
Sahaṉattai allal
ukka Gaṇapaṉ kākka! Ūruvai
Maṅgaḷa mūrtti uvandu kākka!

Tāḻ, muḻantāḷ Mahāputti kākka!
Iru padam Ēha-dantar kākka!
Vāḻ-karam Kippira-p Prasādaṉar kākka!
Muṉ kaiyai vaṇaṅguvār nōy
āḻdara-c cey Āsā-pūrahar kākka!
Viral paduma attar kākka!
Kēḻ-kiḷarum nahaṅgaḷ Vināyahar kākka!
Kiḻakkiṉil puttīsar kākka!

Aggiṉiyil sittīsar kākka! Umā puttirar
teṉṉāsai kākka!
Mikka nirudiyil Gaṇēsurar kākka!
Vigṉa vardaṉar mēṟkku eṉṉum
tikkadaṉil kākka! Vāyuvil
Kasa-kaṉṉan kākka! Tihaḻ udīsi
Takka nidibaṉ kākka! Vaḍa kiḻakkil
Īsa nandaṉarē kākka!

Ēha-dantar pahal muḻudum kākka!
Iraviṉum, sandi iraṇḍaṉ māṭṭum
Ōhaiyiṉ Vighṉa-kirudu kākka!
Irākkadar, būdam, uṟu vēdāḷam,
mohiṉi, pēy, ivaiyādi uyir-t-tiṟattāl
varum tuyarum, muḍivilāda
vēhamuṟu piṇi palavum vilakkupu
Pāsāṅkusar-tām viraindu kākka!

Madi, ñāṉam, tavam, dāṉam, māṉam, oḷi,
puhaḻ, kulam, vaṇ sarīram, muṟṟum
pativāṉa daṉam, dāṉiyam, graham,
maṉaivi, maindar, payil naṭpu ādi
gati yāvum kalandu Sarvāyudar kākka!
Kāmar, pavuttirar muṉṉāṉa
vidiyārum suṟṟam elām Mayūrēsar
eññāṉṟum virumbi-k kākka!

Veṉṟi sīvidam Kapilar kākka!
Kariyādi elām Vihaḍar kākka!
Eṉṟu ivvāṟu idu-taṉai, mukkālamum
ōdiḍil, numpāl iḍaiyūṟu oṉṟum
oṉṟurā; Muṉivararhāḷ! aṟimiṉgaḷ!
Yāroruvar ōdiṉālum,
maṉṟa āṅgu avar dēham piṇiyaṟa
vajra dēham āhi maṉṉum.

## தோத்திராட்டகம் - காரியசித்தி மாலை

(விநாயக புராணம் - காசிபர் முதலியோர் அனுட்டித்த படலம்)

பந்தம் அகற்றும் அநந்த-குணப்
பரப்பும் எவன்-பால் உதிக்குமோ,
எந்த உலகும் எவனிடத்தில்
ஈண்டி இருந்து கரக்குமோ,
சந்த மறை,ஆ கமம்,கலைகள்
அனைத்தும், எவன்-பால் தக-வருமோ,
அந்த இறையாம் கணபதியை
அன்பு கூரத் தொழுகின்றாம். 1

உலகம் முழுதும் நீக்கமற
ஒன்றாய் நிற்கும் பொருள்-எவன்,அவ்
உலகில் பிறங்கும் விகாரங்கள்
உறாத மேலாம் ஒளி-யாவன்,
உலகம் புரியும் வினைப்-பயனை
ஊட்டும் களை-கண் எவன்,அந்த
உலக முதலைக், கணபதியை
உவந்து சரணம் அடைகின்றாம். 2

இடர்கள் முழுதும் எவன்-அருளால்,
எரி-வீ ழும்-பஞ்சு என-மாயும்,
தொடரும் உயிர்கள், எவன்-அருளால்
சுரர்-வாழ் பதியும் உறச்-செய்யும்,
கடவுள் முதலோர்க்கு ஊறு-இன்றிக்
கருமம் எவனால் முடிவுறும்,அத்
தடவு மருப்புக் கணபதி-பொற்
சரணம் சரணம் அடைகின்றாம். 3

மூர்த்தி யாகித், தலமாகி,
முந்நீர் கங்கை முதலான
தீர்த்த மாகி, அறிந்தறியாத்
திறத்தி னானும், உயிர்க்கு-நலம்
ஆர்த்தி, நாளும் அறியாமை
அகற்றி, அறிவிப் பான்-எவன்,அப்
போர்த்த கருணைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றாம். 4

செய்யும் வினையின் முதல்-யாவன்,
செய்யப் படும்-அப் பொருள்-யாவன்,
ஐயம் இன்றி உளதாகும்
அந்தக் கருமப் பயன்-யாவன்,
உய்யும் வினையின் பயன்-விளைவில்
ஊட்டி விடுப் பான்-எவன்,அந்தப்
பொய்யில் இறையைக் கணபதியைப்
புரிந்து சரணம் அடைகின்றாம். 5

வேதம் அளந்தும் அறிவரிய
விகிர்தன் யாவன், விழுத்தகைய
வேத முடிவில் நடம்-நவிலும்
விமலன் யாவன், விளங்கு-பர
நாத முடிவில் வீற்றிருக்கும்
நாதன் எவன்,எண் குணன்-எவன்,அப்
போத முதலைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றாம். 6

மண்ணின் ஓர்-ஐங் குணமாகி
வதிவான் எவன்,நீ ரிடை-நான்காய்
நண்ணி அமர்வான் எவன்,தீயின்
மூன்றாய் நவில்வான் எவன்,வளியின்
எண்ணும் இரண்டு குணமாகி
இயைவான் எவன்,வா னிடை-ஒன்றாம்
அண்ணல் எவன்,அக் கணபதியை
அன்பிற் சரணம் அடைகின்றாம். 7

பாச அறிவில், பசு-அறிவில்
பற்றற்கு அரிய பரன்-யாவன்,
பாச அறிவும், பசு-அறிவும்
பயிலப் பணிக்கும் அவன்-யாவன்,
பாச அறிவும், பசு-அறிவும்
பாற்றி, மேலாம் அறிவான
தேசன் எவன், அக்கணபதியைத்
திகழச் சரணம் அடைகின்றாம். 8

- *விநாயக புராணம்* (3)

(இவ்வெட்டுப் பாடல்களும் தோத்திராட்டகம் (துதிப்பதற்கு உரிய எட்டுப் பாடல்கள்) என வழங்கப்பெறும். இவற்றை விநாயகப் பெருமான் காசிபருக்கு அருளியதாக விநாயக புராணம் கூறுகிறது. இவற்றை நாள்தோறும் மும்முறையும், சதுர்த்தியன்று எட்டு முறையும் ஓதுவது சிறப்புடையது. விநாயக சஷ்டியை ஒட்டிய 21 விரத நாட்களிலும், நாளொன்றுக்கு 21 முறை ஓதினால், நினைத்த செயல் நிறைவேறும்)

1. உலக பந்தங்களை நீக்குவதாகிய கணக்கற்ற நற்குணங்கள் எக்கடவுளிடமிருந்து தோன்றுகின்றனவோ, எல்லா உலகங்களும் யாரிடம் பொருந்தியிருந்து மறைகின்றனவோ, இசை வடிவான மறை(வேதங்)கள், ஆகமங்கள், கலைகள் ஆகிய அனைத்தும் யாரிடமிருந்து தக்கவாறு உண்டாகின்றனவோ, அந்த இறையாகிய ஆனைமுகனை மிகுந்த அன்போடு வணங்குகின்றோம்.
2. எல்லா உலகங்களிலும் நீக்கமற ஒரே பொருளாக உயர்ந்து நிற்பவர் யாரோ, உலகத்தில் நிலவுகின்ற மாறுபாடுகள் எவையும் தம்மை வந்தடையாமல், தாம் எப்போதும் ஒரே நிலையுடைய மேலான ஒளியாகத் திகழ்பவர் யாரோ, உலகத்துயிர்கள் செய்கின்ற நல்வினை-தீவினைகளின் பயன்களை நல்கும் பற்றுக்கோடாக இருப்பவர் யாரோ, அந்த உலக முதற்பொருளாகிய கணபதியிடத்தில் மகிழ்ச்சியோடு அடைக்கலம் புகுகின்றோம்.
3. உயிர்களுக்கு ஏற்படும் துன்பங்கள் யாவும் யாருடைய திருவருளால் தீயிடைப்பட்ட பஞ்சு போன்று அழிந்து ஒழியுமோ, பல பிறப்புகளை அடையும் உயிர்கள் எக்கடவுளின் திருவருளால் தேவர் வாழும் உலகத்தை அடையுமோ, தேவர் முதலியோருக்கும் எத்தகைய இடையூறும் ஏற்படாமல், அவர்கள் தொடங்குகின்ற செயல்கள் யாவும் யாருடைய திருவருளால் இனிதே நிறைவுறுமோ, அத்தன்மை பொருந்திய - பெரிய தந்தங்களை உடைய ஆனைமுகக் கடவுளின் அழகிய திருவடிகளில் அடைக்கலம் புகுகின்றோம்.
4. கடவுளின் திருவடிவாகவும், அக்கடவுள் எழுந்தருளியுள்ள தலங்களாகவும், கடல்-கங்கை முதலான புனிதத் தீர்த்தங்களாகவும் விளங்கித், தம்முடைய மெய்ம்மைத்தன்மையை யாராலும் அளவிட்டு அறியமுடியாத நிலையில் நின்று, உலக உயிர்களுக்கு நலன்களை அருளி, அவ்வுயிர்களின் அறியாமையை அகற்றி அருளுகின்ற கடவுள் யாரோ, அக்கடவுளாகிய - நிறைந்த திருவருளினை உடைய ஆனைமுகனைப் போற்றிப் புகழ்ந்து அடைக்கலம் புகுகின்றோம்.
5. உலகோர் செய்யும் செயல்களுக்கு முதல்வராகத் திகழ்பவர் யாரோ, செய்யப்பெறுகின்ற செயல்களாகவும், ஐயத்திற்கிடமில்லாத அச்செயல்களின் பயனாகவும் பரிணமிப்பவர் யாரோ, உயிர்களை வாழச் செய்யும் நல்வினையின் பயன்களை நடைமுறையில் ஊட்டி விடுபவர் யாரோ, அந்தக் கடவுளை - மெய்ம்மையான தலைவராகிய ஆனைமுகக் கடவுளை அடி பணிகின்றோம்.
6. வேதங்களாலும் அளவிட்டு அறிய முடியாத மேன்மை படைத்தவர் யாரோ, வேதாந்தத்தில் கூத்து இயற்றும் மேலான கடவுள் யாரோ, மிகச் சிறந்த நாத தத்துவத்தின் முடிவில் வீற்றிருப்பவர் யாரோ, இறைத்தன்மையான எண்குணங்களையும் பெற்றிருப்பவர் யாரோ, மெய்யறிவு நிறைந்த அந்தத் தலைவரை, ஆனைமுகரைச் சரணடைகின்றோம்.
7. மண்ணின் ஐந்து குணங்களாகத் திகழ்பவரும், நீரின் நான்கு இயல்புகளாக விளங்குபவரும், நெருப்பிடத்துக் காணப்பெறும் மூன்று பண்புகளாகப் பொலிபவரும், காற்றின் இயல்பான இரு குணங்களாக இருப்பவரும், விண்ணின் ஒரே தன்மையை உடையவரும் ஆகிய ஆனைமுகக் கடவுளை அன்போடு அடைக்கலம் அடைகின்றோம்.
(மண்ணின் குணம் ஐந்து: சுவை, ஒளி, ஊறு (பரிசம், sense of touch), ஓசை, நாற்றம் (மணம்); நீரின் நான்கு குணங்கள்: சுவை, ஒளி, ஊறு, ஓசை; நெருப்பின் மூன்று குணங்கள்: ஒளி, ஊறு, ஓசை; காற்றின் இரு குணங்கள்: ஊறு, ஓசை; விண்: ஓசை)
8. உலகப் பற்றுள்ள அறிவினாலும், உயிர்த்தொகைகளின் அறிவினாலும் ஆய்ந்து அறிய முடியாத மேலானவர் யாரோ, உயிர்களிடத்து உலகப் பற்றுள்ள அறிவும், உயிர் அறிவும் பொருந்துமாறு செய்பவர் யாரோ, உலக அறிவையும், உயிர் அறிவையும் தம்முடைய திருவருளால் மாற்றி, மேலான மெய்யறிவைப் புகட்டும் ஞான ஒளியாகத் திகழ்பவர் யாரோ, அத்தன்மைகள் யாவும் அமையப்பெற்ற ஆனைமுகக் கடவுளை அடிபணிகின்றோம்.

Pandam ahaṟṟum ananda guṇa-p
parappum eveṉ-pāl udikkumō,
enda ulahum evaṉiḍattil
īṇḍiyirundu karakkumō,
sanda maṟai, āhamam, kalaihaḷ
aṉaittum, evaṉ-pāl taha varumō,
anda iṟaiyām Gaṇapatiyai
aṉbu kūra-t toḻuhiṉṟām. 1

Ulaha muḻudum nīkkamaṟa oṉṟāy
niṟkkum poruḷ evaṉ,
av-vulahil piṟaṅgum vihāraṅgaḷ
uṟāda mēlām oḷi yāvaṉ,
ulaham puriyum viṉai-p payaṉai
ūṭṭum kaḷai-kaṇ evaṉ, anda
ulaha mudalai Gaṇapatiyai
uvandu saraṇam aḍaihiṉṟām. 2

Iḍarhaḷ muḻudum evaṉ aruḷāl
eri vīḻum pañju eṉa māyum,
toḍarum uyirhaḷ evaṉ aruḷāl
surar vāl padiyum uṟa-c ceyyum,
kaḍavuḷ mudalōrkku ūṟinṟi-k
karumam evaṉāl muḍivuṟum,
at-taḍavu maruppu Gaṇapati poṟ-c
caraṇam saraṇam aḍaihiṉṟām. 3

Mūrttiyāhi-t, talamāhi,
munnīr Gaṅgai mudalāṉa
tīrttamāhi, aṟindaṟiyā-t
tiṟattiṉāṉum, uyirkku nalam
ārtti, nāḷum aṟiyāmai
ahaṟṟi aṟivippāṉ evaṉ,
ap-pōrtta karuṇai Gaṇapatiyai-p
puhaḻndu saraṇam aḍaihiṉṟām. 4



Seyyum viṉaiyiṉ mudal yāvaṉ,
seyyappaḍum ap-poruḷ yāvaṉ,
aiyam iṉṟi uḷadāhum anda-k
karuma-p payaṉ yāvaṉ,
uyyum viṉaiyiṉ payaṉ, viḷaivil
ūṭṭi viḍuppāṉ evaṉ, anda-p
poyyil iṟaiyai Gaṇapatiyai-p
purindu saraṇam aḍaihiṉṟām. 5

Vēdam aḷandum aṟivariya
vihirdaṉ yāvaṉ, viḻuttahaiya
vēda muḍivil naḍam navilum
vimalan yavan, viḷaṅgu para-
nada mudivil vīṟṟirukkum nādaṉ
evaṉ, eṇ guṇaṉ evaṉ, ap-
pōda mudalai Ganapatiyai-p
puhaḻndu saraṇam aḍaihiṉṟām. 6

Maṇṇiṉ ōr aiṅguṇamāhi
vadivāṉ evaṉ, nīriḍai nāṉgāy
naṇṇi amarvāṉ evaṉ, tīyiṉ
mūṉṟāy navilvāṉ evaṉ, vaḷiyiṉ
eṉṉum iraṇḍu guṇamāhi
iyaivāṉ evaṉ, vāṉiḍai oṉṟām
aṇṇal evaṉ, ak-Gaṇapatiyai
aṉbiṟ caraṇam aḍaihiṉṟām. 7

Pāsa aṟivil, pasu aṟivil
paṟṟaṟkku ariya paraṉ yāvaṉ,
pāsa aṟivum, pasu aṟivum
payila-p paṇikkum avaṉ yāvaṉ,
pāsa aṟivum, pasu aṟivum
pāṟṟi, mēlam aṟivāṉa
tēsaṉ evaṉ, ak-Gaṇapatiyai-t
tihaḻa-c caraṇam aḍaihiṉṟām. 8

அங்குமாய் இங்குமாகி, அநாதியாய்ப், பலவாயானைத்,
துங்க-மா முகமும்,தூய துதிக்கரம் தானும் இன்றிப்,
பங்கயப் பழன-வேலித் திலதையாம் பதியின் மேவும்,
புங்கவன் ஆதிநாதன், புது-மலர்த் தாள்கள் போற்றி!

*- திலதைப்பதித் தலபுராணம்* (4)

*(தேவரிற் சிறந்தவரும், ஆதிநாதன் என்னும் நாமம் பூண்டவருமான ஆனைமுகத்தோன் உறைவது, தாமரை மலர்கள் நிறைந்த வயல்களால் சூழப்பெற்ற திலதைத் தலம். அவர் அங்கு-இங்கு எனாதபடி எங்கும் நிறைந்தவர்; அநாதியானவர் (ஆதியில்லாதவர், தோற்றமில்லாதவர்); பல உருவானவர்; பெருமை பொருந்திய யானை முகத்தினர், துதிக்கை இல்லாதவர்; அப்பெருமானின் அன்றலர்ந்த மலர் போன்ற அடிக்கமலங்களைப் போற்றுகின்றோம்)*

Aṅgumāy iṅgumāhi, anādiyāy-p, palavāyaṉai-t,
tuṅga-mā muhamum, tūya tuti-k-karam tāṉum iṉṟi-p,
paṅgaya-p paḻaṉa vēli-t Tilataiyām padiyiṉ mēvum
puṅgavaṉ Ādi-nādaṉ pudu malar-t tāḷhaḷ pōṟṟi.

அருள்-எனும் கடல்-முகந்து, அடியர் சிந்தையாம்
பொருள்-பெறு நிலம்,சிவ போகம் முற்றிட,
வரமழை உதவு,செவ் வந்தி யானையின்
திருவடி இணைமலர் சென்னி சேர்த்துவாம்.

*- செவ்வந்திப் புராணம்* (5)

*(அருளாகிய கடல்நீரை முகந்து மேகமாகி, அடியார்களின் மனம் என்னும் நிலத்தில் சிவானந்தம் என்னும் பயிர் செழிப்புடன் வளர, வரம் என்னும் மழையைப் பொழிகின்றார் செவ்வந்தி விநாயகர்; அவருடைய மலர் போலும் இரு திருவடிகளைத் தலையிற் சூடிக் கொள்வோம்)*
(செவ்வந்தி (chrysanthemum) யைத் தலமரமாகக் கொண்டுள்ளதால், திருச்சிராப்பள்ளிக்குச் செவ்வந்தி என்று ஒரு பெயர் வழங்குகிறது; அத்தலத்து விநாயகர் செவ்வந்தி விநாயகர் ஆகிறார்)

Aruḷ eṉum kaḍal muhandu, aḍiyār sindaiyām
poruḷ peṟu nilam, siva-bōham muṟṟiḍa,
vara maḻai udavu, Sevvandi yāṉaiyiṉ
tiruvaḍi iṇai-malar seṉṉi sērttuvām.

ஓங்கும்-ஒரு மருப்பானை, உயிர்க்கு-உயிராய்
இருப்பானை, உரக வேந்தன்
தாங்கு-நெடு நிலத்து,ஆனை முகத்தானை
வதைத்தானைச், சயில மானைப்
பாங்கு-வைத்து, மழுத்தானைப் பரித்தான்-தந்து
அளித்தானைப், பசும்-பொன் தோட்டுப்
பூங்கமலப் பதத்தானைப், பொருவில்-ஐந்து
கரத்தானைப் போற்றல் செய்வாம்.

*- சிவராத்திரிப் புராணம்* (6)

*(பெருமை வாய்ந்த ஒற்றைத் தந்தத்தை உடையவர்; உயிர்களுக்கு உயிராக இருப்பவர்; ஆதிசேஷன் தாங்கும் (சுமந்து கொண்டிருக்கும்) நிலவுலகில், கயமுகாசுரன் என்னும் ஆனைமுக அசுரனை அழித்தவர்; மலைமகளை ஒரு பாகத்தில் கொண்டவரும், மழுவாயுதம் ஏந்தியவருமான சிவபெருமான் புதல்வர்; பசுமையான இதழ்களைக் கொண்ட தாமரை மலர் போலும் தாள்களை உடையவர்; இணையற்ற ஐந்து கரங்களைக் கொண்டவர்; அந்த ஆனைமுகனை அடி பணிந்து போற்றுவோம்)*

Ōṅgum oru maruppāṉai, uyirkku uyirāy
iruppāṉai, uraha vēndaṉ
tāṅgu neḍu nilattu, āṉai-muhattāṉai
vadaittāṉai-c, cayila māṉai-p
paṅgu vaittu, maḻuttāṉai-p parittāṉ tandu
aḷittāṉai-p, pasum-poṉ tōṭṭu-p
pūṅkamala-p padattāṉai-p, poruvil aindu
karattāṉai-p, pōṟṟal seyvām.

கரி-மீதும், பரி-மீதும், சுந்தரரும்,
சேரருமே கைலை செல்லத்,
தரியாது உடன்-செல்ல, ஔவையுமே
பூசை-புரி தரத்தை நோக்கிக்,
கரவாது துதிக்கையால் எடுத்து,அவர்கள்
செலு-முன்னம் கைலை விட்ட
பெரியானைக் கணபதி-தன் கழல்-வணங்கி,
விருப்பம்-எலாம் பெற்று வாழ்வாம்.

*- திருக்கோவலூர்ப் புராணம்* (7)

*(சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேரமான் பெருமாளும் முறையே வெள்ளானை மீதும், குதிரை மீதும் கயிலைக்குச் செல்வதை, விநாயகர் பூசை செய்து கொண்டிருந்த ஔவை மூதாட்டி கண்டனர்; தாமும் அவர்களுடன் செல்ல விரும்பி, வழிபாட்டை விரைவாகச் செய்ய முற்பட்டனர்; அதைக் கண்ணுற்ற விநாயகப் பெருமான், 'அவர்களுக்கு முன்னதாக உன்னைக் கயிலையில் சேர்ப்பிக்கிறேன்; அவசரமின்றிப் பூசையைச் செய்க' என்று கூறினர்.* (அந்த நேரத்தில் ஔவை மூதாட்டி பாடியதுதான் **சீதக்களபம்** என்று தொடங்கும் **விநாயகர் அகவல்** என்று கூறுகின்றனர் *- தகவல்: அபிதான சிந்தாமணி) அவருடைய வழிபாடு முடிந்ததும், கணேசர், தாம் கூறியவாறே ஔவையைத் தம் துதிக்கரத்தால் தூக்கிச் சுந்தரருக்கும், சேரமானுக்கும் முன்னதாகக் கயிலையில் சேர்த்தனர். அந்தப் பெரியானைக் கணபதியின் பெருமை மிகுந்த பொற்பாதங்களை வணங்கி, நம் கோரிக்கைகள் நிறைவேறப் பெற்று இனிது வாழ்வோம்)*

('எங்களுக்கு முன் எவ்வாறு கயிலைக்கு வந்தீர்?' என்று சேரமான் கேட்க, மதுர-மொழி நல்-உமையாள் சிறுவன் *(விநாயகர்)* மலரடியை, முதிர-நினைய *(தீவிரமாக வழிபட)* வல்லார்க்கு அரிதோ முகில்-போல் முழங்கி, அதிர வருகின்ற யானையும் தேரும் அதன்பின் சென்ற குதிரையும்..... குல-மன்னனே' என்று ஔவை விடையளித்ததாகப் பழம் பாடல் ஒன்று காணப்பெறுகிறது. *- அபிதான சிந்தாமணி)*

Kari mīdum, pari mīdum, Sundararum,
Sērarumē Kailai sella-t,
tariyādu uḍaṉ sella, Auvaiyumē
pūsai puri tarattai nōkki-k
karavādu tudi-k-kaiyāl eḍuttu, avarhaḷ
selu muṉṉam Kailai viṭṭa
Periyāṉai Gaṇapati-taṉ kaḻal vaṇangi,
viruppam elām peṟṟu vāḻvām

காமனைப்-போல் கரும்பு-எடுத்துத், தருமனைப்-போல்
கயிறு-ஏந்திக், கமழ்-பூங் கொன்றைத்
தாமனைப்-போல் மதி-சூடித், தம்பியைப்-போல்
முகமாறும் தன்மை பூண்டு,
மாமனைப்-போல் கோடு-ஏந்திக், குறுமுனி-போல்
கடலை-எல்லாம் வாரித் துய்த்துப்,
பூமனைப்-போல் எழுதி-வைக்கும், புகழுடை-வேல்
அடிக்-களிற்றைப் போற்றல் செய்வாம்.

*- திருச்சுழியல் புராணம்* (8)

*(திருச்சுழியல் தலத்தில் குடி கொண்டிருப்பவர் வேலடி விநாயகர். அவர், மன்மதன் கையில் கரும்பு வில் வைத்திருப்பது போன்று, கையில் கரும்பைத் தாங்கியிருக்கிறார்; தருமராசன் (அறக்கடவுள், இயமன்) தன் கையில் உலக உயிர்களின் உயிரைக் கவரும் பொருட்டுப் பாசக்கயிற்றினை வைத்திருப்பது போன்று, தம் கையில் பாசக்கயிற்றினைக் கொண்டிருக்கிறார்; மணங் கமழும் கொன்றை மாலை அணிந்த சிவபெருமானைப் போன்று, தம் முடியில் பிறைச் சந்திரனைத் தரித்திருக்கிறார்; கணபதியின் தம்பியான முருகனுக்கு முகங்கள் ஆறு (முகம் ஆறு) உள்ளன; விநாயகரோ முகம் மாறுபாடானவர் (முகம் மாறு = யானைமுகம்); இவருடைய மாமனான திருமால் (கிருஷ்ணாவதாரத்தில்) கோவர்த்தன மலையைத் (கோடு) தூக்கிப் பிடித்திருந்தார்; இவரோ கையில் கோடு (தந்தம்) தாங்கியிருக்கிறார்; குறுமுனி எனப்பெறும் அகத்தியர் கடல்நீரைப் பருகியவர்; இவர் கடலைப் பிரியர்; பூமன் எனும் நான்முகன் உலக உயிர்களின் தலைவிதியை எழுதுபவர் (நிர்ணயிப்பவர்); விநாயகர் மேரு மலையில் பாரதத்தை எழுதியவர்; இவ்வாறு புகழ்பெற்ற வேலடி விநாயகரைப் போற்றி வாழ்வோம்)*

Kāmaṉai-p pōl karumbu eḍuttu-t, Darumaṉai-p pōl
kayiṟu ēndi-k, kamaḻ pūṅ-koṉṟai-t
tāmaṉai-p pōl madi sūḍi-t, tambiyai-p pōl
muhamāṟum taṉmai pūṇḍu,
māmaṉai-p pōl kōḍu ēndi-k, kuṟu-muṉi pōl
kaḍalai ellām vāri-t tuyttu-p,
pūmaṉai-p pōl eḻudi vaikkum, puhaḻuḍai Vēlaḍi-k
kaḷiṟṟai-p pōṟṟal seyvām.

சீர்-பூத்த இதழி-புனை சிற்பரனார்,
அற்புதனார், சிவை-ஓர் பாகர்,
நீர்-பூத்த திரு-உளத்தில் நினைத்தபடி,
வேத-முனி நிகழ்த்த லோடும்,
ஏர்-பூத்த ஒரு-கோட்டால் இலகு-பார-
தம்,மேரு இடத்தே தீட்டும்,
போர்-பூத்த நெடுந்-தடக்கைப் பொல்லாத
பிள்ளை-பதம் போற்றல் செய்வாம்.

*- திருநெல்வேலிப் புராணம்* (9)

*(திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலின் தல விநாயகர், பொல்லாத பிள்ளையார். சிறப்பான கொன்றைப் பூவால் தொடுக்கப் பெற்ற மாலை அணிந்தவரான சிவபெருமான், அற்புதமானவர், உமையம்மையை ஒரு பாகத்தில் கொண்டவர்; அவர்தம் திருவுளப்பாங்கின் வண்ணம் தோன்றியவர் விநாயகப் பெருமான். (அல்லது, அவர் உளத்தில் நினைத்த வண்ணம்) வேத வியாசர் கூறியவாறு பொலிவான தம்முடைய ஒரு தந்தத்தால், நுண்மையான பாரதக் கதையை மேரு மலையில் தீட்டியவர் அவர்; துவாரத்துடன் கூடிய நீண்ட துதிக்கையை உடைய அந்தப் பொல்லாப்பிள்ளையின் பாதங்களைச் சரணடைவோம்; போற்றி வாழ்வோம்)*
(இப்பாடலுக்குரிய பொல்லாப்பிள்ளையார், பிள்ளை வரம் நல்கும் பேரருளாளர். அவரை, 41 நாள் விரதமிருந்து வழிபட்டால் புத்திரப்பேறு கிட்டும் என்று நம்பப் பெறுகிறது. அதனால் அவர் 'பிள்ளைத் துண்டு விநாயகர்' என்றும் போற்றப் பெறுகிறார்)

Sīr pūtta idaḻi puṉai sirpparaṉār,
arbudaṉār, Sivai ōr bāhar,
nīr pūtta tiru uḷattil niṉaittapaḍi,
Vēda-muṉi nihaḻttalōḍum,
ēr-pūtta oru kōṭṭāl, ilahu Bhāratam,
Mēru iḍattē tīṭṭum,
pōr pūtta neḍun taḍakkai-p Pollāda
piḷḷai padam pōṟṟal seyvām.

செஞ்-சந்தம், களபக் கொங்கைச்
செழுமலை இமய மங்கை,
கஞ்சம்-தங் கிய-பொன் போற்றும்
கருணை ஞானப்பூங் கோதை,
நஞ்சம்-தங்கு அமிர்தா உண்ட
நாதரோடு உகந்து பெற்ற,
அஞ்சந்திப் பிள்ளை செம்பொன்
அடி-மலர், முடி-மேல் கொள்வாம்.

*- திருக்காளத்திப் புராணம்* (10)

*(செழிப்பான இமயமலையின் அரசன் இமவான்; அவன் மகள் பார்வதி தேவி; சிவப்புச் சந்தனம், கஸ்தூரி ஆகியவற்றின் கலவையை அணிந்த மார்பகத்தை உடைய அவர், ஞானப்பூங்கோதையாகத் திருக்காளத்தியில் அமர்ந்து அருள் பாலிக்கிறார். தாமரை மலரில்*

*உறையும் திருமகளும் போற்றும் தகைமை உடையவர் அவர். கழுத்தில் தங்கிய ஆலகால நஞ்சினை அமிர்தம் போன்று உண்டவரான சிவபரம்பொருளும் (காளத்தியப்பர்) ஞானப்பூங்கோதையும் மகிழ்வோடு பெற்றெடுத்த பிள்ளை, திருக்காளத்தியின் தல விநாயகரான அஞ்சந்திப் பிள்ளை. (கோபுரத்தின் பக்கத்தில் உள்ள இவரைப் பஞ்சசந்தி விநாயகர் என்றும் அழைக்கின்றனர்.) அஞ்சந்தி விநாயகரது திருவடிகளை நம் முடி மேல் தாங்கி அவர்தம் அருள் பெறுவோம்)*

señcandam, kaḷaba-k koṅgai-c
 ceḻumalai Imaya maṅgai,
kañjam taṅgiya poṉ pōṟṟum
 karuṇai Ñāṉa-p-pūṅkōdai,
nañjam taṅgu amirtā uṇḍa
 nādarōḍu uhandu peṟṟa,
Añcandi-p piḷḷai semboṉ
 aḍi malar, muḍi mēl koḷvām.

**திகழ் தசக்கரச், செம்முகம் ஐந்துளான்,**
**சகட சக்கரத் தாமரை நாயகன்,**
**அகட சக்கு-அர வின்,மணியா உறை**
**விகட சக்கரன் மெய்ப்-பதம் போற்றுவாம்.**

*- கந்தபுராணம்* (11)

*(சிவபெருமானின் தேருக்குச் சக்கரமாக விளங்கிய சூரியனைத் தம் வயிற்றில் மணியாகக் கொண்டிருக்கின்ற விகட சக்கர விநாயகர், திருமாலின் படைத் தலைவனான விஷ்வக்சேனனின் விகடக் கூத்துக்கு மகிழ்ந்து, சக்கரத்தைத் திருமாலிடம் திரும்பக் கொடுத்ததால் விகட சக்கரன் என்று பெயர் பெற்றார். அந்த விநாயகப் பெருமானின் சத்தியத் திருவடிகளைப் போற்றி வழிபடுவோம்)*

(திகழ் தசக்கரம் = *விளங்குகின்ற பத்துக் கரங்கள்*; சகட சக்கரம் = *தேரின் சக்கரம்*; தாமரை நாயகன் = *சூரியன்*; அகட சக்கு அரவு = அகடு அசக்கு அரவு = *வயிற்றில் கட்டிய பாம்பு*; மணியா உறை = *பாம்பின் தலையில் உள்ள மணி போன்று சூரியனைக் கொண்டிருக்கின்ற*; மெய்ப்பதம் = *சத்தியத் திருவடிகள்*)

(சிவபெருமான் திரிபுரங்களை எரித்தபோது, பூமியைத் தேராகவும், சூரிய-சந்திரரை அத்தேருக்குச் சக்கரங்களாகவும் கொண்டிருந்ததாகப் புராண வரலாறு)

***That is a good book which is opened with expectation and closed with delight and profit.***

*- A.B. Alcott*

Tihal tasa-k kara-c, cem-muham aindulān,
sahada sakkara-t tāmarai nāyahan,
ahada sakku aravin, maniyā urai
Vihada sakkaran mey-p padam pōrruvām.

திருமன்னு வேள்வி,மறை முனிவர்-மனப்
புலத்து-எழுந்து, சிறப்பின் ஓங்கிக்,
கருணை-தழைத்து, அறம்-அரும்பி, ஞானம்-பூத்து,
அகல்வினையைக் காய்த்துத், தொல்லை
இருள்-அகன்ற முத்தி-பழுத்து, இன்ப-நறுஞ்-
சுவை,என்றும் இனிது நல்கும்,
மருமலி-பூம் பொழில்-ஆரூர் மாற்றுரைத்த
கற்பகத்தை வணங்கி வாழ்வாம்.

- *திருவாரூர்ப் புராணம்* (12)

*(மணம் மிகுந்த மலர்கள் செறிந்த சோலைகள் நிறைந்தது திருவாரூர்த் தலம்; அங்கு குளக்கரையில் உறைபவர், மாற்றுரைத்த விநாயகர்; அவரை இடைவிடாது ஏத்தி வழிபட்டால், தெய்விகமான வேதவிற்பன்னர்களின் (one who is learned in the Vedas) மனத்தகத்தே வேர் விட்டு முளைத்துச், சிறப்பாக வளர்ந்து, அருள் என்னும் இலைகளோடு தழைத்தோங்கி, அறம் என்னும் அரும்பு கட்டி, அது ஞானமாகப் பூத்துத், தீவினைகளை அழித்துப், பூர்வவினையாகிய அஞ்ஞானம் நீங்கிய பழமாகப் பழுத்து, அதிலிருந்து கிடைக்கும் இன்பம் என்னும் இனிய சுவையை, எப்போதும் அவர் நமக்கு வழங்குவார்; அந்த மாற்றுரைத்த அண்ணலை வணங்கி வளம் பெறுவோம்.*

(மாற்றுரைத்த கற்பகம் - சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுதுகுன்றத்தில் இறைவனிடம் பெற்ற பொற்காசுகளை அங்குள்ள மணிமுத்தாற்றில் இட்டுத், திருவாரூர்க் கமலாலயத்தில் தேடி எடுத்தார். அவை மாற்றுக் குறையாத பொற்காசுகள்தாமா என்று அறிந்து கொள்வதில், மேலைக் கோபுரத்தின் எதிரில் குளக்கரையில் உள்ள இந்த விநாயகர் உதவினாராம். அதனால் அவர் பெற்ற பெயரே மாற்றுரைத்த விநாயகர்)

Tiru mannu vēlvi, marai munivar mana-p
pulattu elundu, sirappin ōngi-k
karunai talaittu, aram arumbi, ñānam pūttu,
ahal vinaiyai-k kāyttu-t, tollai
irul ahanra mutti paluttu, inba naruñ
suvai, enrum inidu nalhum,
marumali pūm polil Ārūr Mārruraitta
Karppahattai vanangi vālvām.

பண்ணியம் ஏந்தும் கரம்-தனக்கு ஆக்கிப்,
பால்-நிலா மருப்பு-அமர் திருக்கை
விண்ணவர்க்கு ஆக்கி, அரதனக் கலச
வியன்-கரம் தந்தை-தாய்க்கு ஆக்கிக்,
கண்ணில் ஆணவ-வெங் கரி-பிடித்து அடக்கிக்,
கரிசினேற்கு இரு-கையும் ஆக்கும்
அண்ணலைத், தணிகை வரை-வளர் ஆபச்-
சகாயனை அகம்-தழீஇக் களிப்பாம்.

*- தணிகைப் புராணம்* (13)

*(ஆபத்சகாய (ஆபத்தில் உதவும்) விநாயகர், தணிகை - திருத்தணி-த் தல விநாயகர் ஆவார். அவர் தமக்கென ஒரு கையில் மோதகத்தை வைத்திருக்கிறார்; தேவர்களைக் காக்க ஒரு கரத்தில் நிலவொளி போன்ற வெண்மையான தந்தத்தை ஏந்தியிருக்கிறார்; தம் தாய்-தந்தையருக்கு அபிஷேகம் செய்து வழிபடும் பொருட்டுத் துதிக்கையில் இரத்தின கும்பத்தைக் கொண்டிருக்கிறார்; குற்றமுடைய அடியேனை ஆணவ மலமாகிய யானை துன்புறுத்தாமலிருப்பதற்கென (அடியார்களின் ஆணவ மலத்தை அடக்கும் வகையில்) தம் இரு கரங்களில் பாசம் - அங்குசம் ஆகியவற்றை வைத்திருக்கிறார்;* (அடியார்களுக்கு உதவுவதற்கென இரு கரங்களை வைத்திருப்பது, உலக உயிர்களிடத்து அவருக்குள்ள பெருங்கருணையைப் புலப்படுத்துகிறது). *அந்த அண்ணலை - பெருமைக்குரியவரை மனத்தால் தழுவி மகிழ்வோம்)*

(இவ்வாறு விநாயகரின் ஐந்து கரங்கள் அமைந்திருப்பது, அவர் ஐந்தொழில் புரிவதன் அடையாளமாக அமைகிறது என்றும் கூறுவர். கலசம் ஏந்திய கை படைப்புத் தொழிலையும், மோதகம் ஏந்திய கை காத்தல் தொழிலையும், அங்குசம் ஏந்திய கை அழித்தலையும், பாசம் ஏந்திய கை மறைத்தலையும், தந்தம் ஏந்திய கை அருளலையும் குறிக்கின்றன என்பர்)

Paṇṇiyam ēndum karam taṉakku ākki-p,
pāl-nilā maruppu amar tiru-k-kai
viṇṇavarkku ākki, arataṉa-k kalasa
viyaṉ karam tandai-tāykku ākki-k,
kaṇṇil āṇava veṅkari piḍittu āḍakki-k,
karisiṉēṟkku iru kaiyum ākkum
aṇṇalai-t, Taṇihai varai vaḷar
Āpa-c-cahāyaṉai, aham taḻī-k kaḷippām.

பவள-மால் வரையில் நிலவு-எறிப் பது-போல்,
பரந்த-நீற்று அழகு,பச் சுடம்பில்
திவள-மாது டன்-நின்று ஆடிய பரமன்
சிறுவனைப், பாரதப் பெரும்-போர்,
தவள-மா மருப்பு-ஒன்று ஒடித்து,ஒரு கரத்தில்
தரித்து,உயர் கிரிப்-புறத்து எழுதும்,
கவள-மா களிற்றின் திருமுகம் படைத்த
கடவுளை நினைந்து,கை தொழுவாம்.

*- திருவாதவூரடிகள் புராணம்* (14)

*(பெரிய பவளமலைமீது நிலவொளி வீசுவது போன்று, சிவபெருமானின் திருமேனியில் தரித்துள்ள வெண்ணீறு அழகுடன் ஒளி வீசித் திகழ்கிறது. அம்மையுடன் நின்று அவர் திருநடம் செய்யும்போது, அந்த வெண்ணீற்று அழகு, அம்மையின் பசுமையான உடலில் படிகிறது. அந்த அம்மையப்பரின் திருக்குமாரர், கவள உணவை உண்ணும் கரிய ஆண் யானையின் திருமுகத்தை உடையவரான விநாயகப் பெருமான். அவர், வெண்மையான தம்முடைய ஒரு பெரிய தந்தத்தை ஒடித்து, அதை எழுத்தாணியாகக் கொண்டு, பெரும் பாரதப் போர் வரலாற்றை, உயர்ந்த மேரு மலையாகிய ஏட்டில் எழுதியருளினர். அந்தப் பெருமானை உள்ளத்தில் தியானித்துக் கை கூப்பி வணங்குவோம்)*

Pavaḷa māl varaiyil nilavu eṟippadu pōl,
paranda nīṟṟu aḻahu, paccuḍambil
tivaḷa mātuḍan niṉṟu āḍiya Paramaṉ
siṟuvaṉai-p, Bārada-p perum pōr,
tavaḷa mā-maruppu oṉṟu oḍittu, oru karattil
tarittu, uyar giri-p puṟattu eḻudum,
kavaḷa mā kaḷiṟṟiṉ tirumuham paḍaitta
kaḍavuḷai niṉaindu kai toḻuvām.

மண்ணுல கத்தினில் பிறவி மாசு-அற,
எண்ணிய பொருள்-எலாம் எளிதின் முற்றுறக்,
கண்ணுதல் உடையதோர் களிற்று மா-முகப்
பண்ணவன் மலர்-அடி பணிந்து போற்றுவாம்.

- *கந்தபுராணம்* (15)

*(நிலவுலகில் வாழுங்காலத்தில், பிறப்பு என்னும் குற்றம் நீங்கவும், எண்ணங்கள், நினைத்த செயல்கள் யாவும் எளிதாக நிறைவேறவும், நெற்றிக்கண்ணையும், யானை முகத்தையும் கொண்ட விநாயகப் பெருமானின் மலர் போலும் திருவடிகளை வணங்கி வாழ்வோம்)*

Maṇṇulahattiṉil piṟavi māsu aṟa,
eṇṇiya poruḷ elām eḷidiṉ muṟṟuṟa-k,
kaṇṇudal uḍaiyadōr kaḷiṟṟu mā-muha-p
paṇṇavaṉ malar-aḍi paṇindu poṟṟuvām.

வஞ்சகத்தில் ஒன்றானைத், துதிக்கை-மிகத்
திரண்டானை, வணங்கார் உள்ளே
அஞ்சரணம் ஊன்றானை, மறை-சொலு-நால்
வாயானை, அத்தன் ஆகித்
துஞ்சு-அவுணர்க்கு அஞ்சானைச், சென்னி-அணி
ஆறானைத், துகள்-எ ழானைச்,
செஞ்-சொல்-மறைக்கு எட்டானைப், பரங்கிரி-வாழ்
கற்பகத்தைச் சிந்தை செய்வாம்.

(16)

இப்பாடலில் உள்ள 'துகள் எழானை' (குற்றமற்றவர்) என்னும் தொடர், குறுந்தட்டில் 'துகள் ஏழானை' என்று பிழையாகப் பாடப்பெற்றுள்ளது. பிழை பொறுக்க.

*(திருப்பரங்கிரியில் (திருப்பரங்குன்றத்தில்) குடி கொண்டுள்ள கற்பக விநாயகர், வஞ்சகத்துக்கு வசப்படாதவர்; பருத்த துதிக்கையை உடையவர்; தம்மை வணங்காதவரின் உள்ளங்களில் தம் அழகிய திருவடிகளைப் பதியாதவர்; வேதங்களை வழங்கிய தொங்குகின்ற வாயை (துதிக்கை) உடையவர்; கடவுளாகிய கற்பக விநாயகர், கொடிய அசுரர்களுக்கு அஞ்சாதவர்; சிரத்தில் கங்கையைத் தரித்தவர்; குற்றமற்றவர்; திருந்திய சொற்களாலான வேதங்களுக்கும் எட்டாதவர்; அப்பெருந்தகையை உள்ளத்தில் உருவெழுதி வழிபடுவோம்)*

(இப்பாடல், ஒன்றானை, தி(இ)ரண்டானை, ஊ(மூ)ன்றானை, நால்வாயானை, அஞ்சானை, ஆறானை, ஏழானை, எட்டானை என ஒன்று முதல் எட்டு வரையிலான எண்கள் வருமாறு பாடப்பெற்றுள்ளது.)

Vañjahattil oṉṟāṉai-t, tutikkai miha-t
 tiraṇḍāṉai, vaṇaṅgār uḷḷē
añjaraṇam ūṉṟāṉai, maṟai solu nāl
 vāyāṉai, attaṉ āhi-t,
tuñju avuṇarkku añjāṉai-c, ceṉṉi aṇi
 āṟāṉai-t, tuhaḷ eḻāṉai-c,
ceñsol maṟaikku eṭṭāṉai-p Paraṅgiri vāḻ
 Kaṟppahattai-c cindai seyvām.

11. <u>ஆனைமுகனின் அறுபடை வீடுகள்</u>

முருகனின் ஆறுபடை வீடுகளைப் போன்று, திருவண்ணாமலை, திருமுதுகுன்றம் (விருத்தாசலம்), திருக்கடவூர், திருஆலவாய், காசி, திருநாரையூர் ஆகிய ஆறு தலங்களை **விநாயகருக்குரிய ஆறுபடை வீடுகளாகக்** குறிப்பிட்டுச் சித்தாந்த வித்தகர் திரு. முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்கள், *ஸ்ரீஇராமகிருஷ்ண விஜயம்* மாத இதழில் கட்டுரை எழுதியிருந்தார்கள். அந்த அடிப்படையில் அந்த ஆறு தலங்களில் உள்ள விநாயக மூர்த்தங்களுக்கான பாடல்கள் அடுத்து வருகின்றன.

<u>திருவண்ணாமலை</u> (முதற் படைவீடு)
(வினை தீர்க்கும் விநாயகரான இவர், அல்லல்களைத் தீர்ப்பார்; வினைகளை வேரோடு களைவார்)

மதம்-மூன்றும் ஆறாக வரும்-களிற்று
 முகத்தானை, மனத்தி லே-தன்
பதம்-ஊன்றும் அருந்தவர்க்குப், பதம்-மூன்றும்
 கடந்த-பதம் பாலிப் பானை,
விதம்-மூன்று புரம்-கடிந்தார் அளித்து-அருளும்
 ஒரு-முதலை, வேரோடே சஞ்-
சிதம்-ஊன்று பிறப்பு-ஒழிக்கும் ஆனைதிறை-
 கொண்டவனைச் சிந்தை சேர்ப்பாம்.

*- அருணாசல புராணம்* (1)

*(மூன்று மதநீர்களும் ஆறாகப் பெருக்கெடுத்து ஓடும் ஆனைமுகத்தினர், அண்ணாமலையில் ஆட்சி செயும் ஆனைதிறை கொண்ட விநாயகர்*. தத்தம் உள்ளங்களில் தன் திருவடிகளைப் பதித்து வழிபடும் அடியவர்க்கு(அரிய தவத்தை உடையோருக்கு), சாலோகம் (கடவுள் இருக்கும் உலகத்தில் இருத்தல்), சாமீபம் (கடவுளுக்கு அருகில் இருத்தல்), சாரூபம் (கடவுளின்*

*உருவத்தைப் பெறுதல்) ஆகிய மூன்று முத்திப் பேறுகளுக்கு மேம்பட்டதான சாயுச்சியத்தை (சீவான்மா பரமான்மாவுடன் ஐக்கியமாகும் நிலை) அருள்பவர் இந்த விநாயகர். இரும்பு, வெள்ளி, பொன் என்னும் மூன்று வித நகரங்களை (கோட்டைகளை) எரித்து அழித்தவரான சிவபெருமான் அருளிய மேலான பரம்பொருள் ஆனைதிறை கொண்ட விநாயகர். சஞ்சிதம் (மென்மேலும் பிறவிகள் பெருகி வருவதற்குக் காரணமான வினை - இது இறையருள் ஞானத்தால் நீங்கும்), பிராரத்தம் (இது அனுபவிப்பதால் நீங்கும் வினை), ஆகாமியம் (இது நிர்வாண தீக்ஷை பெறுவதன் வழி நீங்கும்) என்னும் மூவகையான வினைகளை ஊன்றி நிற்கின்ற பிறவியினைத் திருவண்ணாமலையில் வீற்றிருக்கும் விநாயகர் வேரோடு அறுத்தொழிப்பார். இத்தகைய வினை தீர்க்கும் விநாயகரை - அருணைத் தலத்து விநாயகரை உள்ளத்தில் குடியேற்றி வழிபட்டு அருள் பெறுவோம்)*

(* தீமை பல செய்த மன்னன் ஒருவனை இந்த விநாயகர் கனவில் மருட்டினார் எனவும், அவன் அஞ்சி யானைகள் பலவற்றைக் கொண்டு வந்து கப்பமாகச் (திறை) செலுத்தி வணங்கியதால், **யானை திறை கொண்ட விநாயகர்** என வழங்கப் பெறுகிறார் என்றும் *சோணசைல மாலை* கூறுகிறது *- திருவண்ணாமலை மலர்*)

Madam mūṉṟum āṟāha varum kaḷiṟṟu
muhattāṉai, maṉattilē taṉ
padam ūṉṟum aruntavarkku-p, padam mūṉṟum
kaḍanda padam pālippāṉai,
vidam mūṉṟu puram kaḍindār aḷittu aruḷum
oru mudalai, vērōḍē sañjidam
ūṉṟu piṟappu oḷikkum Āṉai tiṟai
koṇḍavaṉai-c cindai sērppām.

<u>திருமுதுகுன்றம்</u> (இரண்டாவது படைவீடு)
(இங்குள்ள ஆழத்துப் பிள்ளையார் பொருட் செல்வமும், கல்விச் செல்வமும் தருவார்)

திருவும், கல்வியும், சீரும் தழைக்கவும்,
கருணை பூக்கவும், தீமையைக் காய்க்கவும்,
பருவ மாய்-நமது உள்ளம் பழுக்கவும்,
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

*- விருத்தாசலப் புராணம்* (2)

*(விருத்தாசலம் என்னும் திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருப்பவர் ஆழத்துப் பிள்ளையார். அவரை வழிபட்டால் செல்வம் கொழிக்கும்; கல்வியில் மேம்படலாம்; அழகும் பெருமையும் அதிகரிக்கும்; கருணை பெருகும்; தீமை அகலும்; உள்ளம் பக்குவம் அடையும். இவ்வாறு நம் வாழ்க்கை சிறப்புற, ஆழத்துப் பிள்ளையாரை ஆராதிப்போம்)*

(பெயருக்கேற்ப இவருடைய சந்நிதியும் ஆழத்திலேயே உள்ளது. திருக்காளத்தியிலும் இத்தகைய ஆழத்துப் பிள்ளையார் உள்ளார்.

காசிக்குச் சமமாகக் கருதப்பெறும் இத்தலம் விருத்தகாசி எனவும் வழங்குகிறது. இந்தக் கோயிலினுள் 28 ஆகமக் கோயில்கள் உள்ளன)

Tiruvum, kalviyum, sīrum tal̲aikkavum,
karuṇai pūkkavum, tīmaiyai-k kāykkavum,
paruvamāy namadu uḷḷam pal̲ukkavum,
peruhum Āl̲attu-p piḷḷaiyai-p peṇuvām.

ஒரு-மலையால் புரம்-அலையும்
ஒரு-மைந்தன் திரு-மைந்தன்,
இருமலையும், தும்மலையும்,
எதிர்-மலையும் வினை-மலையும்,
பொருமலையும், விம்மலையும்,
பொய்மலையும் புடைத்து-அருளிக்,
கருமலையும் பெருமலையிற்
கைம்மலையைக் கை-தொழுவாம்.

*- மேலது* (3)

*(மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களை வருத்தி அழித்த சர்வ வல்லமை படைத்தவர் சிவபெருமான். அவருடைய திருப்புதல்வர், மலை போன்ற கையை (துதிக்கையை) உடையவரான விநாயக மூர்த்தி. அந்த ஆனைமுகரை வழிபட்டால், வஞ்சகச் செயல்கள், வாழ்வில் ஏற்படும் இடர்கள், துன்பங்கள், துயரங்கள், நோய்கள், தீயவினைகளாகிய மலைகள் ஆகியவற்றை அழித்து, அவர் நம்மை ஆட்கொள்வார், அருள் புரிவார். மீண்டும் கருவில் புகாமல் காப்பார்)*

Oru malaiyāl puram alaiyum
oru maindan̲ tiru-maindan̲,
irumalaiyum, tummalaiyum,
edir malaiyum vin̲ai malaiyum,
porumalaiyum, vimmalaiyum,
poymalaiyum puḍaittu aruḷi-k,
karumalaiyum perumalaiyir̲
kai-malaiyai-k kai tol̲uvām.

## Seeking Refuge

*O Thou unchanging one!*
*source of my strength,*
*my support and refuge,*
*I lay my life humbly at Thy blessed Feet;*
*Use it as Thou seest fit;*
*I am Thine own.*

**திருக்கடவூர்** (மூன்றாவது படைவீடு)
(இவர் மரணபயம் நீக்குவார்)

**தண்டா யுதத்தையும், சூலா யுதத்தையும் தாங்கி,என்னைக்**
**கண்டு,ஆ வி-கொள்ள நமன்-வரும் வேளையில் காத்திடுவாய்,**
**வண்டு-ஆ ரவாரம்-செய் மாமலர்ச் சோலை, வளப்பமுடன்**
**விண்-தா விய-கட வூர்-வாழும் கள்ள விநாயகனே!**

*- திருக்கடவூர் கள்ளவிநாயகர் துதி* (4)

*(வண்டுகள் பேரளவில் ஆரவாரம் (ரீங்காரம்) செய்யும் விண்ணளாவிய பெரிய மலர்ச் சோலைகள் நிறைந்த திருக்கடவூர்த் தலத்தில் குடி கொண்டிருக்கும் கள்ளவிநாயகப் பெருமானே! தண்டாயுதம், சூலாயுதம் ஆகியவற்றை ஏந்தியவண்ணம், என்னைக் கண்டு என் உயிரைக் கவரக் காலன் (இயமன்) வரும் வேளையில், எனக்கு யமபயம் இல்லாமல் காத்தருள்வாயாக)*

**Daṇḍāyudattaiyum, sūlāyudattaiyum tāṅgi, eṉṉai-k**
**kaṇḍu, āvi koḷḷa namaṉ varum vēḷaiyil kāttiḍuvāy,**
**vaṇḍu āravāram sey mā-malar-c cōlai, vaḷappamuḍaṉ**
**viṇ tāviya Kaḍavūr vāḻum Kaḷḷa Vināyahaṉē!**

**திருஆலவாய்** (நான்காவது படைவீடு)
(இங்குள்ள சித்தி விநாயகர் செயல்களைச் செவ்வனே முடித்து வைப்பார்)

**உள்ளம்-எனும் கூடத்தில், ஊக்கம்-எனும்**
**தறி-நிறுவி, உறுதி யாகத்**
**தள்ளரிய அன்பெனும் தொடர்-பூட்டி,**
**இடைப்படுத்தித், தறுகட் பாசக்,**
**கள்ளவினைப் பசு-போதக் கவளம்-இடக்,**
**களித்து-உண்டு, கருணை என்னும்**
**வெள்ள-மதம் பொழி,சித்தி வேழத்தை**
**நினைந்து,வரு வினைகள் தீர்ப்பாம்.**

*- திருவிளையாடற் புராணம்* (5)

(மதுரை சொக்கநாதர்-மீனாட்சி கோயிலின் தல விநாயகர் சித்தி விநாயகர். அவரை வணங்கிய பின்னரே மாணிக்கவாசகர் குதிரை வாங்கச் சென்றாராம். அவரை நினைத்து ஒரு செயலைத் தொடங்கினால் உடனே சித்தியாகும் என்பது நம்பிக்கை)

*(சித்தி விநாயகரை உள்ளம் என்னும் யானை கட்டும் கூடத்தில், ஊக்கம் என்னும் கட்டுத்தறி அமைத்து, அதில் அன்பு என்னும் பேதித்தல் இல்லாத சங்கிலியால் கட்டுகிறோம். அந்த யானைக்கு வன்கண்மையான ஆணவத் தொடர்புடைய வஞ்சவினை, சீவபோதம் ஆகியவற்றை உணவாகப் படைக்கிறோம். (நம்முடைய ஆணவம், பசு ஞானம் ஆகியவற்றை அவருக்குக் காணிக்கை ஆக்கி விடுகிறோம்; அதாவது அவற்றை அவரிடம் ஒப்படைத்து விடுகிறோம்.) அந்த யானை உணவுகளை மகிழ்ச்சியாக ஏற்றுக் கொள்ளும் அவர், கருணை மழையை நம் மீது பொழிகிறார்; இவ்வாறு அந்த விநாயகப் பெருமானை மனத்தால் வழிபட்டுப், பிறவி தோறும் வரும் வினைகளைப் போக்கிக் கொள்வோம்)*

Uḻḻam eṉum kūḍattil, ūkkam eṉum
tari niṟuvi, uṟudiyāha-t
taḻḻariya aṉbeṉum toḍar pūṭṭi,
iḍaippaḍutti-t, taruhaṭ pāsa-k,
kaḻḻa viṉai-p pasu pōda-k kavaḻam iḍa-k,
kaḻittu uṇḍu, karuṇai eṉṉum
veḻḻa madam poḻi, Siddhi Vēḻattai
niṉaindu, varu viṉaihaḻ tīrppam.

<u>பொது (காசி துண்டிராச கணபதி)</u> (ஐந்தாவது படைவீடு)
(இவரை வழிபட்டால், எல்லாக் கடவுளரையும் வழிபட்ட பலன் கிட்டும்)

**ஓங்கார வடிவான உன்-பாத தாமரையும்,**
**உபய-பரி புர-ம றைகளும்,**
**உதிக்கின்ற செங்கதிர்கள் ஒரு-கோடி நிகர்-ஒளியும்,**
**உத்தூள நீற்றின் ஒளியும்,**
**பாங்கார் கசானனமும், முக-கரமும், வளர்-புயப்**
**பவள-அச லங்கள் நான்கும்,**
**பாசமுடன், அங்குசம், கொம்பு,ஓர் இலட்டுகம்,**
**பட்சமொடு வைத்த கரமும்,**
**நீங்காத அருள்-மாரி பொழியும் த்ரியம்பகமும்,**
**நிறையும் மும்மத மாரியும்,**
**நீள்-சடா-அட வியும்,வெண் பிறையும்,ஒரு தொந்தியும்,**
**நெஞ்சில்-ஒரு காலும் மறவேன்,**
**காங்கேயன் மகிழ்-தமைய னே!கங்கை நதி-பெருகு**
**காசி-வாழ் துண்டி ராச**
**கணபதி எனும்,பெரிய குண-மேரு வே!அருட்**
**கருணா நிதிக்-க டவுளே!**

*- காசி துண்டிராச கணபதி திருவருட்பா* (6)

*(கங்கை ஆறு வலமாகப் பெருகிப் பாயும் புனிதமான காசி நகரில் வீற்றிருந்து அருள் பாலிப்பவர் **டுண்டி விநாயகர்** என்றழைக்கப்பெறும் **துண்டிராச கணபதி**. ஓங்கார வடிவான அவருடைய பாத கமலங்களில் வேதங்கள் இரு பாதச் சிலம்புகளாக அமைந்து ஒலி எழுப்புகின்றன; ஒரு கோடி காலைக் கதிரவரின் பிரகாசமான செவ்வொளி போன்று அவர் திகழ்கிறார்; அவர் உடலில், குழையாது பரவலாகப் பூசப்பெற்ற திருநீறு ஒளிர்கிறது; அழகிய யானை முகத்தில் தும்பிக்கையையும், பவளமலைகள் போன்ற நான்கு தோள்களையும் அவர் கொண்டிருக்கிறார்; பாசக்கயிறு, அங்குசம் (யானைத் தோட்டி), ஒடிந்த ஒற்றைக் கொம்பு, மோதகம் ஆகியவற்றைப் பரிவோடு தம் கரங்களில் அவர் ஏந்தியிருக்கிறார்; அருள் பொழியும் அவருடைய மூன்று கண்கள், எந்த நேரமும் தம் அடியாருக்குக் கருணை மழையைப் பொழிந்து கொண்டிருக்கின்றன; மும்மதங்கள் அருவி போன்று பெருகி வழிந்து கொண்டிருக்கின்றன; காடு போன்று அடர்ந்த அவருடைய நீண்ட சடை முடியில், வெண்மையான பிறைச் சந்திரன் ஒளிர்கிறது; பெருத்த வயிற்றினைக் கொண்ட அழகிய அவருடைய திருமேனியை எளியேன் எந்த நேரமும் உள்ளத்தில் வைத்து மறவாது பூசித்துக் கொண்டிருக்கின்றேன். காங்கேயன் என்றழைக்கப்பெறும்*

*முருகவேளுக்கு மூத்தவரே! பெரிய குணக் குன்றே! அருள் பாலிக்கும் கருணை நிறைந்த கடவுளே! அடியேனுக்கும் அருள் புரிவீராக)*

Ōṅgāra vaḍivāṉa uṉ pāda tāmaraiyum,
upaya paripura maṟaihaḷum,
udikkiṉṟa seṅkadir oru kōḍi nihar oḷiyum,
uttuḷa niṟṟiṉ oḷiyum,
pāṅgār gajāṉaṉamum, muha karamum, vaḷar puya-p
pavaḷa asalaṅgaḷ nāṉgum,
pāsamuḍaṉ, aṅgusam, kombu, ōr ilaṭṭuham,
paṭṣamoḍu vaitta karamum,
nīṅgāda aruḷ māri poḻiyum triyambahamum,
niṟaiyum mummada māriyum,
nīḷ saḍā aḍaviyum, veṇ piṟaiyum, oru tondiyum,
neñjil oru hālum maṟavēṉ,
Kāṅgēyaṉ mahiḻ tamaiyaṉē! Gaṅgai nadi peruhu
Kāsi vāḻ Tuṇḍi rāsa
Gaṇapati eṉum, periya guṇa mēruvē! aruṭ-
karuṇānidi-k kaḍavuḷē!

"அருளால் உருக்கொண்ட ஆனந்த வெள்ளமே!
அனந்த சூரியர் உதயமே!
ஆயிரம்-கோடி சந்திரர் உதயமே! இன்பம்-
ஆன மழை-பொழி மேகமே!
திருவே! பெருஞ்-செல்வ மே!காம தேனுவே!
சிந்தா மணிக் குவியலே!
தேனுவின் பாலுடன், கற்பகப் பூவில்-எழு
செந்தேன் கலந்த கடலே!
தருவான கற்பகச் சோலையே! எல்லாம்
தரும்-பெரிய பதும-நிதியே!
சங்க-நிதியே! உண்ண உண்ணத் தெவிட்டாத
தண்-அமு தின்-அதி மதுரமே!
கருவூல மே!"என்று, உனைப்-பாடி உருக-அருள்,
காசி-வாழ் துண்டி ராச
கணபதி எனும்-பெரிய குண-மேரு வே!அருட்-
கருணா நிதிக்-க டவுளே!

- மேலது (7)

(*அனந்த = அநேக, எண்ணிலாத ; சிந்தாமணி = விரும்பியவற்றைக் கொடுக்கும் தெய்வமணி ;* தேனு = *தேவலோகப் பசுவான காமதேனு* ; கற்பகச் சோலை = *வேண்டியவர்க்கு*

*வேண்டியவற்றைக் கொடுக்கும் தேலோக மரங்களடர்ந்த சோலை; பதுமநிதி, சங்கநிதி = தாமரை, சங்கு வடிவிலான குபேரனிடமுள்ள செல்வங்கள்; தண் அமுது = இனிய அமிர்தம், அதி மதுரம் = மிகுதியான இனிமை; கருவூலம் = நிதியறை, நிதிக் குவியல்.*
*"இவ்வாறெல்லாம் உன்னைப் புகழ்ந்து பாடி மனம் உருகி வழிபட அருள் செய்வாயாக" என்று துண்டி ராச கணபதியை வேண்டுவோம்)*

"Arul̤āl uru-k kon̤d̤a ān̲anda vel̤l̤amē!
Ān̲anda sūriyar udayamē!
Āyiram kōd̤i sandirar udayamē! in̲bamān̲a
Mal̲ai pol̲i mēhamē!
Tiruvē! Perun̲-selvamē! Kāmadēn̲uvē!
sindāman̤i-k kuviyalē!
Tēn̲uvin pāludan̲, kar̲ppaha-p pūvil el̲u
sentēn̲ kalanda kad̤alē!
Taruvān̲a kar̲paha-c cōlaiyē! Ellām
tarum periya paduma nidiyē!
Saṅga nidiyē! Un̤n̤a un̤n̤a-t tevit̤t̤āta
tan̤ amudin̲ adi maduramē!
Karuvūlamē!" en̲r̲u un̲ai-p pād̤i uruha arul̤,
Kāsi vāl̲ Tun̤d̤i Rāsa
Gan̤apati en̲um periya gun̤a Mēruvē! Arut̤
karun̤ānidi-k kadavul̤ē!

<u>திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார்</u> (ஆறாவது படைவீடு)
(இவர் ஞானம் தருவார்)

தன்னைக் குறித்த திருப்பணியும்,
சான்றோர் பிறர்க்குச் செயும்-பணியும்,
முன்னைத் தனது வழிபாடு
முடிப்போர்க்கு, இனிதா முடிப்போனை,
என்னை நினைத்துத் தனது-பணி
இயற்றப் பணித்த இபமுகனைப்,
புன்னைத் தரு-சூழ் திருநாரைப்
பொல்லா முதல்வன் தனைப்-பணிவாம்.

- *திருநாரையூர்த் தலபுரணாம்* (8)

*(இறைவன் திருப்பணியும், அடியார் பணியும் செய்யும் முன்னர் விநாயகரை வழிபட்டால், எடுத்த செயல் இனிதே நிறைவேறும். தனக்குரிய இந்தத் திருப்பணியை மேற்கொள்ளுமாறு எளியேனைப் பணித்த யானை முகத்தவனைப், புன்னை மரங்கள் சூழ்ந்த* (திருநாரையூர்த் தலத்தின் தலமரம் புன்னை.) *திருநாரையூர்ப் பொல்லா விநாயகரைப் போற்றி வழிபடுவோம்)*

Taṉṉai-k kuṟitta tiruppaṇiyum,
sāṉṟōr piṟarkku-c ceyum paṇiyum,
muṉṉai-t taṉadu vaḻipāḍu
muḍippōrkku, iṉidā muḍippōṉai,
eṉṉai niṉaittu-t taṉadu paṇi
iyaṟṟa-p paṇitta Iba-muhaṉai-p,
puṉṉai-t taru-sūḻ Tirunārai-p
Pollā mudalvaṉ-taṉai-p paṇivām.

12. <u>நக்கீரர் வணங்கும் நால்வாயன்</u>

*(நால்வாயன் = தொங்குகின்ற தும்பிக்கையை உடையவன்)*
*(நக்கீரர் அருளிய விநாயகர் அகவலின் ஒரு பகுதி)*

குருவே சரணம், குணமே சரணம்,
பெரு-வயிற் றோனே பொற்றாள் சரணம்
கண்ணே, மணியே, கதியே சரணம்,
விண்ணே, ஒளியே, வேந்தே சரணம்,
மானத வாவி மலர்த்-தடத்து அருகில்,
தானத்தில் வாழும் தற்பரா சரணம்,
உச்சிப் புருவத்து உதித்து,உலகு அளிக்கும்
சச்சிதா னந்த சற்குரு சரணம்,
விக்கின விநாயக தேவே சரணம்.

*- நக்கீரர், விநாயகர் திருவகவல்*

*(மானதவாவி = கயிலைக்குக் கீழுள்ள புண்ணியத் தீர்த்தம், மனமாகிய தடாகம்; தானம் = இடம்; தற்பரன் = பரம்பொருள்)*

Guruvē saraṇam, Guṇamē saraṇam,
Peru vayiṟṟōṉē poṟṟāḷ saraṇam,
Kaṇṇē, Maṇiyē, Gatiyē saraṇam,
Viṇṇē, Oḷiyē, Vēndē saraṇam,
Māṉada vāvi malar-t taḍattu aruhil,
tāṉattil vāḻum Taṟparā saraṇam,
Ucci-p puruvattu udittu, ulahu aḷikkum
Saccidāṉanda Saṟ-Guru saraṇam,
Vigṉa Vināyaha Dēvē saraṇam.



**(18ஆம் நூற்றாண்டு ஓவியம்)**

(அருங்காட்சியம், புது டில்லி)




**(ஸ்ரீ விக்னேஸ்வரி - சுசீந்திரம்)**

(நன்றி: சக்தி விகடன்)

**ஸ்ரீலங்கா உரும்பிராய்**
**ஸ்ரீ கருணாகரப் பிள்ளையார்**

(நன்றி: சிவஸ்ரீ பரமேஸ்வரக் குருக்கள்)

13. <u>பக்தி நூல்களில் பாசாங்குசதரன்</u>
(பாசாங்குசதரன் = பாசத்தையும் அங்குசத்தையும் ஏந்தியிருக்கும் விநாயகர்)

**வாக்குண்டாம், நல்ல மனம்-உண்டாம், மா-மலராள்**
**நோக்குண்டாம், மேனி நுடங்காது, - பூக்கொண்டு**
**துப்பார் திரு-மேனித் தும்பிக்கை யான்-பாதம்**
**தப்பாமல் சார்வார் தமக்கு.**

*- மூதுரை* (1)

('விநாயகர் அருள் பெறுவதற்குச் சிரமமான வழிபாட்டு முறை எதுவும் இல்லை, தேவையுமில்லை. உடம்பைச் சிரமப்படுத்திக் கொள்ளாமல் ஓரிரு மலர்களைத் தூவி அவர்தம் திருவடிகளைத் தவறாமல் வழிபட்டு வந்தாலே போதுமானது' என்று, இப்பாடலில் ஔவை மூதாட்டி அறிவுரை பகர்கிறார்.

*பவளம் போன்று சிவந்த திருமேனியை உடைய தும்பிக்கையாழ்வாரான விநாயகப் பெருமானின் திருவடிகளில், நாள்தோறும், எந்தச் சிரமமும் இல்லாமல், ஆனால் மறவாமல், சில மலர்களைத் தூவி வழிபடுவோருக்குக், கல்வி ஞானம் கைவரப்பெறும், சொல்வளம் பெருகும் (வாக்குப் பலிதம் ஏற்படும் என்று கூடச் சொல்லலாம்); உயர்ந்த எண்ணங்களிலேயே உள்ளம் ஈடுபடுவதற்கான பக்குவம் ஏற்படும்; திருமகளின் (லக்ஷ்மியின்) திருவருள் கிட்டும் (செல்வச் செழிப்பு ஏற்படும்)*

(மேனி என்பது குப்பைமேனி (Indian acalypha) என்னும் மூலிகை (medicinal herb) வகையைக் குறிக்கும் என்று சொல்லி, இப்பாடல் மருத்துவத்துறை சார்ந்த பாடல் என்றும் கூறுவர்)

Vākkuṇḍām, nalla maṉam uṇḍām, mā-malarāḷ
nōkkuṇḍām, mēṉi nuḍaṅgādu, pūkkoṇḍu
tuppār tiru mēṉi-t tumbikkaiyāṉ pādam
tappāmal sārvār tamakku.

**சொன்னமும் தா,நல்ல தோகையும்**
**தா,நல் துரைத்தனம்-தா,**
**வன்னமும் தா,பெரு வாழ்வையும்**
**தா,சிறு மைந்தரும்-தா,**
**இன்னமும் சென்மம் எடுத்தால்,**
**ஒருவருக்கு ஈகையும்-தா,**
**அன்னமும் தா,முத்தி யும்-தா,**
**செருத்தணி ஐங்கரனே!**

*- திருத்தணிகைச் சந்நிதிமுறை, ஐங்கரமாலை* (2)

*(முருகப் பெருமானின் சினம் தணியப்பெற்ற இடமாதலின் செருத்தணி எனவும் வழங்கும் திருத்தணி(கை)யில் வீற்றிருக்கும் விநாயகப் பெருமானே! அடியேன் வாழ்வு சிறக்கப் பொன்னையும் பொருளையும், நல்ல மனைவி-மக்களையும் வழங்குவாயாக! மேலான கல்வியறிவையும், அதனால் கிட்டும் பெரிய வாழ்க்கையையும் உன்னிடம் யாசிக்கின்றேன். நாட்டில் நீதியும் அமைதியும் நிலவ, நெறி பிறழாத நிலையான அரசு தேவை; அதனையும் அருள்வாயாக! தீவினை காரணமாக மறுபிறப்பு ஒன்று அடியேனுக்கு அமையுமானால், அப்பிறப்பில், பிறருக்கு இல்லை என்னாது வழங்கும் ஈகைத் தன்மையையும், அதற்கான வாய்ப்பு-வசதிகளையும் அருள்வாயாக. அப்பிறவியிலாவது அடியேன் முத்திப்பேற்றினை அடைய உன் அருளை நாடுகின்றேன்)*

Soṉṉamum tā, nalla tōhaiyum
tā, nal turaittaṉam tā,
vaṉṉamum tā, peru vāḻvaiyum
tā, siṟu maindarum tā,
iṉṉamum seṉmam eḍuttāl,
oruvarukku īhaiyum tā,
aṉṉamum tā, muttiyum tā,
Seruttaṇi Aiṅkaraṉē!

சுரகு லாதிபன் தூய்-மலர் நந்தனம்
பெருக, வார்-கடல் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த, மதகரி
சரணம், நாளும் தலைக்கு-அணி ஆக்குவாம்.

*- பிரபுலிங்க லீலை* (3)

*(சூரபதுமனுக்கு அஞ்சிச், சீகாழியில் ஒரு மூங்கிலில் ஒளிந்திருந்த இந்திரன், அங்கு ஒரு மலர்த் தோட்டம் அமைத்து, அம்மலர்களைக் கொண்டு சிவபூசை செய்து வந்தான். அசுரர்களின் அட்டகாசத்தால் அந்த நந்தவனம் உலர்ந்து போயிற்று. அத்தோட்டத்தை மீண்டும் செழிக்கச் செய்ய வேண்டுமானால், அகத்தியரின் கமண்டலத்தில் உள்ள காவிரி பெருக்கெடுக்க வேண்டும் என்று நாரதர் கூறினர். இதே இந்திரனை முன்னொருமுறை காப்பாற்றும் பொருட்டுக் கடல்நீரை ஆசமனம் செய்து தம் வயிற்றினுள் அடக்கியவர் இந்த அகத்திய முனிவர். கவேரன் என்னும் அரசனின் மகள், சாபத்தின் காரணமாகக் காவேரி என்னும் நதி உருவடைந்து அகத்தியரின் கமண்டலத்தினுள் அடைந்திருந்தாள். தேவர்களின் தலைவனான இந்திரன் கேட்டுக் கொண்டதற்கிணங்க, விநாயகப் பெருமான் காகத்தின் உருவெடுத்து அகத்தியரது கமண்டலத்தைக் கவிழ்க்க, அதிலிருந்து காவேரி பெருக்கெடுத்தது என்பது புராண வரலாறு. அத்தகைய யானை முகத்தவரின் திருவடிகளை நாள்தோறும் நம் சிரம்படப் பணிந்து போற்றுவோம்)*

Surakulādipaṉ tūy malar nandaṉam
peruha, vār kaḍal peyda vayiṟṟiṉōṉ
karaha nīrai-k kaviḻtta, madakari
saraṇam, nāḷum talaikku aṇi ākkuvām.

கண்ணார் நுதலனைக், காதார்
குழையனைக், காற்-சிலம்பாம்
பண்ணார் மறையனைப், பாவார்
துதியனைப், பார்ப்பதி-தன்
எண்ணார் முதற்-சுத கற்பக
தாருவை,என் றும்-குன்றாத்
தண்ணார் வயல்-மரு தங்கூர்
இறைவனைச் சார்மின்களே!

*- கற்பக விநாயகர் துதி* (4)

*(மாறாத குளிர்ச்சி பொருந்திய வயல்களால் சூழப்பெற்ற மருதங்கூர் என்னும் பெயரை உடைய பிள்ளையார்பட்டியில் வீற்றிருந்து அருள் பாலிப்பவர், கற்பக மரம் போன்று அடியார் வேண்டியவற்றை வழங்கும் கற்பக விநாயகர். பார்வதி அம்மையின் மதிப்புக்குரிய மூத்த பிள்ளையான அவர், நெற்றிக்கண்ணை உடையவர்; காதில் குண்டலங்கள் அணிந்து திகழ்பவர்; இசையுடன் கூடிய வேதங்களே காற்சிலம்புகளாக அமைந்து அழகு செய்ய அமர்ந்திருப்பவர்; பாவலர்கள் சொல்மாலைகள் சூட்டி மகிழ, அவர்களுக்கு அருள் புரிபவர்; அவ்விநாயகப் பெருமானைச் சென்று வழிபட்டுச் சீரும் சிறப்பும் பெறுங்கள்)*

Kaṇṇār nudalaṉai-k, kādār
kuḻaiyaṉai-k, kāṟ-cilambām
paṇṇār maṟaiyaṉai-p, pāvār
tudiyaṉai-p, Pārppadi-taṉ
eṇṇār mudar-cuda Kaṟppaha
dāruvai, eṉṟum kuṉṟā-t
taṇṇār vayal marutaṅgūr
Iṟaivaṉai-c cārmiṉkaḷē.

**அகன்ற கடல்-அலை-பாய் ஆறு-வலம் சூழ்ந்து,**
**புகழார் மலாக்காவில், பொற்றாள் - அகத்து-இருத்தி,**
**மெய்-அன்பால் வந்திப்பார் வேண்டு-நிதி ஈந்து-அருளும்**
**பொய்யாத ஐங்கரனைப் போற்று.**

*- மலாக்கா பொய்யாத விநாயகர் புகழ்ப்பா* (5)

*(ஆற்று வளத்தை உடைய புகழ் பெற்ற மலாக்கா நகரம், கடலால் சூழப்பெற்றது. அங்குள்ள மிகப் பழைமையான கோயிலில் குடி கொண்டிருப்பவர் பொய்யா(த) விநாயகர். அவர், தம் பொன்னார் திருவடிகளைத் தம் உள்ளத்தில் பதித்து, அன்புடன் வழிபடுவோரின் கோரிக்கைகளை நிறைவேற்றி வைப்பார்; வேண்டும் செல்வம் கொடுப்பார். அவரைப் போற்றி வழிபடுவாயாக)*

Ahaṉṟa kaḍal alai pāy, āṟu valam sūḻndu,
puhaḻār Malākkāvil, poṟṟāḷ ahattu irutti,
mey aṉbāl vandippār vēṇḍu nidi īndu aruḷum
Poyyāda Aiṅgaraṉai-p pōṟṟu.

*Oh, be careful little eyes*
*what you see,*
*Oh, be careful little ears*
*what you hear,*
*Oh, be careful little feet*
*where you walk,*
*Oh, be careful little heart*
*what you think,*
*Our Father up above is*
*looking down in love.*

*- Nursery Rhyme*

## 14. ஆனைமுகனுக்கு ஆதிசங்கரர் அஞ்சலி

*(ஆதிசங்கரர் அருளிய கணேச பஞ்சரத்தினத்தின் தமிழ் வடிவம்)*

களித்ததோர் கையில் மோதகம்,
நினைத்தோர் முத்தி சாதகம்,
வளைத்து மின்னும் சந்திரன்
களித்து வாழும் மத்தகம்,
களைத்த வர்க்கே அருள்மழை,
தழை-து திக்கை வித்தகன்,
முளைத்தெ ழும்-க யாசுரன்
உயிர்-கு டித்த தற்பரன்,
திளைத்தெ ழும்-த யைக்கடல்
முளைத்து தித்த மூத்தவன்,
களைத்தெ முந்த இன்னல்கள்
துகைத் தெறிந்த தாளவன்,
இளைத்த வர்,க ளைத்தவர்க்கு
அருள்-பொ ழிந்த காவலன்,
களிப்ப ளிக்கும் நாயகம்,
விநாய கன்-க ழல்-சரண். 1

(சாதகம் = *அனுகூலம்*; மத்தகம் = *யானை நெற்றி*; தழை = *தாழ்ந்த (தொங்கும்)*; வித்தகன் = *வல்லவன்*; தற்பரன் = *பரம்பொருள்*; துகைத்தல் = *அழித்தல்*; தாளவன் = *பாதங்களை உடையவன்*)

Kaḷittatōr kaiyil mōdaham,
niṉaittōr mutti sādaham,
vaḷaittu miṉṉum sandiraṉ
kaḷittu vāḻum mattaham,
kaḷaittavarkkē aruḷ maḻai,
taḻai tudikkai vittahaṉ,
muḷaitteḻum Gayāsuraṉ
uyir kuḍitta Taṟparaṉ,
tiḷaitteḻum dayai-k kaḍal,
muḷaittuditta mūttavaṉ,
kaḷaitteḻunda iṉṉalhaḷ
tuhaitteṟinda tāḷavaṉ,
iḷaittavar, kaḷaittavarkku
aruḷ poḻinda kāvalaṉ,
kaḷippaḷikkum nāyaham
Vināyahaṉ kaḻal saraṇ.

வணக்க மற்ற மூடர்கள்
பயப்ப டும்-ப லத்தவன்,
கணக்கி லாத கதிர்விரி
ககன சோதி ஒத்தவன்,
இணக்க முற்ற உம்பரின்
இன்னல்தீர்-ந லத்தவன்,
சுணக்க முற்ற நல்லவர்,
விபத்த னுக்கும் வித்தகன்,
கணேசு ரன்,க யேசுரன்,
தனேசு ரன்,சு ரேசுரன்,
பணேசு ரன்,வி ளங்கு-தொந்தி
பஞ்ச முக-விக் னேஸ்வரன்,
கணம்-க ணம்-து யர்-மலை
பொடிப்-பொ டி-செய் காவலன்,
அணங்கு வல்ல பை-மகிழ்,
கணங்கள் நாதன் கழல்-சரண். **2**

(வணக்கமற்ற = *தன்னை வணங்காத*, பலத்தவன் = *வலிமை உடையவன்*, ககனம் = *வான்வெளி, ஆகாயம்*, ககனசோதி = *கதிரவன்*, உம்பர் = *தேவர்*, சுணக்கமுற்ற = *வாட்டமுற்ற*, விபத்தன் = *ஆபத்தில் சிக்கியிருப்பவர்*, கயேசுரன் = *யானைகளுக்கு அதிபதி*, தனேசுரன் = *நிதிபதி*, சுரேசுரன் = *தேவர்களின் தலைவன்*, பணேசுரன் = *திரவியங்களின் தலைவன்*)

Vaṇakkamaṟṟa mūḍarhaḷ,
bayappaḍum balattavaṉ,
kaṇakkilāda kadir viri
kahaṉa sōti ottavaṉ,
iṇakkamuṟṟa umbariṉ
iṉṉal tīr nalattavaṉ,
suṇakkamuṟṟa nallavar,
vibattaṉukkum vittahaṉ,
gaṇēsuraṉ, gayēsuraṉ,
daṉēsuraṉ, surēsuraṉ,
paṇēsuraṉ, viḷaṅgu tondi
pañja muha Vighṉēsvaraṉ,
gaṇam gaṇam tuyar malai
poḍi-p poḍi sey kāvalaṉ,
aṇaṅgu Vallabai mahiḻ
Gaṇaṅgaḷ nādaṉ kaḻal saraṇ.

அனைத்து யிர்க்கும் நல்லவன்,
அரக்க ரை-வெல வல்லவன்,
கனைக்கும் யானை முகத்தவன்,
பருத்த நல்ல வயிற்றவன்,
நினைத்த வர்க்கும் வெற்றி-நல்கு
பனிப்-பி றைத்-த லையவன்,
மனத்தில் எண்ணும் ஆசைகள்
முடித்து வைக்கும் தூயவன்,
தனத்-த னத்-த னாவென
நடிக்கும் விக்ன விநாயகன்,
சினத்தை வென்ற சீகரன்,
சயத்தை நல்கு சேகரன்,
வனப்பு மிழ்-தி றத்தவன்,
நெருப்பு மிழ்-நி றத்தவன்,
குணக்க டல்,த யைக்கடல்,
இசைக்-க டல்-க ழல்-சரண். 3

(பனிப்பிறைத் தலையவன் = *குளிர்ச்சி பொருந்திய பிறைச் சந்திரனைத் தலையில் தரித்தவர்.* அதனாலேயே அவருக்குப் 'பால சந்திரன்' (Phaala Chandran) என்ற பெயரும் வழங்குகிறது. Phaala என்பது கேசத்தின் முன்பக்கம் என்பதைக் குறிக்கும்; அதாவது கேசத்தின் முன் பக்கத்தில் சந்திரனை உடையவர். சீகரன் = *மழை போன்றவன்* அல்லது *செழிப்பு நிறைந்தவன்,* நெருப்புமிழ் நிறம் = *செந்நிறம்;*)

Anaittuyirkkum nallavan,
arakkarai vela vallavan,
kanaikkum yānai muhattavan,
parutta nalla vayirravan,
ninaittavarkkum verri nalhu
pani-p pirai-t talaiyavan,
manattil eṇṇum āsaihaḷ
muḍittu vaikkum tūyavan,
tana-t tana-t tanāvena
naḍikkum Vighna Vināyahan,
sinattai venra sīharan,
sayattai nalhu sēharan,
vanappumiḻ tirattavan,
neruppumiḻ nirattavan,
guṇa-k kaḍal, dayai-k kaḍal,
isai-k kaḍal kaḻal saraṇ.

மிடிமை போக்கும் இறையவன்,
மடமை நீக்கும் மறையவன்,
குடிமை நல்கும் ஆண்டவன்,
குழந்தை தூய தாண்டவன்,
நடமிடும் பரன் மகன்,
நலமிலார் கொல் ஆண்மகன்,
அடங்கல் அண்ட அடுக்குகள்
அடங்கித் தீய்ந்து வேகையில்,
அடைக் கொணாமல் ஆடுவான்,
கடைக் கொணாத சோதியான்,
தடக்கை வில் தனஞ்சயன்
குடங்கைப் பூசை கொள்ளுவான்,
தடங்கடம் மதம் சொரி
தந்தி யின் முகத்தவன்,
தடங்கை ஐங் கரன்-பரன்
தொடங்கு பூங் கழல்-சரண். 4

(மிடிமை = *வறுமை*; மறையவன் = *அந்தணன், வேதங் கற்றவன்*; நடமிடும் பரன் = *தாண்டவமாடும் பரமசிவன்*; தனஞ்சயன் = *அருச்சுனன்*; குடங்கை = *உள்ளங்கை*; தந்தி = *யானை*)

Miḍimai pōkkum iṟaiyavaṉ,
maḍamai nīkkum maṟaiyavaṉ,
kuḍimai nalhum āṇḍavaṉ,
kuḻandai tūya tāṇḍavaṉ,
naḍamiḍum Paraṉ mahaṉ,
nalamilār kol āṇmahaṉ,
aḍaṅgal aṇḍa aḍukkuhaḷ
aḍaṅgi-t tīyndu vēhaiyil,
aḍaikkoṇāmal āḍuvāṉ,
kaḍaikkoṇāda sōtiyāṉ,
taḍakkai vil Taṉañjayaṉ
kuḍaṅkai-p pūsai koḷḷuvāṉ,
taḍaṅkaḍam madam sori
tandiyiṉ muhattavaṉ,
taḍaṅkai Aiṅgaraṉ paraṉ
toḍaṅgu pūṅkaḻal saraṇ.

இலங்கு வெள்ளி வெண்-பிறை
விளங்கு கொம்பு வீரமன்,
துலங்கு வெள்ளி மா-மலை
விளங்கு அரன் சிவன்-மகன்,
கலங்கும் அன்பர் கண்-மழை
கணம் விலக்கு தீரமின்,
நலங்கொள் நல்ல வர்-மனம்
தினம் விளங்கு தீபப்பொன்,
சலங்கு தண்டை, கிண்கிணி,
சரச ரத்ன பாடகம்,
குலங்கு பொற் சிலம்புகள்
விளங்கு கால் விநாயகன்,
சலங்கொள் மாது கங்கையும்,
கங்கை யாளின் தங்கையும்
மனங் களிக்கும் யானை-மன்
கனிந்த செங்கழல் சரண். 5

(வீரமன் = *வீரன்*, (மன் = *தலைவன், அரசன்*); பாடகம் = *காலணி*, கங்கையாளின் தங்கை = *பார்வதி.* கங்கையும், பார்வதியும் மலையரசனின் பெண் மக்களாய்ப் பிறந்ததாகச் சொல்வதுண்டு)

Ilaṅgu veḷḷi veṇ piṟai
viḷaṅgu kombu vīramaṉ,
tulaṅgu veḷḷi māmalai
viḷaṅgu Araṉ Sivaṉ mahaṉ,
kalaṅgum aṉbar kaṇ maḻai
gaṇam vilakku dīramiṉ,
nalaṅkoḷ nallavar maṉam
diṉam viḷaṅgu dīpa-p poṉ,
salaṅgu taṇḍai, kiṇkiṇi,
sarasa ratṉa pāḍaham,
kulaṅgu poṟ silambuhaḷ
viḷaṅgu kāl Vināyahaṉ,
salaṅkoḷ mādu Gaṅgaiyum,
Gaṅgaiyāḷiṉ taṅgaiyum
maṉaṅ kaḷikkum yāṉai-maṉ
kaṉinda seṅkaḻal saraṇ.

மகா கணேச பஞ்சகம்
அன்பு டன் படிப்பவர்,
மகா விநாயகன் கழல்
நினைந்து பத்தி செய்பவர்,
மகா மலர் வளர்-மகள்,
மலை மகள், கலைமகள்,
மகா மகேசுரன் அருள்
கடைக்கண் பெற்றுப், பூவிலே
சுகாம் ருதம், உடல்-நலம்,
இலக்கியம் செய் வல்லமை,
சயாதி நன்மை, புத்திரர்,
சகத்தில் வாழ்வு, சொல்-வளம்,
சிவானு பூதிச் செல்வராய்ச்,
சிறந்த ஞானம் உற்று,நல்
மகா கணேசர் பாதமே
அடைந்து, வாழ்வர் மானிடர். 6

(பஞ்சகம் = *இங்கு, ஐந்து சுலோகங்கள்*; மலர்வளர்மகள் = *திருமகள், இலக்குமி*; மலைமகள் = *உமையம்மை*; கலைமகள் = *சரசுவதி*; பூ = *பூமி*; சுகாம்ருதம் = *இனிய அமுதம்*; சயாதி = *வெற்றி முதலிய*; சிவானுபூதி = *சிவனுடன் இரண்டறக் கலக்கும் அனுபவம்*)
(*நன்றி*: பொழிப்புரை, தமிழ்க் கவிதை வடிவம்: ஹ.கி.வாலம் அம்மையார். *"ஸ்ரீ கணபதி"*)

Mahā Gaṇēsa pañcaham
aṉbuḍaṉ paḍippavar,
Mahā Vināyahaṉ kaḻal
niṉaindu patti seypavar,
Mahā malar vaḷar mahaḷ,
Malaimahaḷ, Kalaimahaḷ,
Mahā Mahēsuraṉ aruḷ
kaḍai-k-kaṇ peṟṟu-p, pūvilē
suhāmrudam, uḍalnalam,
ilakkiyam sey vallamai,
sayāti naṉmai, puttirar,
sahattil vāḻvu, sol vaḷam,
sivāṉubūti-c celvarāy-c
siṟanda ñāṉam uṟṟu, nal
Mahā Gaṇēsar pādamē
aḍaindu vāḻvar māṉiḍar.

15. <u>ஆதிசங்கரரின் ஸ்ரீசுப்ரமணிய புஜங்கத்தில் கணேசர் துதி</u>

எந்நாளும் இள-வடிவோன்,
    இன்னல்-மலை பொடி-செய்வோன்,
இருங்களிற்று முகம்-உடையோன்,
    இறைவருக்கும் வரம்-தருவோன்,
அந்நான்கு முகன்,அரியோடு,
    அமரேந்திர னும்-தொழுவோன்,
பொன்னாளைத் தந்திடுவோன்,
    புகழ்-கண பதியே,துணையாம்!

*(கவிதை வடிவம் : வாகீசன்)*

(இளவடிவோன் = *இளமையானவன்*; இன்னல்மலை = *மலை போன்று வரும் துன்பங்கள்*; இருங்களிறு = *பெருமை பொருந்திய யானை*; இறைவர் = *இங்கு சிவபெருமான்*; நான்குமுகன் = *பிரமன்*; அரி = *திருமால்*; அமரேந்திரன் = *தேவேந்திரன்*; பொன்னாள் = *திருமகள்* ; இங்கு *செல்வம்*)

Ennāḷum iḷa-vaḍivōṉ,
  iṉṉal malai poḍi seyvōṉ,
iruṅ-kaḷiṟṟu muham uḍaiyōṉ,
  iṟaivarukkum varam taruvōṉ,
an-Nāṉgu muhaṉ, Ariyōḍu,
  Amarēndiraṉum toḻuvōṉ,
poṉṉāḷai-t tantiḍuvōṉ,
  puhaḻ Gaṇapatiyē tuṇaiyām.

16. <u>திருமேனித் திரு(துதி)ப்பாடல்கள்</u>
(விநாயகரின் 32 திருமேனிகளுக்குரிய தியான சுலோகங்களின் தமிழ்க் கவிதை வடிவம்)

<u>பாலகணபதி **(B(P)ala Ganapati)**</u>

ஆனை முகத்தொடு, அருக்கன் நிறத்து-ஒளிர்
சேனைக்கு ஒரு-பதி வால கணபதி,
கதலி, மா,பலா, கரும்பு, மோதகம்
வலம்-இடம் முறை-கொள வாழ்த்தி வணங்குவாம். (1)

(பால - பாலகன் - Balakan = *இளையோன்*; Palakan = *காப்போன்*, அருக்கன் = *கதிரவன்*; வால = *பால*, கதலி = *வாழைப்பழம்*)


பால கணபதி


தருண கணபதி


பக்தி கணபதி


வீர கணபதி


ஷிப்ர கணபதி


விக்ன கணபதி


ஹேரம்ப கணபதி


லட்சுமி கணபதி


ஏகாட்க்ஷர கணபதி


வர கணபதி


திரயக்ஷர கணபதி


ஷிப்ரப்பிரசாத கணபதி


ருணமோஷன கணபதி


துண்டி கணபதி


துவிமுக கணபதி


த்ரிமுக கணபதி


சக்தி கணபதி


துவிஜ கணபதி


சித்தி கணபதி


உச்சிஷ்ட கணபதி


மஹா கணபதி


விஜய கணபதி


நிருத்த கணபதி


ஊர்த்வ கணபதி


ஹரித்திரா கணபதி


ஏகதந்த கணபதி


சிருஷ்டி கணபதி


உத்தண்ட கணபதி


சிங்க கணபதி


யோக கணபதி


துர்க்கா கணபதி


சங்கடஹர கணபதி

Ān̲ai muhattoḍu arukkan̲ nir̲attu oḷir,
Sēn̲aikku oru pati Vāla Gaṇapati,
katali, mā, palā, karumbu, mōdaham,
valam iḍam mur̲ai koḷa, vāl̲tti vaṇaṅguvām.

தருண கணபதி **(Taruna Ganapati)**

அங்குசம், பாசம்,சூதம், அளிதரு விளாவினோடு,
தங்கு-எள் ளுருண்டை, நாவற்பழம் முறையே-தாங்கிப்,
பொங்கு-நற் குருதி-நேரப் பொலி-தரு நிறமே-பூண்டு,
தங்க-நல் வரம்-அளிக்கும் தருண-கண பதியே!போற்றி! (2)

(சூதம் = *மா*; அளி = *எளிய, குளிர்ச்சியான*; விளா = *விளாம்பழம்*; குருதிநேர = *மாலைக்காலச் சிவப்பு*)

Aṅgusam, pāsam, sūdam, aḷi-taru viḷāvinōḍu,
taṅgu eḷḷuruṇḍai, nāvar̲-pal̲am mur̲aiyē tāṅgi-p,
poṅgu nar̲-kurudi nēra-p poli taru nir̲amē pūṇḍu,
taṅga nal varam aḷikkum Taruṇa Gaṇapatiyē! pōr̲r̲i.

பக்தி கணபதி **(Bhakti Ganapati)**

தெங்கு, கதலியும் வலம்-ஏந்தித்,
தெளிந்த பாயசம் இடமாகத்,
தங்கு மாம்பழம் அதனோடே,
தாங்கக் கரங்கள் முறையாகத்,
துங்கம் தூய வெண்மையுள
துகள்-தீர் மேனி ஒளி-வீசப்,
பங்குக்கு ஒரு-நீள் வரம்-அருளும்
பக்திக் கணபதி பணி-செய்வாம். (3)

(தெங்கு = *தென்னை*, இங்கு, *தேங்காய்*; கதலி = *வாழை*(ப் பழம்); துங்கம் = *உயர்ந்த*; துகள் = *குற்றம், மாசு*)

Teṅgu, kataliyum valam ēndi-t,
teḷinda pāyasam iḍamāha-t,
taṅgu māmbal̲am adan̲ōḍē,
taṅga-k karaṅgaḷ mur̲aiyāha-t,
tuṅgam tūya veṇmaiyuḷa
tuhaḷ tīr mēn̲i oḷi vīsa-p,
paṅgukku oru nīḷ varam aruḷum
Bakti Gaṇapati paṇi seyvām.

## வீர கணபதி (Vira Ganapati)

விண்டு-ஒளிர் வேல்,சரம், வாள்,சூலம்,
விழையும் தோட்டி வலத்து-ஏந்தித்,
தண்டு,வில், கேடயம், பரசுடன்,
தாங்கும் பாசம் இடமாக,
ஆண்டு-தொண் டர்-இடர் தீர்க்க,
அருளும் கலசம் துதிக்கையினில்
கொண்ட-வீர கணபதி யாம்
குருதி-நிறத் தோன்-தாள் போற்றி! (4)

(சரம் = *அம்பு*; தோட்டி = *அங்குசம்*; தண்டு = *கதை (தண்டாயுதம்)*; பரசு = *மழு*; குருதி நிறம் = *சிவப்பு*)

Viṇḍu oḷir vēl, saram, vāḷ, sūlam,
viḻaiyum tōṭṭi valattu ēndi-t,
taṇḍu, vil, kēḍayam, parasuḍaṉ,
tāṅgum pāsam iḍamāha,
āṇḍu toṇḍar iḍar tīrkka,
aruḷum kalasam tutikkaiyiṉil
koṇḍa Vīra Gaṇapatiyām
kurudi niṟattōṉ tāḷ pōṟṟi!

## சக்தி கணபதி (Sakti Ganapati)

அங்குச பாசம்-ஏந்தி, அஞ்சேல்-என்று அபயகரம்,
பொங்கிடு பச்சை-நிறப் பரிவு-மிகு சக்தியொடு,
பிங்கல அந்தி-நிறப் பொலிவுறு மேனி-கொண்டு,
பாங்கு-உயர் சக்தி-கண பதியே!நின் தாள்-போற்றி! (5)

(பிங்கலம் = *பொன்னிறம்*; அந்தி = *மாலைக்காலம்*; பாங்கு = *தன்மை*)

Aṅgusa pāsam ēndi, añjēl eṉṟu abayakaram,
poṅgiḍu paccai niṟa-p parivu mihu Saktiyoḍu,
piṅgala andi niṟa-p polivuṟu mēṉi koṇḍu,
pāṅguyar Sakti-Gaṇapatiyē! niṉ tāḷ pōṟṟi!

துவிஜ கணபதி (Dvija Ganapati)

நாலு-முகத் தொடு,பாலின் நிறத்தொடும், மதி-போலும்,
சால-செபித் தருள்-மாலையும், நூலையும் முறையாகக்,
கோல-நிறத்து ஒளிர்-தண்டு, கமண்டலம் எதிர்-நேரே
நால-நிலத்து உள-பிரம்ம கணபதி தாள்-போற்றி! (6

(மதி = *சந்திரன்*; செபித்தருள் மாலை = *ஜபமாலை*; நூல் = *புத்தகம் (சுவடி)*; தண்டு = *தண்டம்* கமண்டலம் = *கரகம்*; நால = *நான்கு*)

Nālu muhattoḍu, pālin̲ nir̲attoḍum, madi pōlum,
sāla sepittaruḷ mālaiyum, nūlaiyum mur̲aiyāha-k,
kōla nir̲attu oḷir taṇḍu, kamaṇḍalam edir nērē
nāla nilattu uḷa Biramma Gaṇapati tāḷ pōr̲r̲i!

சித்தி கணபதி (Siddhi Ganapati)

சீர்-பசும் பொன்-வண்ணம் திகழும்-ஒளிர் வடிவுடன்,
ஆர்-மிகு பரசு,சூதம், எள்-உருள் துதிக்கையில்,
வார்-நிறை சில்-கன்னல், வண்ண-மலர் கரம்-கொண்டு,
பேர்-உடை சித்திகண பதியே!பாதம் பணிந்தோமே. (7)

(ஆர் - *கூர்மை*; எள் உருள் = *எள்ளுருண்டை*; வார் = *துண்டு, piece*; சில் = *சில*; கன்னல் = *கரும்பு*)

Sīr pasum-pon̲ vaṇṇam tihaḻum oḷir vaḍivuḍan̲,
ār-mihu parasu, sūdam, eḷ-uruḷ tutikkaiyil,
vār-nir̲ai sil kan̲n̲al, vaṇṇa malar karam koṇḍu,
pēr-uḍai Siddhi Gaṇapatiyē! pādam paṇindōmē.

உச்சிஷ்ட கணபதி (Ucchista Ganapati)

மா-தொளை கொள்-துதிக் கையில்-மாதுளைக் கனி-ஏந்தி,
மேதகு அக்கமாலை, தந்தம்-மேலுற வலம்-கொண்டு,
சீத-நிறை கருங்குவளை, யாழ்,கதிரும் வாமம்-உற
நாத,வடி இரத்த-உச் சிட்ட-நாயகனே! நயந்து-கா! (8)

(மாதொளை = *பெரிய துவாரம்*; மேதகு = *சிறப்பு மிகுந்த*; அக்கமாலை = *(ருத்திராட்ச) ஜபமாலை*; சீதம் = *குளிர்ச்சி*; யாழ் = *வீணை*; கதிர் = *நெற்கதிர்*; வாமம் = *இடப்பக்கம்*; உச்சிட்ட நாயகன் = *உச்சிஷ்ட கணபதி*)

Mā toḷai koḷ tutikkaiyil māduḷai-k kan̲i ēndi,
mētahu akkamālai, tandam mēlur̲a valam koṇḍu,
sīda nir̲ai karuṅkuvaḷai, yāḻ, kadirum vāmam ur̲a,
nāda, vaḍi iratta Ucciṭṭa Nāyahan̲ē! nayandu kā!

விக்கின கணபதி (Vighna Ganapati)

பொன்றிய வண்ணத்தோடு பொலிவுறு மேனியுடன்,
மின்-பரசு, ஆழி,தந்தம், மலர்-அம்பு வலம்-ஏந்தி,
வன்-பாசம், சங்கு,கன்னல், வண்ணப்பூ இடம்-ஏந்திக்,
குன்று-உயர் நல்-விக்கின கணபதி தாள்-போற்றி! (9)

(பொன்றிய = *மிகுந்த ஒளியுடன் கூடிய*; மின் = *பிரகாசமான*; ஆழி = *சக்கரம்*; வன் = *வலிமையான*; கன்னல் = *கரும்பு*; குன்று உயர் = *சிறு மலை போல் உயர்ந்த*)

Ponṟiya vaṇṇattōḍu polivuṟu mēṉiyuḍaṉ,
miṉ-parasu, āḻi, tandam, malar-ambu valam ēndi,
vaṉ-pāsam, saṅgu, kaṉṉal, vaṇṇappū iḍam ēndi-k,
kuṉṟu-uyar nal Vighṉa Gaṇapati tāḷ pōṟṟi!

கூஷிப்ர கணபதி (Ksipra Ganapati)

குங்கும வண்ணத்தோடும், குறுமணிக் கலயத்தோடும்,
அங்குசம், தந்தம்-ஏந்தி, ஆனை-மா முகத்தினோடும்,
பைங்-கருங் குவளை,பாசம், பரந்த-சீர் இடத்தில்-தாங்கிக்,
கங்குல்-போல் பாசம்-போக்கக், கருத்தினில் நிலைப்பாய்,போற்றி! (10)

(கங்குல் = *இருள்*)

Kuṅguma vaṇṇattōḍum, kuṟumaṇi-k kalayattōḍum,
aṅgusam, tandam ēndi, aṉai mā-muhattiṉōḍum,
paiṅ-karuṅ-kuvaḷai, pāsam,
paranda sīr iḍattil tāṅgi-k,
kaṅgul pōl pāsam pōkka-k,
karuttiṉil nilaippāy, pōṟṟi!

ஹேரம்ப கணபதி (Heramba Ganapati)

ஐந்து முகத்துடன், அபய, வரத்துடன், அரி-ஏறிக்,
கந்த மலருடன், கத்தி, சூலம்,மழு, கதிர்-கோடும்,
நந்தல் இலா-செப மாலையும், பாசமும் நனி-தாங்கி,
எந்தை வரம்-அருள், வந்த வினை-கெட, ஏரம்பா! (11)

(அபய வரத்துடன் = *அபய முத்திரை, வரத முத்திரையுடன் கூடிய கரங்களோடு*; அரி = *சிங்கம்*; கந்த மலர் = *மணமிக்க மலர்*; கதிர் =*இங்கு, பிரகாசம்*; நந்தல் = *கேடு*; நனி = *மிகுதி*)

Aindu muhattuḍaṉ, abaya, varattuḍaṉ, ari ēṟi-k,
kanda malaruḍaṉ, katti, sūlam, maḻu, kadir kōḍum,
nandal ilā sepa-mālaiyum, pāsamum naṉi tāṅgi,
endai varam aruḷ, vanda viṉai keḍa, Ērambā!

லக்ஷ்மி கணபதி **(Laksmi Ganapati)**

மாணிக்கக் கும்பம், மடுத்த துதிக்கை-ஏந்தி,
ஆணி நிறத்துடன், அங்குச பாசமும்,
செங்குவளை மலரோடு, செவ்வாழைப் பழம்-கொண்டு,
தங்கு திருமக ளோடு அருள்-தா! (12)

(மடுத்த = *குழியுடன் கூடிய*; ஆணி = *மேன்மை*; திருமகள் = *இலக்குமி*)

Māṇikka-k kumbam, maḍutta tudikkai ēndi,
āṇi niṟattuḍaṉ, aṅgusa pāsamum,
seṅguvaḻai malarōḍu, sevvāḻai-p paḻam koṇḍu,
taṅgu Tirumahaḷōḍu aruḷ tā!

மகா கணபதி **(Maha Ganapati)**

மகாகணபதி யாம்,மஞ்சள்-நிற மேல்-தோல், நின்பாலே
புவனமும், கோடும்,புரியும், ஆழியும் பொலிவுறவே,
ஆழி,சங்கு கைக்-கொண்டு, அங்குச பாசமுடன்,
நீ-இருப்பாய் கற்பக நீழல். (13)

(புவனம் = *உலகம்*; ஆழி = *உலகம்*; ஆழி = *சக்கரம்*; கற்பக நீழல் = *தேவலோகக் கற்பக மரத்தின் நிழலில்*)

Mahā Gaṇapatiyām, mañjaḷ niṟa mēl-tōl, niṉpālē
puvaṉamum, kōḍum, puriyum, āḻiyum polivuṟavē,
āḻi, saṅgu kai-k koṇḍu, aṅgusa pāsamuḍaṉ,
nī iruppāy kaṟppaha nīḻal.

விஜய கணபதி **(Vijaya Ganapati)**

ஆகு-ஊர்தி கோலமதில், அரக்கு நிறமுடன்,
பாகு-தோட்டி, பிறைக்கோடு பரிந்து வலகரம்,
வேக-மிக்க பாசம்,சூதம், விழைந்து இடகரம்,
வாகு-விசைய கணபதியே! விரைந்து வரம்-அருள்! (14)

(ஆகு = *பெருச்சாளி*; ஊர்தி = *வாகனம்*; அரக்கு = *சிவப்பு*; பாகு தோட்டி = *அழகிய அங்குசம்*; பிறைக்கோடு = *வளைந்த தந்தம்*; வாகு = *அழகு*)

Āhu ūrti, kōlamadil arakku niṟamuḍaṉ,
pāhu tōṭṭi, piṟai-k-kōḍu parindu vala-karam,
vēha mikka pāsam, sūdam, viḻaindu iḍa-karam,
vāhu Visaiya Gaṇapatiyē! viraindu varam aruḷ.

## நிருத்த கணபதி (Nrtta Ganapati)

அங்குச, பரசு,தந்தம், அணி காம்பீரப்பூரம்
தங்கிடப், பாசம்-ஓர்பால் தாங்கிய கரமே-தூக்கிப்,
பொங்குறு இடக்கால்-ஊன்றிப், பொலிதரு வலக்கால்-தூக்கிப்,
பிங்கல மேனி-ஆடப் பீடுறு நடனா!போற்றி! (15)

(காம்பீரப்பூரம் = *குழியப்பம்*)

Angusa, parasu, tandam, ani kāmbīra-p-pūram
tangida-p, pāsam ōr-pāl tāngiya karamē tūkki-p,
ponguru ida-k-kāl ūnri-p,
politaru vala-k-kāl tūkki-p,
pingala mēni āda-p pīduru nadanā! pōrri!

## ஊர்த்துவ கணபதி (Urdhva Ganapati)

நெற்கதிர் வலமே-கொண்டு, நேர்-இடம் கரும்பு தாங்கிப்,
பொற்புறு கோடும்-ஏந்திப், புனித நற்றேவி மேவ,
அற்புத இடக்கை-சூலம் அணைத்த குங்கும வண்ணத்த!
நிற்பதம் ஊர்த்துவனே! மன்னி நினைத்தவர் எவரே-வீணர்? (16)

*(நற்றேவி = நல் தேவி; இடப்பக்கம் தேவி இருப்பதை இது குறிப்பிடுகிறது)*

Nerkkadir valamē kondu,
nēr idam karumbu tāngi-p,
porppuru kōdum ēndi-p,
punida narrēvi mēva,
arbuda idakkai sūlam anaitta,
kunguma vannatta!
nirppadam Ūrttuvanē!
manni ninaittavar evarē vīnar?

ம்ருது வாக்ய ப்ரதாநேந
ஸர்வே துஷ்யந்தி ஜந்தவா:
தஸ்மாத் ததேவ வக்தவ்யம்
வசநே கா தரித்ரதா ||

(தாழ்ந்த குரலில் இனிமையாகப்
பேசினால் எல்லாப் பிராணிகளும்
மகிழ்ச்சி அடைகின்றன.
ஆகவே இனிமையாகப் பேசுவது என்ற
தானத்தைச் செய்ய வேண்டும்.
இனிய பேச்சுக்கு என்ன ஏழ்மை வந்துவிட்டது?

ஏகாட்சர கணபதி **(Ekaksara Ganapati)**

அங்குச பாசமுடன், அஞ்சேல் அபய-கரம்,
தங்கு-மா துளங்கனி, தும்பிக் கரமதில்,
செங்கதிர் மேனியுடன், செல்-ஆகு ஊர்தி-ஏறும்
பாங்குடை ஏகாட்சரா! பணிதும் பாதமலர். (17)

*(தும்பிக்கரம் = தும்பிக்கை; ஆகு ஊர்தி = பெருச்சாளி வாகனம்)*

Aṅgusa pāsamuḍaṉ, añjēl abaya karam,
taṅgu mātuḷaṅkaṉi, tumbi-k-karamadil,
seṅkadir mēṉiyuḍaṉ, sel āhu ūrdi ēṟum
pāṅguḍai Ēkākṣarā! paṇidum pāda malar.

வர கணபதி **(Vara Ganapati)**

குங்கும வண்ண-நிறம், கவின்மிகு விழி-மூன்றாம்,
அங்குசம், தேன்-கலயம் அளி-மிக இடக்கரத்தில்
தங்கிடும், பாசம், கொடி, தாமரையும் வலம்-ஏந்தித்,
துங்கனே! வர-கணபதி! தொழுது,தாள் பணிந்தோம். (18)

(அளி = *அருள்*; துங்கன் = *உயர்ந்தவன்*)

Kuṅguma vaṇṇa niṟam, kaviṉ mihu viḻi mūṉṟām,
aṅgusam, tēṉ kalayam, aḷi miha iḍa-k karattil
taṅgiḍum, pāsam, koḍi, tāmaraiyum valam ēndi-t,
Tuṅgaṉē! Vara Gaṇapati! toḻudu, tāḷ paṇindōm.

திரயாக்ஷர கணபதி **(Tryaksara Ganapati)**

நிறமது பொன்னிறம், நேர்-கரம் நான்கு-உடையாய்!
விறலுடை அங்குசம், வெண்கோடு-தான் உடையாய்!
திறல்-மிகு பாசம்,சூதம், தும்பியில் கவவு-உடையாய்!
மிறல்-மேவு திரயாட்சரா! மலர்ப்பதம் தஞ்சம்-உற்றோம். (19)

(விறல் = *வலிமை, பெருமை*; கவவு = *மோதகம்*; மிறல் = *பெருமை*; திரயாட்சரம் = *மூவெழுத்து*)

Niṟamadu poṉṉiṟam, nēr-karam nāṉgu uḍaiyāy!
viṟaluḍai aṅgusam, veṇ-kōḍu-tāṉ uḍaiyāy!
tiṟal mihu pāsam, sūdam,
tumbiyil kavavu uḍaiyāy!
miṟal mēvu Trayākṣarā!
malar-p-padam tañjam uṟṟōm.

க்ஷிப்ரபிரசாத கணபதி (Ksipraprasada Ganapati)

பொங்கும் செந்நிற வண்ணமதில்
பொலிவுற மிளிரும் திருமேனி,
தாங்கும் அங்குசம், பங்கயமும்,
தருப்பை முடிச்சு முறையாகத்,
துங்கம் வரதம், பிணி-பாசம்,
துலங்கு பலதை கரம்-ஏந்திப்,
பங்குக்கு ஓர்-வரம் தரும்-க்ஷிப்ர
பிரசாத கணபதி தாள்-பணிவாம். (20)

(பங்கயம் = *தாமரை*; பலதை = *கல்பதை என்னும் ஒரு வகை மூலிகைச் செடி*)

Pongum sennira vannamadil
polivura milirum tirumeni,
tangum angusam, pangayamum,
taruppai mudiccu muraiyaha-t,
tungam varadam, pini-pasam,
tulangu paladai karam endi-p,
pangukku or varam tarum Ksipra-
Prasada Ganapati tal panivam.

ஹரித்திரா கணபதி (Haridra Ganapati)

மதம்-பொழி வேழமுகம், மாநிற மேனியுடன்,
பதமுடன் கரமதில் அங்குச, வெண்கோடு,
இதமுடன் பாசமதும், இன்-மோத கம்-ஏந்திச்,
சிதமிகு ஹரித்திரா! சீர்-பெறக் காத்து-அருள். (21)

(சிதம் = *ஞானம்*; ஹரித்திரம் = *மஞ்சள்*)

Madam poli velamuham, manira meniyudan,
padamudan karamadil angusa, venkodu,
idamudan pasamadum, in-modaham endi-c,
cida-mihu Haridra! sir pera-k kattarul.

ஏகதந்த கணபதி (Eka-danta Ganapati)

நீலம்-ஒளிர் மேனியுடன், நேர்-பேழை வயிறுடன்,
சீலமிகு அக்கமாலை, சில-கோடு வலமதில்,
சாலமுடை இனிப்பு-உருள், சீர்-பரசு இடமதில்,
கோலமுடன் ஏகதந்த கணபதி காத்து-அருள்க! (22)

(சிலகோடு = *ஒடிந்த தந்தம்*; இனிப்பு உருள் = *லட்டு உருண்டை*)

Nīlam oḷir mēn̲iyuḍan̲, nēr pēl̲ai vayir̲uḍan̲,
sīla-mihu akka-mālai, sila-kōḍu valamadil,
sālamuḍai in̲ippu-uruḷ, sīr parasu iḍamadil,
kōlamuḍan Ēka-Danta Gaṇapati kāttu aruḷha.

## சிருஷ்டி கணபதி (Srsti Ganapati)

செங்கதிர் வண்ணமுடன், சீர்-ஆகு ஊர்தி-தனில்,
அங்குசம், வெண்கோடு அணியாகக் கொண்டு,வலம்
செங்கையில், இடமதிலே சூதமுடன் பாசம்-ஏந்தும்,
பாங்கு-உயர் சிருட்டி-கண பதி!உமது பாதம்-போற்றி! (23)

Seṅkadir vaṇṇamuḍan̲, sīr āhu ūrdi-tan̲il,
aṅgusam, veṇkōḍu aṇiyāha-k koṇḍu, valam
seṅkaiyil, iḍamadilē sūdamuḍan pāsam ēndum,
pāṅgu uyar Siruṭṭi Gaṇapati!
umadu pādam pōr̲r̲i!

## உத்தண்ட கணபதி (Uddanda Ganapati)

வெண்கோடு, நெற்கதிர், கதாயுதம்,
வண்ணமிகு நீலமலர், மலர்-அம்பு,
தண்-மேவு பங்கயம், கரும்புடன்,
தீஞ்சுவை மாதுளை, பாசமதும்,
திண்-தும்பிக் கரமதில் கலயம்-ஏந்தித்,
தேவியுடன் வீற்றிரு கோலமதில்,
கண்ணிறை உத்தண்ட கணபதியே!
கடி-வினை நீக்கியே காத்து-அருள். (24)

Veṇkōḍu, ner̲kkadir, gadāyudam,
vaṇṇamihu nīla malar, malar-ambu,
taṇ-mēvu paṅgayam, karumbuḍan̲,
tīñjuvai māduḷai, pāsamadum,
tiṇ-tumbi-k karamadil kalayam ēndi-t,
Dēviyuḍan̲ vīr̲r̲iru kōlamadil,
kaṇṇir̲ai Uddaṇḍa Gaṇapatiyē!
kaḍi vin̲ai nīkkiyē kāttu aruḷ.

ரணமோசன கணபதி (Rnamocana Ganapati)

கூர்-மிகு அங்குசம், குறுகிய கொம்புடன்,
சூர்-தரு பாசமுடன், சுவை-மிகு கரு-நாவல்,
சீர்-உயர் கோலமதில், சால-நிறை அன்புடன்,
பேரருள் நல்கியே, பதம்-அருள் ரணமோசனா! (25)

(சூர் = *அச்சம்*; பதம் = *பக்குவம், இன்பம், தெய்வபதவி*; ரணமோசனம் = *கடன் தொல்லையிலிருந்து விடுபடுகை*)

Kūr-mihu aṅgusam, kuṟuhiya kombuḍaṉ,
sūr-taru pāsamuḍan, suvai-mihu karu-nāval,
sīr-uyar kōlamadil, sāla niṟai aṉbuḍaṉ,
pērarul̥ nalhiyē, padam arul̥ Raṇamōcaṉā!

துண்டி கணபதி (Tundi Ganapati)

சீலம்-தரு அக்கமாலை, சில-தந்தம் வலமதிலே,
கீல-முனை கூர்-பரசு, கொள்-கலயம் இடம்-கொண்டு,
ஞாலமதில் துயர்-நீங்கி, நாம்-வாழ வரம்-அருளும்
தூல-மேனி வேழமுகத் துண்டி-கண பதி!போற்றி! (26)

(சீலம் = *ஒழுக்கம், நல்லுணர்வு*, கீலம் = *வெட்டுகின்ற*)

Sīlam-taru akkamālai,
sila-tandam valamadilē,
kīla-muṉai kūr-parasu,
kol̥-kalayam iḍam koṇḍu,
ñālamadil tuyar nīṅgi, nām vāḻa varam arul̥um
tūla-mēṉi Vēḻamuha-t Tuṇḍi Gaṇapati! pōṟṟi.

துவிமுக கணபதி (Dvimukha Ganapati)

சேர்-இரு வேழமுகம், செழு-பசலை நிற-மேனி,
கூர்முனை அங்குசம், குறும்-பிறைக் கோடுடன்,
நேர்-பிணை பாசமதும், நிறை-கலம் கொண்ட-நற்
சீர்-பெற அருள்-புரி, சீல-மிகு கணபதியே! (27)

(சேர் - இரு = *இருமுகங்கள் சேர்ந்த*, செழு = *செழிப்பான*, பசலை = *பொன்னிறம்*)

Sēr iru vēḻamuham, seḻu-pasalai niṟa mēṉi,
kūr-muṉai aṅgusam, kuṟum-piṟai-k kōḍuḍaṉ,
nēr-piṇai pāsamadum, niṟai kalam koṇḍa,
naṟ-sīr peṟa arul̥ puri, sīla-mihu Gaṇapatiyē!

## <u>மும்முக கணபதி (Mummukha Ganapati)</u>

நன்றொளிர் அங்குசம், அக்கமாலை,
நலந்தரு அபயகரம் வலமதிலே,
நின்று-அருள் வரதகரம், அமுத-கலயம்,
நீள்-பாசம் நிலையாக இடமதிலே,
தோன்றிடு புரசமலர் வண்ணமதில்,
துலங்கு-நற் திருமேனி கோலம்-பூண்டு,
முன்னவனே! துணை-நின்று வினை-அறுத்து,
மும்முகக் கணபதி! காத்து-அருளாய்! (28)

(புரசமலர் வண்ணம் = *சிவப்பு*)

Naṉṟoḷir aṅgusam, akkamālai,
nalandaru abaya karam valamadilē,
niṉṟu aruḷ varada karam, amuda kalayam,
nīḷ-pāsam nilaiyāha iḍamadilē,
tōṉṟiḍu purasa-malar vaṇṇamadil,
tulaṅgu naṟ-tirumēṉi kōlam pūnḍu,
Muṉṉavaṉē! tuṇai niṉṟu viṉai aṟuttu,
Mum-muha Gaṇapati! kāttu aruḷāy!

## <u>சிங்க கணபதி (Singa Ganapati)</u>

தங்கிடும் அரிமா, கற்பகம்,
தவழ்-யாழ், வரதம் வலமதில்,
பங்கயம், கலயம், பூங்கொத்து,
பரிவொடு அபயம் இடமதில்,
பொங்கிடும் முழுமதி வெண்-மேனி
பொலிவுறு வடிவம் கொண்டு,நற்
பாங்குடன் வினை-தீர வரம்-அருளும்,
பீடுயர் சிங்கக் கணபதியே! (29)

(அரிமா = *சிங்கம்*)

Taṅgiḍum arimā, kaṟppaham,
taval̲ yāl̲, varadam valamadil,
paṅgayam, kalayam, pūṅkottu,
parivoḍu abayam iḍamadil,
poṅgiḍum mul̲umadi veṇ-mēṉi
polivuṟu vaḍivam koṇḍu, naṟ-
paṅguḍan, viṉai tīra varam aruḷum,
pīḍuyar Siṅga Gaṇapatiyē!

**யோக கணபதி (Yoga Ganapati)**

அக்கமாலை, யோக-தண்டம் அணி-செய வலந்தனில்,
சிக்கு-பாசம், செங்கரும்பு சாலமுடன் இடந்தனில்,
மிக்க-ஒளிர் காலைக்-கதிர் மேவு-நிறக் கோலமதில்,
தக்க-யோகக் கணபதி!நின் தாள்-இணை தஞ்சமே. (30)

(யோகதண்டம் = *யோகியர் கையில் வைத்திருக்கும் கோல், staff of a yogi*)

Akkamālai, yōga-daṇḍam aṇi seya valantaṉil,
sikku pāsam, seṅkarumbu sālamuḍaṉ iḍantaṉil,
mikka oḷir kālai-k kádir
mēvu niṟa-k kōlamadil,
takka Yōga Gaṇapati! niṉ tāḷ-iṇai tañjamē.

**துர்கா கணபதி (Durga Ganapati)**

இலங்கு-கூர் அங்குசம், அக்கமாலை,
ஏவு-அம்பு, பிறைக்கோடு வலக்கையில்,
விளங்கு-நீள் வன்-பாசம், கொடி-ஏந்தி,
வலிய-வில், நாவற்பழம் இடக்கையில்,
துலங்கு-நேர் பசும்பொன் நிறமேனி
திரு-வடிவு பூண்டு,எம் வினை-தீர,
வழங்கு-வரம் தந்து,எமக்கு நலம்-அருள
வேண்டுதும் துர்கா கணபதியே! (31)

Ilaṅgu kūr aṅgusam, akkamālai,
ēvu ambu, piṟai-k-kōḍu vala-k-kaiyil,
viḷaṅgu nīḷ vaṉ pāsam, koḍi ēndi,
valiya vil, nāvaṟppaḻam iḍa-k-kaiyil,
tulaṅgu nēr pasum-poṉ niṟa mēṉi
tiru vaḍivu pūṇḍu, em viṉai tīra,
vaḻaṅgu varam tandu, emakku nalam aruḷa
vēṇḍudum Durgā Gaṇapatiyē!

*We are but mere trustees of what God has blessed us with. It is time we make ourselves worthy of the task at hand.*
*- The Star*

சங்கடஹரா கணபதி (**Sankatahara Ganapati**)

அங்குச வரம்-தாங்கி, அரிதார நிறத்தோனாகி,
தங்கிடு பாசம்-ஏந்தித், தேவி-தன் மருங்கு-இருக்கத்,
தொங்கிடு தும்பி-தனில் தெளி-பாயச கலயம்-கொண்டு,
பொங்கு-சங் கடஹரனே! போற்றியே நின்-பாதமலர். (32)

(அரிதாரம் (haritāla) = *கஸ்தூரி*, சங்கடஹரன் = *வேதனைகளைப் போக்குபவன்*)

Aṅgusa, varam tāṅgi, aridāra niṟattōṉāhi,
taṅgiḍu pāsam ēndi, Dēvi taṉ maruṅgu irukka-t,
toṅgiḍu tumbi taṉil
teḷi pāyasa-k kalayam koṇḍu,
poṅgu Saṅkaḍa-haraṉē! pōṟṟiyē niṉ pāda malar.

(32 மூர்த்தங்களுக்கான தியான சுலோகங்களின் அடிப்படையில் தமிழ்க் கவிதைகளை யாத்தவர்: சிற்பி தி.பா.கணேச மூர்த்தி, *ஆலய விக்கிரக நிருமாண ஆயாதி சிற்ப இரகசியம்.*
நன்றி: ஜி.எம்.சுப்ராஜி, *விநாயகர் ஞானமும், விஞ்ஞானமும்.*
பாடல்களைக் கொடுத்து உதவியவர்: பேராசிரியர் ச. சிங்காரவேலு)

***Yoga is a methodical effort to control the mind and attain perfection.***
***Yoga heightens the power of concentration, arrests the wanderings and vagaries of the mind, and helps to attain the super conscious state of Nirvikalpa Samadhi*** **(Highest state of concentration, in which the soul loses all consciousness of its being different from the universal soul).**
***The practice of yoga removes restlessness of body and mind.***
***It removes the impurities of the mind also and steadies it.***

*- Swami Sivananda*

# ஸ்ரீ கணபதி யந்திர பந்தம்




1. வேதனே தபோதனே
2. வருகவே வரதனே
3. தரும்பத தனத்தபோ
4. மனம்நேர் புபோதனே

வேதம் அறிந்தவரே! தவத்திற் சிறந்தவரே!
வரந் தருவதில் வல்லவரே! வீடுபேறு
அளிக்கும் கணபதி என்னும் பெயருடைய
நீர் எனக்கு இரங்கி வந்தருள்க!

பாடலாக்கம்:
**வெண்பாச் சிற்பி பட்டமங்கலம் வி. இக்குவனம்**
**சிங்கப்பூர்**

## வழிபாடு நிறைவு

........................................................ நின்
அருள்-பெற்று உய்தற்கு உரியன் யான்-எனில்,
பல்லுயிர்த் தொகுதியும் பவக்கடல் அழுந்த,
அல்லல் செய்யும் அவா-எனப் படும்-அவ்
வறுமையி னின்றும் வாங்கி,
அறிவின் செல்வம் அளித்து-அருள் எனக்கே.

*- சிதம்பர மும்மணிக்கோவை*

*(இறைவ! நின் அருளைப் பெற்று உய்வடைவதற்கு எளியேன் உரியவன் என்று நீ எண்ணினால், பல உயிர்களின் தொகுதியும், பிறவியாகிய கடலில் அழுந்தத் துன்பம் செய்யும் 'அவா' எனப்பெறும் அந்த வறுமையினின்றும் அடியேனை விடுவித்து, அறிவின் செல்வத்தை அடியேனுக்கு அருள்வாயாக!)*

**Nin arul perru uydarkku uriyan yan enil,**
**palluyir-t tohudiyum bava-k-kadal alunda,**
**allal seyyum avā enappadum**
**av-varumaiyininrum vāngi,**
**arivin selvam alittu arul enakkē.**

அருச்சனை, துதி ஆகியவற்றை முடித்த பின்னர், விநாயகப் பெருமானை உள்ளக்கிழியில் உருவெழுதிக் (கணேசரை உள்ளத்தில் தியானிக்கும் முறை, சமஸ்கிருத சுலோகங்களின் தொடக்கத்தில் கொடுக்கப்பெற்றுள்ளது.), காணாபத்தியர்கள், தம் வழிபாட்டில் கூறும் மந்திரம் அடங்கிய பின்வரும் பாட்டைக் கூறி,

கண்கண்ட தெய்வம் நீயே,
கால-முத் தொழிற்கும் நீயே,
அண்ட-பே ரண்டம் நீயே,
அகப்படும் பொருளும் நீயே,
வண்டலை மலராம் மென்மை
வன்மையும் தருவாய் நீயே,
உண்டெனும் பூதத் தோற்றம்
ஒரு-மூவர் முதல்வ போற்றி!
ஓம் கம் கணபதயே நமஹ.

*(தமிழ்க் கவிதையாக்கம்: கவிஞர் காரைக்கிழார்)*

(அண்டபேரண்டம் = *பிரபஞ்சம், Universe*; வண்டலை = *வண்டுகள் மொய்க்கின்ற*; மூவர் = *பிரமன், விஷ்ணு, ருத்ரன்*)

**Kan kanda Deyvam nīyē,**
**kāla muttolirkkum nīyē,**
**anda pērandam nīyē,**
**ahappadum porulum nīyē,**

vaṇḍalai malarām meṉmai
vaṉmaiyum taruvāy nīyē,
uṇḍeṉum būta-t toṟṟam
oru Mūvar Mudalva pōṟṟi!
Ōm Gam Gaṇapatayē Namaha

கணபதி மந்திரத்தை இயன்ற அளவு ஜபித்து வழிபாட்டை நிறைவு செய்வோம்.

<u>வாழ்த்து</u>

வானுலகும், மண்ணுலகும் வாழ,மறை வாழப்,
பான்மை-தரு செய்ய-தமிழ் பார்-மிசை விளங்க,
ஞான-மத ஐந்து-கர மூன்று-விழி நால்வாய்
ஆனைமுக னைப்-பரவி அஞ்சலி-செய் கிற்பாம்.

*- சேக்கிழார் நாயனார் புராணம்*

*(விண்ணும் மண்ணும் வாழவும், வேதங்கள் நிலைபெற்றிடவும், பயனுடைய சிறந்த தமிழ் மொழி நிலவுலகில் நிலையானதோர் இடத்தைப் பெற்றிடவும், ஞானமாகிய மதத்தையும், ஐந்து கரங்களையும், மூன்று கண்களையும், தொங்குகின்ற துதிக்கையையும் உடைய ஆனைமுகனைத் துதித்து வழிபடுவோம்)*

**Vāṉulahum, maṇṇulahum vāḻa, maṟai vāḻa-p**
**pāṉmai taru seyya Tamiḻ pār misai viḷaṅga,**
**ñāṉa mada, aindu kara, mūṉṟu viḻi, nālvāy**
**Āṉai-muhaṉai-p paravi añjali seyhiṟppām.**

மல்குல வேத வேள்வி, வழங்குக சுரந்து வானம்,
பல்குக வளங்கள் எங்கும், பரவுக அறங்கள், இன்பம்
நல்குக உயிர்கட்கு எல்லாம், நான்மறைச் சைவம் ஓங்கிப்,
புல்குக உலகம் எல்லாம், புரவலன் செங்கோல் வாழ்க!

*- திருவிளையாடற் புராணம்*

(வேதமும் வேள்வியும் எங்கும் நிறையட்டும்; அதன் பயனாக வானம் வற்றாது மழை பொழியட்டும்; மழையால் எங்கும் வளம் கொழிக்கட்டும்; அறச் செயல்கள் பெருகட்டும்; உலகெங்கும் உள்ள உயிர்கள் இன்பத்தை எந்நாளும் அனுபவிக்கட்டும்; நான்கு வேதங்களை அடிப்படையாகக் கொண்ட சைவ சமயம் நானிலம் எங்கும் தழைக்கட்டும்; மன்னர் செங்கோல் மண்ணில் நிலைத்து மாறாத நீதியை எல்லோருக்கும் வழங்கட்டும்)

Malhuha vēda vēḷvi, vaḻaṅguha surandu vāṉam,
palhuha vaḷaṅgaḷ eṅgum, paravuha aṟaṅgaḷ, iṉbam
nalhuha uyirhaṭku ellām, nāṉmaṟai-c Caivam ōṅgi-p,
pulhuha ulaham ellām, Puravalaṉ seṅgōl vāḻha!

## ஆசைதீரக் கொடுப்பார்

பிரஹலாதன் கூறியது போன்று, அங்கிங்கெனாதபடி நீக்கமற எங்கும் நிறைந்திருப்பவர் விநாயகப் பெருமான். அவரை மகிழ்விக்க ஓர் அறுகம்புல் போதும். திரௌபதியைப் போன்று முழு நம்பிக்கையுடன், அவரிடம் முழுமையாகச் சரணடைந்து விட்டால், இம்மை-மறுமைச் செல்வங்கள் அனைத்தையும் ஆசை தீர அவர் அருளிவிடுவார். நம்பிக்கைதான் முக்கியம். **நம்பினார் கெடுவதில்லை, நான்குமறைத் தீர்ப்பு** என்று சான்றோர் கூறுவர். பாரதியார் பாடியது போன்று,

**கணபதி தாளைக் கருத்திடை வையுங்கள்,**
**நிச்சலும் வாழ்ந்து நிலைபெற்று ஓங்கலாம்,**
**அச்சந் தீரும், அமுதம் விளையும்,**
**வித்தை வளரும், வேள்வி ஓங்கும்,**
**அமரத் தன்மையும் அடைந்து விடலாம்.**

நம்புங்கள், நல்லவையே நடக்கும்.
வாழ்க, வளர்க, வெல்க.
வணக்கம்





**MAXIM**

***More things are wrought by prayer than the world dreams of.***

*- Lord Tennyson*

***When we take one stride towards the Lord, He takes ten strides towards us.***

*- Ramakrishna Paramahamsa*



கூத்தாடும் குஞ்சரம்

(இளையாற்றாங்குடி கைலாசநாதர் கோயில்)

நன்றி: இணையற்ற இளையாற்றங்குடி

## இணைப்பு 1
## கரங்களில் காணப்பெறுபவை






1. **அங்குசம்** — யானையை அடக்கப் பயன்படுவது. இரும்பாலானது. இதுவும் பாசமுமே விநாயகரின் தலையாய படைக்கலங்களாகக் கருதப் பெறுகின்றன.

2. **அம்பு** — இரும்பாலான கூரிய நுனியையும், கழுகின் இறகு கட்டப் பெற்ற வால் பகுதியையும் கொண்டது. வில்லை வளைத்து எய்யப் பெறுவதற்கு இது பயன்படுகிறது. பிறைச் சந்திரன் போன்ற நுனியும் உண்டு; அதனைப் பிறையம்பு என்பர். அம்பின் நுனி நச்சூட்டப் பெற்றுப் பகைவர்களைக் கொல்லப் பயன்படுத்தப்படுவது உண்டு.



3. **அக்ஷமாலை** — உருத்திராக்ஷ மாலை. குறிப்பாகக் கலைமகள், தக்ஷிணாமூர்த்தி ஆகியோர் கைகளில் இதைக் காணலாம். மிகப் பழைய திருவுருவங்களில் ஓர் ஆயுதம் போல் இது காணப்பெற்றதும் உண்டு.



4. **கட்டுவாங்கம்** — நீளமான கத்தி. போரில் படைகளை வெட்டப் பயன்படுவது. பழங்கால மன்னர்கள் இடுப்பில் தரித்திருந்தனர். குத்துக்கத்தியாகவும் இருப்பது உண்டு.




5. **கதை** — குண்டாந்தடி. பகைவர்களை அடித்து நொறுக்கப் பயன்படுவது. கையை விட்டு அகலாதிருந்து, உடையவனைப் பாதுகாப்பது.

6. **கத்தி** — இந்தக் குத்துக்கத்தியைப் பிச்சுவா என்றும் சொல்வர்.

7. **கமண்டலம்** (a vessel for holding water, used by ascetics) — கமண்டலு என்றும் சொல்வார்கள். நீர் வைத்துக்கொள்ளும் கலம். ஒரு வகையான மரத்தின் காயால் செய்யப்பெறுகிறது.




8. **கரும்புவில்** — கரும்பால் செய்யப்பெற்ற வில். சிறப்பாக மன்மதனுக்கு உரியது. குறிப்பாகக் காமாட்சியின் கையில் இதைக் காணலாம்.

9. **குந்தாலி** (pick-axe with one prong) — நிலப்பாறைகளை உடைக்கப் பயன்படுவது.



10. **கேடகம்** (Shield) — எதிரி வாளால் தாக்கும்போது அதைத் தடுக்கப் பயன்படுவது இது. பலகையாலோ, காட்டெருமை (wild buffalo), கடமா (bison, wild cow), நீர்யானை (hippopotamus), காண்டாமிருகம் (rhinoceros) ஆகியவற்றின் வலுவான தோலாலோ அமைக்கப் பெற்றிருக்கும். வட்டம், சதுரம் எனப் பல வடிவங்களில் இது அமைந்திருக்கும்.




11. **கொடி** — வெற்றிக்கு அடையாளம் (வெற்றிச் சின்னம்). துணியால் செய்யப்பெறும் இதில் அடையாளச் சின்னங்கள் காணப்பெறும்.

12. **கோடரி** (axe) — கோடாரி என்றும் சொல்லப்பெறும் இது, பகைவரின் உடலைப் பிளக்கப் பயன்படுத்தப் பெறுகிறது.

13. **சக்கரம்** — திருமாலுக்கு உரிய இந்தச் சக்கராயுதம் விநாயகரின் படைக்கலமாகவும் விளங்குகிறது. இது தேர் உருளை போன்றும், வளையம் போன்றும் இரு வகையாக அமைந்திருக்கும்.




14. **சக்தி** — ஆறு கூரிய பகுதிகளை உடைய வேல். தகட்டு வடிவாயிருக்கும். இதனை நடுவில் பிடித்து எதிரிகளை நோக்கி எறிவர்.

15. **சங்கம்** (conch) — பாஞ்சசன்னியம் என்னும் பெயரில் சிறப்பாக விஷ்ணுவுக்கு உரிய சங்கு. போரின் தொடக்கத்தில் ஒலிக்கும் சங்கநாதம், வெற்றியை அறிவிக்கப் பயன்படுகிறது.

16. **சம்மட்டி** — இரும்பினாலான கனமான தலைப்பகுதியைக் கொண்டது இது. நடுவில் தொளை இடப்பெற்றிருக்கும். அதில் கையால் பிடிப்பதற்கான சிறு கழி இணைக்கப்பெற்றிருக்கும்.




17. **சாமரம்** — கவரிமானின் வால் மயிரால் உருவான விசிறி. (Chowrie or bushy tail of the kavari-maan, set in decorated handle used as a fly-flap or fan before an idol.)

18. **சூலம்** — மூன்று இலைகளை உடைய இது (திரிசூலம்), சிறப்பாகச் சிவபெருமானுக்கு உரியது.




19. **தந்தம்** — ஒடிந்த யானைக் கொம்பு. கயமுகாசுரனை அழிக்கவும், பாரதம் எழுதவும் பயன்பட்டதாகச் சொல்வர்.

20. **தண்டம்** (club) — நீளமான கைத்தடி. மரத்தாலானது.

21. **தீ அகல்** — தீப்பிழம்பு.

22. **நாகபாசம்** — பாச வகைகளில் ஒன்று. (A kind of serpentine magical noose.)

23. **பரசு** — மழு மாதிரியாகவே அமைந்ததுதான் இதுவும். ஆனால் மழுவின் வெட்டுவாய் சதுரமாக இருக்கும். இதன் வெட்டுவாய் சற்று வளைந்து கூராக இருக்கும்.

24. **பாசம்** — கயிறு. எதிரிகளின் கைகளையும் கால்களையும் கட்டப் பயன்படுவது.

25. **மலரம்பு** — தாமரை, அசோகு, மா, முல்லை, நீலம் என்னும் ஐந்து மலர்களால் இயன்ற பாணம். உயிர்களிடத்தில் காம உணர்ச்சியை ஊட்ட மன்மதன் இதைப் பயன்படுத்துவதாகக் கருதப் பெறுவது.

26. **மழு** — எறி என்னும் பெயருடன் மரங்களை வெட்டப் பயன்படுவது. மிகக் கூர்மையானது. இதுவும் சிவபெருமானுக்கு உரிய கருவியே.

27. **வில்** — மூங்கில் அல்லது வளையக்கூடிய நார் மரத்தால் செய்யப் பெற்றது. இதன் இரு தலைப்புறங்களிலும் தோல் அல்லது நார்க் கயிற்றாலான நாண் கட்டப்பெற்றிருக்கும். வில்லை வளைத்து நாணை இறுகக் கட்டி அம்பு எய்வர்.

28. **வீணை** — இசைக்கருவி. போர்க்காலங்களில் சோர்வுற்றிருக்கும் வீரர்களுக்கு உற்சாகமூட்டப் பயன்படுத்தப்பட்டதாம்.

29. **வேதாளம்** — இதனை ஏவிப் பகைவர்களை விழுங்கச் செய்வர்.




*நன்றி: கணபதி வரலாறு*

**<u>இணைப்பு 2</u>**
**<u>தேங்காய் மரபு, வாழைப்பழத் தத்துவம்:</u>**



விநாயகர் வழிபாட்டில் தேங்காய் உடைப்பது முக்கிமானதோர் இடத்தை வகிக்கிறது. அதன் சிறப்பு என்ன? தத்துவம் யாது?

'எண்சாண் உடம்புக்கு சிரசே பிரதானம்' என்பார்கள். அத்தகைய சிரத்தையே (தலையையே) 'பலி கொடு' என்று விநாயகர், தம் அப்பாவிடம் கேட்டு விட்டாராம். அதாவது உடலுக்கு உயிர் நாடியான தலையையே தமக்கு அர்ப்பணிக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார் என்பது பொருள். அதை நிறைவேற்றுவதற்காகத்தான், ஈஸ்வரனின் மூன்று கண்களைப் போன்று, இயற்கையிலேயே மூன்று கண்களைக் கொண்டிருக்கும் தேங்காயை, சூறைத் தேங்காயாக விநாயகருக்கு முன் உடைக்கிறோம்.

வறுமை வாய்ப்பட்ட குழந்தைகள் நிறைந்த தமிழ்நாடு போன்ற பகுதிகளில் இவ்வாறு உடைக்கப்பெறும் தேங்காய்த் துண்டுகள், அக்குழந்தைகளுக்கு விருப்பமான உணவாக அமைகின்றன. ஆகவே அங்கு எத்தனை தேங்காய்கள் உடைத்தாலும் அவை யாவும் குழந்தைகளுக்கு உணவாகி விடுகின்றன. ஆனால் அதற்கு மாறான நிலையில் உள்ள நம் நாட்டில் உடைக்கப்பெறும் தேங்காய்த் துண்டுகளைப் பொறுக்க

யாருமில்லை; அவை யாவும் வியாபாரிகளையே சென்றடைகின்றன. மேலும் தைப்பூசம், பங்குனி உத்திரம் போன்ற விழாக்களின்போது வீதிகளில் ஆயிரக் கணக்கில் உடைக்கப்பெறும் தேங்காய்களின் சிதறல்களை அப்புறப்படுத்தக் கட்டணம் செலுத்த வேண்டிய அவலநிலையும் ஏற்படுகிறது. (இவ்வாறு நேர்த்திக்கடனாக உடைக்கப்பெறும் தேங்காய்களின் சிதறல்களைச் சீன சமூகத்தவர் தொடக்கூட மாட்டார்கள்!) எனவே நேர்த்திக்கடனாக ஓரிரு தேங்காய்களை உடைத்துவிட்டு மீதமுள்ள பணத்தை உண்டியலில் செலுத்தினால், கோயில் பராமரிப்புக்கு அது பயன்படுமே! தமிழர் சமுதாயம் சிந்திக்க வேண்டும்.

அவ்வாறு உடைக்கும் தேங்காய் குறைந்தது மூன்று துண்டுகளாகவாவது உடைய வேண்டும் என்று பெரியவர்கள் கூறுகின்றனர். அவ்வாறு உடைப்பதற்குச் சிறிது வலிமையும் தேவை. பெண்கள் கையை உயர்த்தி வலுவாகத் தேங்காயை உடைத்தால், அவர்களது கர்ப்பப்பை பாதிப்படைய வாய்ப்பிருக்கிறது என்பதாலேயே, பெண்கள் சிதர்தேங்காய் உடைப்பதில்லை என்னும் ஒரு மரபு நிலவுகிறது. (உடல் நலத்தைக் கருத்தில் கொண்டுதான் இம்முறை ஏற்பட்டதே தவிர, இதில் **ஆணாதிக்கம்** என்பதற்கே இடமில்லை!). ஆனால் பெண்ணுரிமை பேசும் இக்காலத்தில் 'நாங்களும் தேங்காய் உடைப்போம்' என்று அவர்கள் போர்க்கொடி தூக்கினால் அதைத் தடுக்க யாரால் இயலும்? (ஆலய வழிபாட்டு முறைகளை நன்கு அறிந்தவர்களான - பிறருக்கு வழிகாட்டியாக அமைய வேண்டிய ஆலய அர்ச்சகர்களே தங்கள் மனைவியர், (பெண்)பிள்ளைகளிடம் தேங்காயைக் கொடுத்து உடைக்கச் சொல்வதைக் கண்ணுறும்போது, கண் கலங்குவதைத் தடுக்க இயலவில்லை)

தேங்காய், இறைவனின் முக்கண்களைப் போன்று மூன்று கண்களைக் கொண்டிருக்கிறது என்று சொன்னோம். ஆனால் தேங்காயின் குடுமிப் பகுதியில் உள்ள அந்த முக்கண்களில் சூடத்தைக் கொளுத்தி ஆரத்தி செய்து தேங்காய் உடைப்பது எத்தகைய அபசாரம்? எவ்வளவு பெரிய கொடுமை?

உண்மைகளை உணராமல், மற்றவர்கள் சொல்வதைக் கேட்டோ, பார்த்தோ, தவறான வழியில் வழிபாடு செய்வது, குளிக்கச் சென்று சேற்றைப் பூசிக்கொண்ட கதையாகத்தான் முடியும். சமய அன்பர்கள் சிறிதளவாவது சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இது போன்றே, திருக்கோயில்களில் சந்நிதிதோறும் வீழ்ந்து வணங்கலாகாது என்றும், கொடிமரம் அல்லது பலிபீடத்தின் முன்பாக மட்டுமே, வடக்கு நோக்கித் தலை வைத்து வீழ்ந்து வணங்க வேண்டும் என்றும் விதிக்கப்பெற்றிருக்கிறது. விநாயகரை மட்டுமே வழிபடும் பக்தராக இருந்தாலும், அவரும், சிவாலயம் அல்லது வேறு எந்தக் கோயிலாக இருந்தாலும், கொடிமரம் அல்லது பலிபீடத்தின் முன்னர் மட்டுமே வீழ்ந்து வணங்க வேண்டும். (இது குறித்த மேலும் சில தகவல்கள் **இணைப்பு நான்கில்** (வணக்கத்திற்கு உரியவன் இறைவன் ஒருவனே) இடம் பெறுகின்றன)

**<u>வாழைப்பழத் தத்துவம்:</u>**



இறை வழிபாட்டில் இடம்பெறும் வாழைப்பழம் குறித்து, *ஸ்ரீ லயன் சித்தி விநாயகர் கோயில் குடமுழுக்கு விழா மலர்* குறிப்பிடும் தத்துவக் கருத்து வருமாறு:

மற்ற பழங்களின் கொட்டைகள் அந்தந்தத் தாவரத்தின் இனப்பெருக்கத்திற்கு வழி வகுக்கின்றன. ஆனால் வாழைப்பழத்தை அப்படியே அல்லது தோல் உரித்த நிலையில் போட்டால், அது முளைப்பதில்லை. இது, மனித இனத்தின் மறு பிறவியற்ற நிலையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். காரைக்கால் அம்மை கோரியது போன்று, **மீண்டும் பிறவாமை வேண்டும்** என்று அடியார்கள் இறைவனை இறைஞ்சுவதன் அடையாளமாகவே, வாழைப்பழம் இறைவனுக்கு நிவேதிக்கப் பெறுகிறது.

**பிரமாணியுடன் ஆனந்த நடனமாடும் ஆனைமுகன்**

(9ஆம் நூற்றாண்டு ராஜஸ்தான் சிற்பம்)



**நிருத்த கணபதி**

(ஹலபேடு ஹொய்ஸலேசுவரர் கோயில் -
12ஆம் நூற்றாண்டுச் சிற்பம்

(நன்றி: *Nataraja in Art, Thought and Literature*)



**தந்தையின் ஊர்த்துவத் தாண்டவத்தைக் கண்டு மகிழும் கணேசர்**

(தும்பிக்கை தொலைந்துபோய் விட்டதா?)

(11ஆம் நூற்றாண்டு சாளுக்கியர் காலச் சிற்பம்)

(நன்றி: *Nataraja in Art, Thought and Literature*)

## இணைப்பு 3
## மங்களாரம்பம்

**பிள்ளையார் சுழி** என்னும் பெயரில், பொருள் பொதிந்த ஒரு **மங்களாரம்பம்** (மங்களமான தொடக்கம்), தமிழைத் தவிர, சமஸ்கிருதம் உட்பட வேறு எந்த மொழியிலும் கிடையாது. இது தமிழுக்குக் கிடைத்துள்ள பெரும் பேறு *(-காஞ்சிப் பெரியவர்)*

வேதம் ஓதுவோர் **ஓம்** என்றே தொடங்குவது, முன்னர் வழக்கமாக இருந்தது. அந்த ஓங்காரம் தமிழ்நாட்டில் **பிள்ளையார் சுழி**யாக மாறிச் சுருங்கிப், பழைய வழக்கில் சாசனங்கள் முதலியவற்றின் முதலிலும் இறுதியிலும் எழுதப் பெற்றது. *(- ஞானியாரடிகள்)*

விநாயகரை நினைத்து வழிபட்ட பின்னரே ஒரு செயலைத் தொடங்குகின்றோம் என்பதையே இது குறிக்கிறது.

சமய ரீதியாக இவ்வாறு கூறப்பெற்றாலும், பண்டைக் காலத்தில் இந்த உ (**பிள்ளையார் சுழி**) ஒரு குறிக்கோளுக்காகவே எழுதப்பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது.

காகிதம், அச்சு ஆகியவை நடைமுறைக்கு வருவதற்கு முன்னர், பாரத மண்ணில், சாசனங்கள் முதலியவை முதலில் கல்லில் பொறிக்கப் பெற்றன. பின்னர் பனையோலையும், எழுத்தாணியும் பயன்படுத்தப்பெற்றன. எழுத்தாணியின் கூர்மையைச் சோதிக்கவும், பனையோலை எழுதுவதற்குரிய பதமாக இருக்கிறதா என்பதை அறியவும், எழுத்தாணியால் பனையோலையில் முதலில் உ என்று எழுதினார்கள்.

வட்டம், நேர்கோடு ஆகிய இரண்டுமே எல்லா எழுத்துகளுக்கும் அடிப்படையாக உள்ளன. அந்த இரண்டும் இணைந்த ஓரெழுத்து உ. எழுத்தாணியால் பனையோலையில் உ என்று எழுதும்போது, எழுத்தாணி, ஓலை ஆகிய இரண்டும் முறையாகச் சோதிக்கப் பெற்று விடுகின்றன.

இந்தச் சோதனை முறை பின்னர் சமய அடிப்படையில், பிள்ளையார் சுழியாக, எதையும் எழுதுமுன்னர் மேற்கொள்ளும் விநாயக வழிபாடாக உரு மாறியது.

இந்த உ என்னும் எழுத்து, ெ, — என்னும் இரு உறுப்புகளைக் கொண்டிருக்கிறது. இவற்றில் ெ என்பதைக் **கொம்பு** என்று சொல்வது வழக்கம்; — இது கோடு; இந்தக் **கொம்பு,** கோடு என்னும் இரு சொற்களுக்குமே **தந்தம்** (tusk of an elephant) என்னும் பொருள் உண்டு. **ஒற்றைக் கொம்பன்,** ஒரு **கோட்டன்** என்று அருளாளர்கள் விநாயகரைப் பாடியுள்ளனர். இதன்வழி, இந்த எழுத்துக்கும், விநாயகருக்கும் உள்ள அணுக்கமான தொடர்பு தெளிவாகிறது.

இந்த எழுத்தை முதலில் எழுதும்போது, இதனைப் **பிள்ளையார் சுழி** என்றே கூறுவது மரபாக இருந்து வருகிறது. ஆனால் இந்நாளில் உ என்னும் உச்சரிப்பு முறையிலேயே அதனைச் சொல்லி வருகின்றனர்.

**'ஈசனாகிய சிவபெருமானைக் கொண்டு உலகத்தை மறைக்க வேண்டும்'**; அதாவது, உலகத்தைச் சிவபெருமானை விட்டு வேறாகப் பார்க்காமல், 'உலகம் சிவமயம், சிவனைத் தவிர வேறில்லை' என்று காண வேண்டும் என்று **ஈசாவாஸ்ய உபநிடதத்தில்** கூறப்பெறுகிறது.

'எல்லாவற்றையும் உலகமாகவே காண்போருக்குச் சிவமில்லை; எல்லாவற்றையும் சிவமாகவே காண்போருக்கு உலகம் இல்லை' என்பது இதன் உட்கருத்து.

இந்த அடிப்படையில் **பிள்ளையார் சுழி, சிவமயம்** என்பதை, **ஊனா சிவமயம்** என்று உச்சரித்து, உலகே **சிவமயம்** என்று அதற்குச் சமத்காரமாகப் பொருளும் கூறிவிடுகின்றனர். பாராட்ட வேண்டிய பதில்தான் என்றாலும், பண்டைய மரபு பிறழ்ந்து விடுகிறது என்பதை மறந்துவிடக்கூடாது. பழைய மரபுப்படி **பிள்ளையார் சுழி, சிவமயம்** என்றே கூறுங்கள்; அப்போதுதான் மரபு நிலைக்கும்.

மேலும், உ சிவமயம் ஆகிய இரண்டையும் ஒரே வரியாக எழுதாமல், ஒன்றின் கீழ் ஒன்றாக

உ
**சிவமயம்**

என்று எழுதுவதுதான் முறையானது என்பதையும் நினைவிற் கொள்வது அவசியமாகும்.

## இணைப்பு 4
## வணக்கத்திற்கு உ ரியவன் இறைவன் ஒருவனே



இறைவனைக் கை கூப்பி வணங்கும்போது, இரு உள்ளங்கைகளையும் ஒன்றாகச் சேர்த்து, இடக்கட்டைவிரல் வலக்கை மீதும், வலக்கட்டைவிரல் இடக்கை மீதும் வருமாறு வைத்து வணங்குவதுதான் வணக்க முத்திரையாகும்.

திருக்கோயிலினுள் இறைவன் ஒருவனே நம் வணக்கத்திற்கு உரியவன்; அங்கு இறைவனை மட்டுமே வணங்க வேண்டுமே தவிர, (மனிதர்கள்) ஒருவரையொருவர் வணங்கிக் கொள்ளக்கூடாது.

கோயிலினுள் பிராகாரம் வந்து முடித்த பின்னர், கொடிமரத்தைத் தாண்டி, மூலவருக்குப் பக்கவாட்டமாகக் கீழே விழுந்து வணங்க வேண்டும். அதற்குப் **பிரதக்ஷிண நமஸ்காரம்** என்றே பெயர் உண்டு. அதைத் தவிர வேறு எந்த சந்நிதியிலும் கீழே விழுந்து **சாஷ்டாங்க நமஸ்காரம்** (prostration by touching ground with the eight limbs) செய்யலாகாது. (ஆண்கள் எட்டு உறுப்பு, தொடர்ந்து ஐந்து உறுப்பு வணக்கமும், பெண்கள் ஐந்து உறுப்பு வணக்கமும் செய்ய வேண்டும்.) வேரில் ஊற்றும் நீர், மரத்தின் எல்லாக் கிளை-இலைகளையும் சென்றடைந்து விடுவது போன்று, மூலவருக்குச் செய்யும் சாஷ்டாங்க வணக்கமே, எல்லா மூர்த்தங்களுக்கும் சேர்ந்துவிடும். (பிராகாரம் வருவதும், கைகளைக் கூப்பிய வண்ணம், மெதுவாகச் செய்யப்பட வேண்டும்.)

கீழே வீழ்ந்து வணங்குவதற்கும் விதிமுறைகள் உள்ளன. கிழக்கு அல்லது மேற்குப் பார்த்து மூலவர் சந்நிதி (கருவறை) அமைந்திருந்தால், (வடக்கே தலை வைத்து) வடக்கு முகமாகவும், வடக்கு அல்லது தெற்குப் பார்த்த கருவறையாக இருந்தால், (கிழக்கே தலை வைத்து) கிழக்கு முகமாகவும் விழுந்து வணங்க வேண்டும். அதாவது தெற்கு முகமாகவும், மேற்கு முகமாகவும் வீழ்ந்து வணங்கலாகாது. (காஞ்சிப் பெரியவர் கூறும் இக்கருத்துகள் கசக்க மாட்டாவே!)

## இணைப்பு 5
## பக்குவத்திற்கு ஏற்பவே பகவான் அருள்வான்

ஏறத்தாழ கி.பி. ஆறாம் நூற்றாண்டிலிருந்து **ஸ்வஸ்திக் சின்னம்** இந்து-பௌத்த-ஜைன சமயங்களின் புனிதச் சமயச் சின்னமாகத் திகழ்ந்து வருகிறது என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.



பௌத்த சமயத்தின்வழி, தென்கிழக்காசியா, சீனா, கொரியா, ஜப்பான் ஆகிய நாடுகளிலும் இச்சின்னம் முதலாம் ஆயிரமாவது ஆண்டின் (first millennium) இறுதிவாக்கில் இடம் பிடித்துக் கொண்டிருக்கிறது.

பழங்காலச் சீன எழுத்துப்படி (manuscript) ஒன்று, வால்நட்சத்திரத்திலிருந்து வெளியான புகை மண்டலத்தின் வெவ்வேறு இறுதி நிலைகளை வரைந்து காட்டுகிறது. அதில், வால்நட்சத்திரம் நிலத்தை அடையும் நேரத்தில், அதிலிருந்து வெளியான புகை, அந்நட்சத்திரத்தின் சுழற்சி வேகத்தில், ஸ்வஸ்திகா போன்ற பல்வேறு அமைப்புகளில் காணப்பெற்றது சித்திரிக்கப் பெற்றுள்ளது. (தகவல்: Carl Sagan, Comet)

தூமாசுரனை, அவனுடைய படைக்கலமான புகையைக் கொண்டே அழித்தமையால், விநாயகருக்குத் **தூமகேதுமூர்த்தி** என்ற ஒரு பெயரும் உண்டு என்று முன்னர் அறிந்திருக்கிறோம். தூமகேது என்பது வால்நட்சத்திரத்தையே குறிக்கும். அதாவது, வால்நட்சத்திரத்தால் ஏற்படும் அழிவைத் தடுத்து வெற்றிக்கொடி நாட்டியவர் விநாயகர் என்றாகிறது. அவரது ஸ்வஸ்திகா அடையாளம், வால்நட்சத்திரத்தின் புகை மண்டலத்தின் இறுதிநிலையில் வெளியானதாகச் சித்திரித்துள்ளதன்வழி, சீன எழுத்துப்படி, விநாயகருக்கும் ஸ்வஸ்திகா சின்னத்திற்கும் உள்ள இணைப்பைப் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளது என்று கொள்ளலாம்.

ஸ்வஸ்திக் சின்னம் பொறிக்கப்பெற்ற பொருட்கள், 1790ல் Troyயில் மேற்கொள்ளப்பெற்ற அகழ்வாராய்வுகளின்போது அகழ்ந்தெடுக்கப்பெற்றன; வடமொழி வல்லுநர்களான Emile Burnouf, Max Muller ஆகியோருடன் அவை குறித்து ஆலோசித்தபோது, அப்பொருட்களில் காணப்பெறும் ஸ்வஸ்திக் சின்னம், இந்தோ-இரானியரின் (Indo-Iranian, பூர்விக ஆரிய இனத்தின்) சிறப்புக்குரிய சின்னம் என்பது உறுதியாகியது என்று, அகழ்வாராய்வு வல்லுநரான Heinrich Schliemann கூறுகிறார்.



முதலாவது ஆயிரமாவது ஆண்டில் **Gilau**னின் **Kaluraz**ளில் அகழ்ந்தெடுக்கப்பெற்ற இரானியப் பெண்களின் கழுத்தணி.

"வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஆரிய இனம்தான், புதிய ஜெர்மானியரின் பூர்வீகம்; ஆகையால் உலகம் முழுவதும் அவர்களுக்கு அடிமைப்படவேண்டும் என்பதுதான் ஆண்டவன் கட்டளை; அதுதான் தலைவிதி" என்று இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில், தேசிய சோஷலிஸ ஜெர்மன் உழைப்பாளர் கட்சி உறுமியது: ஸ்வஸ்திகாவைத் தனக்குரிய சின்னமாக்கிக் கொண்டது. அதன்வழி இந்து-பௌத்த-ஜைன சமயங்களின் புனிதச் சமயச் சின்னமாகத் திகழ்ந்து வந்த ஸ்வஸ்திகா சின்னாபின்னமாகிப், போர்ச்சின்னமாக - வெறியர்களின் அழிவுச் சின்னமாகத் தடம் புரண்டது.

மேற்கத்திய மக்கள், அப்புனிதச் சமயச் சின்னத்தை, ஜெர்மானிய நாஸிக் கட்சியின் (Nazi Party's) நாசகாரச் சின்னத்தோடு இணைத்துக் குழம்பலாயினர்.

உண்மையில், ஹிட்லர் பயன்படுத்தியது, ஸ்வஸ்திகாவின் கூர், மேல் நோக்கி வரும் வகையில் நகர்த்தப்பெற்ற **பிரயோக ஸ்வஸ்திகா**. அதாவது, தீயோரை அழிக்க இறைவன் படைக்கலத்தைக் கைக்கொள்ளும் முறையில், அவர்களின் சின்னம் அமைந்திருந்தது.

அச்சின்னத்தின் உதவியால் உலகத்தைக் கட்டியாள ஹிட்லர் கண்ட கனவை, கடவுள் சிதைத்து விட்டார். **வரம் கோரும் பக்தரின் மனபரிபாகத்திற்கு ஏற்பவே இறைவன் அருள் பாலிப்பான்** என்பதை, நாசகார ஹிட்லரின் அழிவு புலப்படுத்திவிட்டது.



*As a man behaves, so does he become;*
*A man of good deeds becomes good,*
*A man of evil deeds becomes evil.*
*After death he goes to the next world*
*bearing in his mind*
*The subtle impressions of his deeds.*

*- Brihadaranyaka Upanishad*

உயிர்கள் பல்வேறு பிறவிகளை எடுத்துக் கடைசியில் நிறைநிலையை அடைகின்றன என்பது மறுபிறவிக் கோட்பாடு. வாழும் காலத்தில் எத்தகைய செயல்களைச் செய்கிறோமோ, என்னென்ன அனுபவங்களைப் பெறுகிறோமோ, அவற்றுக்கு ஏற்பவே அடுத்த பிறவி அமைகிறது. எனவே எதைச் செய்கிறோம் என்பதில் மிகுந்த எச்சரிக்கையாக இருக்கவேண்டும்; எத்தகைய எண்ணங்களை மனத்தில் நினைக்கிறோம் என்பதிலும் கவனம் செலுத்த வேண்டும். ஏனெனில் எண்ணங்களே செயலாக உருவெடுக்கின்றன.

*- சுவாமி ஆசுதோஷானந்தர்*

## இணைப்பு 6
## கணபதி திருமேனி விளக்கம்




நன்றி: *விநாயகர் ஞானமும் விஞ்ஞானமும்*



பூந்தி (confection) அலங்காரத்தில்

**ஸ்ரீ மஹா வல்லப கணபதி**

(நியூயார்க், அமெரிக்கா)

(நன்றி: திருமதி சரோஜா ராமநாதன்)



நிருத்த கணபதி
(10ஆம் நூற்றாண்டுச் சிற்பம்)

(நன்றி: *Nataraja in Art, Thought and Literature*)



உ
சிவமயம்
ஓம் கம் கணபதயே நம:

# சிந்தையைத் திகைப்பியாதே எந்தை-நீ அருளிச் செய்யாய்

(என் சிந்தனை திகைப்புறாவண்ணம்
நீ எனக்கு அருள்புரிவாயாக!)

சுலோகங்கள், பாடல்களின் தலைப்புகள் (அகர வரிசையில்) பக்கம்

*சமஸ்கிருத சுலோகங்கள், அருச்சனைத் தொடர்கள்*



*தமிழ் வழிபாடு*

| சுலோகங்கள், பாடல்களின் தலைப்புகள் (அகர வரிசையில்) | பக்கம் |
|---|---|

| சுலோகங்கள், பாடல்களின் தலைப்புகள் (அகர வரிசையில்) | பக்கம் |
|---|---|




***Secularism means that persons of various religions will all be treated justly and without any discrimination based on religious differences. Justice to the minority groups does not mean injustice to the majority.***

*- C. Rajagopalachari*

உ
சிவமயம்
ஓம் கம் கணபதயே நம:

# குறுந்தட்டு (MP 3)
# உள்ளீடு

| Track | தலைப்பு | குரல் | கால அளவு |
|---|---|---|---|
| 1 | கணாநாம்த்வா<br>வெற்றிகளின் முதற்பொருளே<br>சுக்லாம் பரதரம்<br><br>ஐந்து கரத்தனை | <br>இளையராஜா<br>வி. இராமச்சந்திரன்<br>ஆர். ஸ்ரீராம்<br>திருஞானசம்பந்தம் | 3'04" |
| 2 | விடியலில் விநாயகர் வழிபாடு | திருஞானசம்பந்தம்<br>வி. இராமச்சந்திரன் | 2'31" |
| 3 | மானசீக வழிபாடு | எஸ். ராஜா சிவம் | 5'04" |
| 4 | வடமொழி அர்ச்சனைத் தொடர்கள் | வை.சுவாமிநாதக் குருக்கள் | 1'42" |
| 5 | தூர்வாயுக்ம அர்ச்சனை | ஆர். ஸ்ரீராம்<br>வி.இராமச்சந்திரன் | 2'55" |
| 6 | கணேச பஞ்சரத்னம் | வி.இராமச்சந்திரன்<br>சுபாஷிணி ஸ்ரீராம் | 2'34" |
| 7 | கணேச புஜங்கம் | ஆர். ஸ்ரீராம் | 3'33" |
| 8 | கணாஷ்டகம் - 1 | வை.சுவாமிநாதக் குருக்கள் | 2'03" |
| 9 | கணாஷ்டகம் - 2 | ஆர். ஸ்ரீராம்<br>சுபாஷிணி ஸ்ரீராம் | 4'27" |
| 10 | சங்கடநாசன கணேச ஸ்தோத்திரம் | எஸ். ராஜா சிவம் | 1'25" |
| 11 | கணேச மந்திரங்கள் | காயத்ரி ஆறுமுகம் | 8'00" |
| 12 | பாராயண சுலோகங்கள் | எஸ். ராஜா சிவம் | 3'32" |
| 13 | மகா கணபதி மங்கள<br>மாலிகா ஸ்தோத்திரம் | வி.இராமச்சந்திரன் | 3'11" |
| 14 | தமிழில் அர்ச்சனைத் தொடர்கள் | திருஞானசம்பந்தம் | 9'47" |

| Track | தலைப்பு | குரல் | கால அளவு |
|---|---|---|---|
| 15 | தோத்திரங்களில் தொப்பையப்பன் (திருமுறைப் பாடல்கள்) | என். சுவாமிநாதன் | 51'14" |
| 16 | சாத்திரங்களில் சங்கரிபுத்திரன் | திருஞானசம்பந்தம் | 2'45" |
| 17 | அருணகிரி அடிபணியும் ஆனைமுகன் (திருப்புகழ்ப் பாடல்கள்) | என். சுவாமிநாதன் | 9'01" |
| 18 | குருபரர் கும்பிடும் குஞ்சரம் (குமரகுருபரர் பாடல்கள்) | திருஞானசம்பந்தம் | 3'09" |
| 19 | வள்ளலார் வழிபடும் வாரணம் (இராமலிங்க சுவாமிகள் பாடல்கள்) | என். சுவாமிநாதன் | 5'32" |
| 20 | ஔவை அருளிய அகவல் (விநாயகர் அகவல்) | திருஞானசம்பந்தம் | 6'25" |
| 21 | பிள்ளைப் பெருவயிற்றோன் (பிள்ளைத்தமிழ்ப் பாடல்கள்) | என். சுவாமிநாதன்<br>திருஞானசம்பந்தம் | 11'49" |
| 22 | கணேசர் காக்கட்டும் (விநாயக கவசம்) | என். சுவாமிநாதன் | 7'31" |
| 23 | தோத்திராட்டகம் | திருஞானசம்பந்தம் | 11'22" |
| 24 | புராணங்களில் புகர்முகத்தோன் | திருஞானசம்பந்தம்<br>என். சுவாமிநாதன் | 18'58" |
| 25 | ஆறுபடை வீடுகள் | என். சுவாமிநாதன் | 16'25" |
| 26 | பக்தி நூல்களில் பாசாங்குசதரன் ஆதிசங்கரர் அஞ்சலி (தமிழில் கணேச பஞ்சரத்னம்) | என். சுவாமிநாதன் | 18'47" |
| 27 | திருமேனித் திருப்பாடல்கள் | திருஞானசம்பந்தம்<br>என். சுவாமிநாதன் | 43'40" |
| 28 | வழிபாடு நிறைவு | என். சுவாமிநாதன்<br>திருஞானசம்பந்தம் | 5'00" |



உ

# Universal Prayer

O Adorable Lord of Mercy and Love!
Salutations and prostrations unto Thee.
Thou art Omnipresent, Omnipotent and Omniscient.
Thou art the indweller of all beings.

Grant us an understanding heart,
Equal vision, balanced mind,
Faith, devotion and wisdom.

Let us behold Thee in all these names and forms.
Let us serve Thee in all these names and forms.
Let us ever remember Thee.
Let us ever sing Thy glories.
Let Thy name be ever on our lips.
Let us abide in Thee for ever and ever.
Aum Aum Aum

